ஜூன். பாரங்கள் 61–74.

ஸ்ரீ:.

மயர்வற மதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்கள் அருளிச்செய்த

# முதலாயிரம்

## மூலமும்

இதற்கு

பெரியவாச்சான் பிள்ளை, பெரியஜீயர் அருளிச்செய்த

## வ்யாக்யாநமும்

அந்த வ்யாக்யாநத்தை யநுஸரித் தெழுதப்பட்ட

ப்ரதிபத வ்யாக்யாநமும்,

பல ப்ரதிகளுக்கிணங்க பண்டிதர்களால்
பரிசோதிக்கப்பட்டு

ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாய ஸஞ்ஜீவினீ ஸபையாரால்
ஸ்ரீஸுதர்சன முத்ராக்ஷரசாலையில்
அச்சிடப்பட்டன.

காஞ்சீபுரம்.

1909

ஸந்தா தாரர்களுக்கு விலை ரூபாய் 10.

ஸஞ்சிகை—6

பின்னிட்டு வாங்குகிற வர்களுக்கு ரூபாய் 15.

ஸ்ரீரஸ்து.

மயர்வற மதிநல மருளப்பெற்ற ஆழ்வார்கள் அருளிச்செய்த

# முதலாயிரத்தில்

முதல் ப்ரபந்தமாகிய ஸ்ரீ பெரியாழ்வார் அருளிச்செய்த

## பெரியாழ்வார் திருமொழி.

இதற்கு

பெரியவாச்சான் பிள்ளை, பெரியஜீயர் அருளிச்செய்த

## வ்யாக்யாநமும்

அந்த வ்யாக்யாநத்தை அநுஸரித் தெழுதப்பட்ட

ப்ரதிபத வ்யாக்யாநமும்,

பல ப்ரதிகளுக்கிணங்க பண்டிதர்களால்
பரிசோதிக்கப்பட்டு

ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாய ஸஞ்ஜீவிநீ ஸபையாரால்
ஸ்ரீஸுதர்சந முத்ராக்ஷரசாலையில்
அச்சிடப்பட்டன.

காஞ்சீபுரம்.

1909

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

# பெரியாழ்வார் திருமொழிச் செய்யுளகராதி.

கட்டிவைக்க, இப்படி நிர்ணீதமான அர்த்த தத்த்வத்தை வடபெருங்கோயிலுடையானுடைய ஆஜ்ஞையாலே ஆதரித்துக்கொண்டு வரவேணுமென்கிற அபேக்ஷையுடையராய், வித்வத்கோஷ்டியிலே சென்று; ( ஸமஸ்த - வேத - ப்ரமாண ) "வேண்டிய வேதங்க ளோதி விரைந்து கிழியறுத்தான்" என்றதைச் சொல்லுகிறது. இவர்க்கு அப்போது * வேதப்பிரானான * பீதகவாடைப் பிரானார்தாமே பிரமகுருவாய், * போதில் கமல வன்னெஞ்சம் புகுந்து * என்னுளனாய் * என்னுள் நின்று மலரும் ஞானக்கலைகளை இவர் முகேந பேசுவித்தானிறே. * எயிற்றிடை மண்கொண்ட வெந்தையான * ஞானப்பிரானுந்து இவரை * ஞானக்கலைகளை போதுவித்தது. ஆகையாலே நாட்டார்க்கு ஒழிவிடமொழிந்து ஒதாதவிடம் தெரியாதிருக்கும். இவர்க்கு * மயர்வறமதிநல மருளுகையாலே அசேஷவேதங்களை மருளிச்செய்யும்படி விசதமாய்த்து. அத்தாலே "வேதாந்த விழுப்பொருளின்மேலிருந்த விளக்கை விட்டுசித்தன் விரித்தனன்" என்னும்படி பரதத்வ ஸ்தாபனம்பண்ணி அந்த வேத தாத்பர்யமான திருப்பல்லாண்டை * அங்காவதோர் மங்களவீதி வருகையிலே மங்களாசாஸநமாக வருளிச்செய்தார். "வேதாந்தபோஷிதம்" என்கிறதுக்குள்ளே இதுவும் அந்தர்ப்பூதம். "[illegible]" என்னக்கடவதிறே.

( ஸமாநாம் ) அனந்தரம், வித்வான்களை வென்று கிழியறுத்து அந்த தனத்தை ஸ்வாமி ஸந்நிதியிலே ஸமர்ப்பித்து, மீளவும் தம் நிலையான * துளவத்தொண்டிலே யூன்றி நடத்திக்கொண்டுபோர; அக்காலத்திலே ஆண்டாள் இவர்க்குத் திருமகளாகத் திருத்துழாய்படியிலே யவதரிக்க; இவரும் * திருமகள்போல வளர்த்துப்போர; அஞ்சுபிராயத்திலே திருவாய்ப்பாடியில் பஞ்சலக்ஷம் குடியில் பெண்களை அநுகரித்துத் திருப்பாவை பாடி, அதுக்குமேலே, அவர் * தொடுத்த துழாய் மலரை, "விண்ணுழாய்க்கற்பென்று சூடும் கருங்குழல்மேல்" என்கிறபடியே சூடிக்கொடுத்தவளாய், பின்பு ப்ராப்த யௌவனையாய், * மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழாததன்மையளாய், "திருமுகத்து ணகிலேமேற் சேருந்திருவரங்கர்" என்றும், "பணவாளரவணைப் பற்பலகாலும் பள்ளிகொள்மணவாளர்" என்றும் சொல்லப்படுகிற அழகிய மணவாளப் பெருமாளை ப்ரார்த்தித்துத் திருமணம் புணருகையாலே அவர் மணவாளப் பிள்ளையானார்; * மறைநான்குமுன் னோதிய பட்டனுக்கிறே * பட்டர்பிரான் கோதையைக் கொடுத்தது. ஆகையாலே, ஔபசாரிகமாகவன்றிக்கே, யதார்த்தமாக ஸ்வசுரனுக்கு பட்டநாதர் மாமனாரானார். அத்தாலே (ஸ்ரீ [illegible]) என்கிறது. அதாவது - * வடிவுடைவானோர் தலைவனை தன்னை, அவர்கள் அடிவணங்கி யேத்துமாப்போலே, இவர்தம்மையும் அமரர் வந்திக்கும்படியான வரிசை கொடுத்தபடி. * தம்மையே யொக்க வருள்செய்வரிறே. பட்டநாதரான மாத்ரமன்றிக்கே தேவர்களாலும் ஸ்துத்யராயிருக்குமவரென்கிறது. "விரும்புவ ரமரர் மொய்த்து" என்னக்கடவதிறே. அல்லாதே பயசக்திகளானவர்களையும் இவர் மங்களாசாஸநம் பண்ணுமவராகையாலே, அவர்களும் இவர்க்கு ஸ்துத்யபிவாதனங்களைப் பண்ணுவர்கள். "[illegible]" என்னக்கடவதிறே. இனி ஸ்வசுரநோடே ஸம்பந்திக்கைக்கேயான பட்டநாதருடைய குணத்தைச் சொல்லுகிறது ( [illegible] ) என்று. * வேயர்தங்கள் குலத்துதித்த விட்டுசித்தனாகையாலே, "அந்தணரை மாக்கண்ட தனியீர்த் தென்னரங்கத்தே" என்னும்படி கண்டு கொடுத்தார். தமிழுகுல திலகராகையாலே ப்ராஹ்மணகுலத்துக்கெல்லாம் முக்யராய், பிரதானராய், ச்ரேஷ்டராயிருக்கை யென்றபடி. ( [illegible] )

தால் - ஸ்வரூபப்ரகாசத்தாலல்லது அபிமாநம் போகாமையாலே, இந்தசப்தமும் விழுக்காட்டில் ஸ்வரூபவாசியாகிறது. "நமோ" என்று - எனக்குரியேனல்லேனென்றபடி. இது நிவ்ருத்த ஸ்வாதந்த்ர்யனுடைய வ்யவஹாரம்; இதுவும் ஸ்வரூபப்ரகாசத்தாலல்லது கூடாமையாலே ஸ்வரூப ஸ்பர்சியாகிறது. "நோற்றேனும்" என்கிறது - 'அத்தலையில் வெற்றியே தனக்கு ப்ரயோஜநம்' என்றிருக்குமவனுடைய வ்யவஹாரம்; இதுவும், அஹங்கார நிவ்ருத்தியில்லது ஸம்பவியாமையாலே ஸ்வரூப ஸ்பர்சியாகிறது; "போற்றி" என்று - தன்னைப்பேணாதே அத்தலையில் ஸம்ருத்தியைப்பேணுமவன் வ்யவஹாரம்; இது ஸ்வரூபாநுரூபமிறே. "பல்லாண்டு" என்று - தன்னைப்பாராதே 'அத்தலையில் ஸம்ருத்தியே நித்யமாய்ச் செல்லவேணும்' என்றிருக்குமவன் வ்யவஹாரம். ஆக, இந்த சப்தங்கள் - ஸ்வரூபத்தையும், ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தியையும் ப்ரகாசிப்பிக்கையாலே ஸ்வரூபாநுபந்தியாகிறது.

பல்லாண்டு. மதித்து, "பல்லாண்டு" என்கிறதென்னென்னில்; அகவாயறியாதவனுக்கு, தெரியாமையாலே பலகாற்சொல்லவேண்டியிருக்கும்; ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனும் ஸதிர்குழல்புக்கும் நிற்கிறவனுக்கு இருகாற் சொல்லவேண்டா, இப் புநருக்திக்குப் பொருளென்னென்னில்; அவனுடைய ஸர்வஜ்ஞத்வத்தில் குறையால்ல; 'இருகாற்சொன்னேனும்' என்று ஆவி. பிருக்கப்பட்டாத தம்முடைய ஆதராதிசயத்தாலும், பலகாற் சொல்லுமத்தாலும் பர்யாப்தி பிறவாத விஷயவைலக்ஷண்யத்தாலும் அருளிச்செய்கிறார். த்ருஷார்த்தனானவன் தண்ணீர் பெறுமளவும் 'தண்ணீர், தண்ணீர்' என்னுமாப்போலே, தம்முடைய பயம் சமிக்குமளவும் 'பல்லாண்டு, பல்லாண்டு' என்ன ப்ராப்தமிறே.

பல்லாயிரத்தாண்டு. கீழில் பஹுவசநத்திலே - வர்ஷங்களினுடைய அஸங்க்யாதத்வம் சொல்லியிருக்க, இதுக்கு உபயோகமில்லையே என்னில்; அவச்சேதகங்களுக்கு ஸங்க்யையில்லாமையாலே அவச்சேத்யத்துக்குத் தொகையில்லை; ஆகையாலே அருளிச்செய்கிறார். அவச்சேதகங்களாவன— ஸௌர்ய பரிஸ்பந்தாதிகள்; அவச்சேத்யங்களாவன— க்ஷணலவாதிகள். வர்ஷத்துக்கு அவச்சேதகர் - தேவர்கள்; அத்தைப் பற்றச்சொன்னார் கீழ்; பல வர்ஷத்துக்கு அவச்சேதகன் - ப்ரஹ்மா; அத்தைப்பற்ற வருளிச்செய்கிறார் பல்லாயிரத்தாண்டு என்று.

பலகோடி நூறாயிரம் என்று ப்ரஹ்மாக்களுக்குத் தொகையில்லாமையாலே அருளிச்செய்கிறார். காலக்ருதபரிணாமமில்லாத தேசத்திலுள்ளார்க்கும் ஸ்வரூபத்தை உள்ளபடியும் விஷயவைலக்ஷண்யத்தைப்பற்ற அதிசங்கையும் மங்களாசாஸநமும் நித்யமாய்ச் செல்லாநின்றது; காலக்ருத பரிணாமமுள்ள தேசத்திலே இருக்கிறவர்க்கு அதிசங்கையும் அத்தால் வந்தபயமும், அந்தபயநிவ்ருத்திக்காகக் காலத்தைப்பெருக்கி, இக்காலமுள்ளதனையும் இப்படி மங்களாசாஸநம்பண்ணச் சொல்லவேணுமோ? இப்படி மாறி மாறி பயத்தை விளைத்துக் காலத்தைப்பெருக்கி இதுவே தமக்கு யாத்ரையாய்ச் செல்லாநின்றதே, அவன், 'இவருடைய பயத்தைப் பரிஹரிக்கவேணும்' என்றுபார்த்து, 'புலிகிடந்த தூற்றுக்கு அஞ்சிக்கலங்குகிறவரைப்போலே நீர் நமக்கு அஞ்சக்கடவீரோ? மல்லவர்க்கத்தை நிரஸித்த தோளிருக்கிறபடி பாரீர்!' என்று தோள்வலியைக் காட்டினான்: ராவணாநுஜனைக்குறித்து மஹாராஜர்க்குப் பிறந்தபயத்தைப் போக்குகைக்காகத் தன்பிடிக்கைக்காட்ட, அவர் பயம் சமிக்கக்காணாமையாலே, 'இவ்விஷயத்திலும் பலிக்கும்' என்று பிடிக்கைக்காட்ட, இவர்க்கு

மூ.—வந்தமதலைக் குழாத்தை வலிசெய்து
தந்தக் களிறுபோற் றானே விளையாடும்
நந்தன் மதலைக்கு நன்று மழகிய
உந்தியிருந்தவா காணீரே யொளியிழையீர் வந்து காணீரே. அ

பதவுரை.

வந்த— தன்னோடு விளையாடவந்த
மதலை குழாத்தை— சிறு பிள்ளைகளின் கூட்டத்தை
வலி செய்து— பலாத்கரித்து
தந்த களிறுபோல்— (முளித்த) கொம்பையுடைய ஆனைக்குட்டிபோலே
தானே— தானே (முக்கியனாய்)
விளையாடும்— விளையாடா நிற்கிற
நந்தன் மதலைக்கு— நந்தகோபர்குமாரனான கண்ணனுக்கு
நன்றும் அழகிய— மிகவும் அழகியதான
உந்தி— திருநாபி
இருந்த ஆ— இருக்கிற படியை
காணீர்!— காணுங்கள்!
ஒளி இழையீர்!— காந்தி மிக்க ஆபரணங்களையுடைய பெண்கள்!
வந்துகாணீர்-; (எ அரை.)

வ்யா.—வந்தவித்யாதி. தன்னோடே விளையாடவந்த தன்னோராயிரம் பிள்ளைகளான மதலைக்குழாத்தை, தானும் மதலையாயிருக்கச் செய்தே, அத்தனைபேரும் ஒருதலை, தானொருதலையாகநின்று பலாத்கரித்து, கொம்புமுளைத்த இளவானை போலே தானே ப்ரதானனும் விளையாடும். நந்தனித்யாதி. இப்படி நிர்வாகிக்கச்செய்தே, ஸ்ரீநந்தகோபர் வம்சத்தில் ஸவிஸயமாக வர்த்திக்கும் பிள்ளைத்தனத்தையுடையவனுக்கு. நன்றுமித்யாதி. மிகவும் அழகியதான திருவுந்தி யிருக்கிறபடியைக் காணுங்கோள். ஒளியிழையீர் வந்து காணுங்கோள், இழை- ஆபரணம். ... ... ... ... அ

அ.—ஒன்பதாம்பாட்டு. திருவுந்தியினழகை யநுபவித்த வநந்தரம், திருவுதரத்தினழகை யநுபவிக்கிறார்.

மூ.—அதிரும் கடல்நிற வண்ணனை யாய்ச்சி
மதுர முலையூட்டி வஞ்சித்து வைத்துப்
பதறப் படாமே பழந்தாம்பா லார்த்த
உதர மிருந்தவா காணீரே யொளிவளையீர் வந்து காணீரே. ௯

பதவுரை.

அதிரும் கடல்நிற வண்ணனை— கோஷிக்கிற கடலின் நிறம்போன்ற நிறத்தையுடையவனை
ஆய்ச்சி— திருத்தாயாரான யசோதை
மதுர முலையூட்டி—இனிய முலைப்பாலையூட்டி
வஞ்சித்துவைத்து – வஞ்சனைசெய்துவைத்து
பதறப்படாமே— தன் மிளைவு தப்பாதபடி
பழம் தாம்பால்— பழைய கயிற்றாலே
ஆர்த்த— கட்டின
உதரம்— திருவயிறு
இருந்த ஆ— இருந்தபடியை
காணீர்!— காண்மின்!;
ஒளி வளையீர்! – ஒளிமிக்க வளையல்களையுடைய பெண்காள்!
வந்துகாணீர்!-; (எ - அரை.)

கொண்டு— ஸ்வீகரித்து
வளர்க்கின்ற— வளர்க்கிற
கோவலர் குட்டற்கு— கோபகுமாரனுக்கு
அண்டமும்— அண்டங்களையும்
நாடும்- (அவற்றினுள்ளேயிடக்கிற) சேதநா சேதநங்களையும்

அடங்க— முழுதும்
விழுங்கிய— விழுங்கின (பக்ஷித்த)
கண்டம் – திருக்கழுத்து
இருந்த ஆ— இருந்தபடியை
காணீர்!— காணுங்கள்;
காரிகையீர்!— அழகியபெண்காள்!
வந்துகாணீர்!-; (ஏ - அசை.)

வ்யா. வண்டமரிற்யாதி. பிள்ளைகள் அநுக்ஷணமக்களைத் தாய்மார் தங்களின் பலத்தைக் குளித்துக்கொண்டிருப்பர்களாய்த்து; அப்படியே இவளும் காலபுஷ்பங்களைப்பங்களாலும் முடிக்கையாலே மதுபாநப்பண்ணும் வண்டுகளுக்கு வஸ்தல்யபூமி இவள் குழலிறே. ஆகையாலே வண்டுகள் படிந்துகிடக்கிறபூவோடேகூடின குழலையுடையளான யசோதைப்பிராட்டி தன்மகனாக ஸ்வீகரித்துக்கொண்டு வளர்க்கிற ஸ்ரீநந்தகோபர்மகனுக்கு. இவர் அடியதிக் தனாகையாலே "மகனாகக்கொண்டு" என்கிறார்; அவள், "தன்மகன்" என்றிறே நினைத்திருப்பது.

அண்டமித்யாதி. அண்டத்தையும் அண்டாந்தர்வர்த்திகளான சேதநாசேதநங்களையும் திருவயிற்றில் ஒருபுடையிலே அடங்கும்படி விழுங்கின வென்னுதல்; என்றும் பிறிதாகப்படாதபடி எல்லாவற்றையும் சேரவிழுங்கின வென்னுதல். கண்டமித்யாதி. இப்படி விழுங்கின்ன திருக்கழுத்து வழிறுந்தபடியைக் காணுங்கோள்; அழகையுடையளான நீங்கள் வந்து காணுங்கோள். காரிகையார் - அழகுடையஸ்த்ரீகள். ... ... ௧௯.

அ. பதினாம்பாட்டு. திருக்கழுத்தினழகை பதுபவித்த வனந்தரம் திருப்பவளத்தினழகை பதுபவிக்கிறார்.

௨௦.—என் தொண்டைவாய்ச் சிங்கம் வாவென்றெடுத்துக்கொண்டு
அந்தொண்டைவா யமுதா தரித்தாய்ச்சியர்
தந்தொண்டை வாயாற் றருக்கிப் பருகுமிச்
செந்தொண்டைவாய் வந்துகாணீரே சேயிழையீர் வந்துகாணீரே. ௨௦

பதவுரை.

தொண்டை வாய்— "கொவ்வைக்கனிபோன்ற அதரத்தையுடைய
என் சிங்கம்!— என்னுடைய சிங்கக்குட்டிபோன்ற குமாரனே!
வா என்று— வருக" என்று
எடுத்துக்கொண்டு— ஒக்கலையி லெடுத்துக்கொண்டு
ஆய்ச்சியர்— இடைப்பெண்கள்
அம் தொண்டை – அழகிய கொவ்வைக்கனி போன்ற
வாய்— திருஅதரத்தில் (ஊறுகிற)
அமுது— அம்ருதத்தை

ஆதரித்து— விரும்பி
தம்— தங்களுடைய
தொண்டை வாயால் – கோவை வாயாலே
தருக்கி— செருக்கி
பருகும்— பானம் பண்ணுகிற
இச்செம் தொண்டைவாய்–இந்த சிவந்த கோவைவாயை
வந்துகாணீர்! – வந்துபாருங்கள்;
சேயிழையீர்!–செவ்விய ஆபரணத்தையுடைய பெண்காள்!
வந்துகாணீர்!-; (ஏ - அசை.)

வ்யா. என் தொண்டையித்யாதி. ஆதொண்டைப்பழம்போலே யிருக்கிற திருப்பவளத்தையும் வில்லைக்கன்றுபோலே செருக்கையுமுடையனாயிருக்கிறவிவனை யென்னுடையவனென்று அபிமானித்து வாவென்று அழைத்து எடுத்துக்கொண்டு இடைப்பெண்களெல்லாரும் அழகிய தொண்டைபோலே யிருக்கிற திருவதரத்திலூறுகிற அம்ருதத்தை ஆதரித்துத் தங்கள் கோலையாலே செருக்கிப் பானம்பண்ணுகிறெ. தருக்கிப் பருகுமென்றது - செருக்கிப்பருகு மென்னவுமாம். இச்செந்தொண்டை யித்யாதி. இப்படி அவர்கள் பருகப் பருகப்பின்னையும் சிவப்புமாறாதேயிருக்கிற திருப்பவளத்தை வந்து காணுங்கோள்; சேர்ந்த ஆபரணங்களை யுடைய நீங்கள் வந்து காணுங்கோள். ... ... ... * கஅ.

அ. பதினெட்டாம்பாட்டு. திருப்பவளத்தி னழகை யநுபவித்த வனந்தரம் திருமுக மண்டலத்தின் அழகாய சோபையை யநுபவிக்கிறார்.

மூ.—நோக்கி யசோதை நுணுக்கிய மஞ்சளால்
நாக்குவழித்து நீராட்டு மிந்நம்பிக்கு
வாக்கு நயனமும் வாயு முறுவலும்
மூக்கு மிருந்தவா காணீரே மொய்குழலீர் வந்துகாணீரே. க௯.

பதவுரை.

| | |
|---|---|
| அசோதை— யசோதைப்பிராட்டி | நயனமும்— திருக்கண்களும் |
| நோக்கி— (திருமேனியின் மென்மைக்குத் தகுதியாம்படி) பார்த்து | வாயும்— திருவதரமும் (அல்லது) வாய்த்திருக்கிற |
| நுணுக்கிய— அரைத்த | முறுவலும்— மந்தஸ்மிதமும் |
| மஞ்சளால்— மஞ்சள்காப்பாலே | மூக்கும்— மூக்கும் |
| நாக்கு வழித்து— நாக்கை வழித்து | இருந்த ஆ— இருந்தபடியை |
| நீராட்டும்— திருமஞ்சனம் பண்ணுகிற | காணீர்!— பாருங்கள்; |
| இந்நம்பிக்கு— இந்த பூர்ணனான கண்ணனுக்கு | மொய் குழலீர்!— செறிந்த குழலையுடைய பெண்காள்! |
| வாக்கும்— வாக்கும் | வந்துகாணீர்!-; (ஏ - அசை.) |

வ்யா. நோக்கியித்யாதி. திருமேனியின் சௌகுமார்ய மறியும் யசோதைப்பிராட்டி. அதற்குத் தகுதியாம்படி பார்த்து சோதனைத்த மஞ்சள் காப்பாலே திருநாவழித்து திருமஞ்சனம் செய்யும்படி விதேயமான பூர்ணனான விவனுக்கு. வாக்குமித்யாதி. மாதா முதலானோர் ஸமஸ்தஜனம் பண்ணுகிற வாக்கும், 'என்னைப்பாரீர் என்னைப்பாரீர்' என்ன அவர்களைக் கடாக்ஷிக்கிற திருக்கண்களும் மந்தஸ்மிதம்செய்ய உபக்ரமிக்கிற திரு அதரமும் அந்த வ்யாபாரத்தோடே கூடின மந்தஸ்மிதமும், "மாட்டுயர் கற்பகத்தின் வல்லியோ கொழுந்தோ வறியேன்" என்று நித்ய ஸூரிகளுக்கு அநுபாவ்யமான திருமூக்குமாகிற இச்சேர்த்தி யழகிருந்தபடி காணுங்கோள்; செறிந்த குழலையுடைய நீங்கள் வந்து காணுங்கோள். ... ... ... ... ... ... ... * க௯.

அ. பத்தொன்பதாம்பாட்டு. வாய்ந்த சோபையின் நடுவே அநுபவித்த திருக்கண்களின் அழகைப் பின்னிட்டு, அத்தை யநுபவிக்கிறார். அதுதன்னில் எல்லாவற்றுக்கும் பின்பாய

பதவுரை.

பருவம்— வயது
நிரம்பாமே— முதிருவதற்கு முன்னமே
பார் எல்லாம்— உலகமெல்லாம்
உய்ய— உஜ்ஜீவிக்கும்படியாக
திருவின் வடிவு ஒக்கும்— பெரியபிராட்டி போலொத்த ஸ்வபாவத்தையுடையவளான
தேவகி— தேவகிப்பிராட்டி
பெற்ற— (மோர்த்துப்) பெற்ற
உருவு கரிய— ரூபத்தால் கறுத்தாய்
ஒளி— உஜ்ஜ்வலமான
மணி— மணிபோன்ற
வண்ணன்— வடிவையுடையவனுடைய
புருவம்— திருப்புருவங்கள்
இருந்த ஆ— இருந்தபடியை
காணீர்!— காணுங்கோள்! ;
பூண் முலையீர்!— ஆபரணம் பூண்ட முலையை உடைய பெண்காள்!
வந்துகாணீர்!-; (ஏ-அசை.)

வ்யா. பருவமித்யாதி. சக்ரவர்த்தித் திருமகனைப்போலே பருவம் நிரம்பினபின்பு விரோதிகளை நிரஸித்து லோகத்தை உஜ்ஜீவிப்பிக்கையன்றிக்கே, பருவம் நிரம்புவதற்குமுன்னே சதிங்கொள் அசுரரைத் தேய்வனாகையாலே லோகமெல்லாமுஜ்ஜீவிக்கும்படியாக, பூதனாசகடயமளார்ஜுனாதிகளைத் தொட்டில் பருவமே பிடித்திறே நிரஸித்துச் சென்றது. திருவின்வடிவொக்கும் தேவகிபெற்ற. ஸ்ரீயப்பதிவல்லபையான தேவகிப்பிராட்டி இப்படிக்கீடாக மோர்த்துப் பெற்ற. திருவின்வடிவொக்கு மென்கையாலே மேல் “உள்ளமுதன்ன தேவகி” என்றது இங்கே ஸ்பஷ்டமாகிறதிறே.

உருவித்யாதி. ரூபத்தால் கரியதாய் உஜ்ஜ்வலமாயிருந்துள்ள மணிபோன்ற வடிவையுடையவனுடைய. புருவமித்யாதி. மதனன் கருப்புச்சிலைபோலே யிருக்கிற திருப்புருவங்களினழகைக் காணுங்கோள்; ஆபரணலங்க்ருதமான முலையையுடைய நீங்கள் வந்து காணுங்கோள். ... ... ... ... ... ... ... கஎ.

அ. பதினெட்டாம்பாட்டு. திருப்புருவத்தினழகை யநுபவித்த வநந்தரம், திருமகரக்குழையினழகை யநுபவிக்கிறார்.

மூ.—மன்னு மலையுங் கடலு முலகேழும்
உண்ணுந்திறத்து மகிழ்ந்துண்ணும் பிள்ளைக்கு
வண்ணமெழில்கொள் மகரக்குழையிவை
திண்ணமிருந்தவா காணீரே சேயிழையீர் வந்து காணீரே. கஅ

மண்ணும்— பூமியையும்
மலையும்— பர்வதங்களையும்
கடலும்— ஸமுத்ரங்களையும்
உலகு ஏழும்— ஸப்தலோகங்களையும்
உண்ணும் திறத்து— திருவயிற்றில் வைக்கிற வளவில்
மகிழ்ந்து— உகந்து
உண்ணும்— திருவயிற்றிலே வைத்த
பிள்ளைக்கு— பாலனுக்கு
எழில் வண்ணம் கொள்— அழகிய திருநிறம் கொண்ட
மகரக்குழை— திருமகரக்குழைகளான
இவை— இவற்றின்
திண்ணம்— திண்மை
இருந்த ஆ— இருந்தபடியை
காணீர்!— காணுங்கோள்! ;
சே இழையீர்! — அழகிய ஆபரணங்களையுடைய பெண்காள்!
வந்துகாணீர்!-; (ஏ-அசை.)

மூ.—அழகிய பைம்பொன்னின் கோலங்கைக்கொண்டு
கழல்கள் சதங்கை கலந்தெங்கு மார்ப்ப
மழகன்றினங்கள் மறித்துத் திரிவான்
குழல்களிருந்தவா காணீரே குவிமுலையீர் வந்து காணீரே. உ0

பதவுரை.

அழகிய – அழகியதாய்
பைம்பொன்னின் – பசும்பொன்னால் செய்யப்பட்ட
கோல் – கோலை
அம் கை – அழகிய கையாலே
கொண்டு – பிடித்துக்கொண்டு
கழல்கள் – திருவடிகளில் சாத்தியிருக்கிற வீரக்கழல்களும்
சதங்கை – சதங்கைகளும்
கலந்து – சேர்ந்து
எங்கும் ஆர்ப்ப – எங்கும் ஒலிக்க
மழம் – இளமை பொருந்திய
கன்று இனங்கள் – கன்றுகளின் கூட்டங்களை
மறித்து – மடக்கி
திரிவான் – திரிகிறவனுடைய
குழல்கள் – திருக்குழல்கள்
இருந்த ஆ – இருந்தபடியை
காணீர்! – பாருங்கள்;
குவி முலையீர்! – குவியும் முலைகளையுடைய பெண்காள்!
வந்து காணீர்!-; (ஏ - அசை.)

வ்யா. அழகியவித்யாதி. கண்டவர்கள் கண்ணுக்கழகியதாய், பசும்பொன்னாலே சமைந்திருப்பதான கோலை, கன்றுகளை மேய்க்கைக்கு உபகரணமாக வெறும்புறத்திலே ஆலத்திவழிக்கவேண்டும்படி அழகியதான கையிலே பிடித்துக்கொண்டு. கழல்களித்யாதி. கன்றுகளை மறிக்கைக்காக அதிரவோடுகையாலே திருவடிகளிலே சாத்தியிருக்கிற வீரக்கழல்களும் சதங்கைகளும் தன்னிலே கலந்து எங்கு மொக்கத்வனிக்க. மழகன்றித்யாதி. இளங்கன்றுகளினுடைய திரள்களைக் கைகழியப்போகாமல் மடக்குகைக்கு ஸஞ்சரியாநின்றவனுடைய. குழல்களித்யாதி. "நெறித்த குழல்களை நீக்க முன்னோடி" என்கிறபடியே அதிரவோடுகையாலே அசைந்து நீக்கிச்செல்லும் திருக்குழலின் அழகிருக்கிறபடியைப் பாருங்கோள்; குவிந்த முலையையுடைய நீங்கள் வந்து காணுங்கோள். ... ... உ0

அ. நிகமத்தில் இத்திருமொழிகற்றார்க்கு பலஞ்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—சுருப்பார் குழலி யசோதை முன்சொன்ன
திருப்பாதகேசத்தைத் தென்புதுவைப்பட்டன்
விருப்பாலுரைத்த விருபதோடொன்றும்
உரைப்பார்போய் வைகுந்தத் தொன்றுவர் தாமே. உக

பதவுரை.

சுரும்பு ஆர் – வண்டுகள் படிந்து கிடக்கும்படியான
குழலி – மயிர்முடியையுடைய
யசோதை – யசோதைப் பிராட்டியானவள்
முன் – அவதாரஸமயத்தில்
சொன்ன – (அயல்பெண்களுக்கு அழைத்துக் காட்டிச்) சொன்ன
திருப்பாத கேசத்தை – பாதாதிகேசாந்த வர்ணனத்தை

தென் புதுவை— அழகிய ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹகனான
பட்டன்— பட்டர்பிரான்
விருப்பால்— மிக்க ஆதரத்தால்
உரைத்த— அருளிச்செய்த
இருபதோடு ஒன்றும்—இருபத்தொரு பாசுரங்களையும்
உரைப்பார்தாம்— கற்குமவர்கள்
போய்— (ப்ராக்ருத மண்டலத்தைக்கடந்து) போய்
வைகுந்தத்து— ஸ்ரீவைகுண்டத்திலே
ஒன்றுவர்—பொருந்தியிருப்பர்கள்.

(௩ - அசை.)

வ்யா. கருப்பார்குழலித்யாதி. மென்மைக்கு எதிர்த்தட்டாய், கருப்பாரென்கிறது, கருப்பாரென்று கிடக்கிறது. குழலில் முடித்த பூக்களின் மணத்தைப்பாகும் பண்ணுகைக்காக வண்டுகள் எப்போதும் படிந்து கிடக்கும்படியான குழலையுடைய யசோதைப்பிராட்டி முன் சொன்ன. திருப்பாதகேசத்தை. அவதார ஸமகாலத்திலே அநுபவித்து, பிறர்க்கும் அழைத்துக்காட்டிச்சொன்ன பாதாதிகேசத்தை. தென்னித்யாதி. அழகிய ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹகராய் ப்ராஹ்மணோத்தமரான பெரியாழ்வார் அதிமாத்ரப்ரேமத்தோடே அருளிச்செய்த. அவளுடைய ஆதரத்தளவு மன்றிறே இவருடையவாதரம்.

"கோமளக்குழலினசோதை" "பிள்ளைத்தேளினவாய்ச்சி" "மைத்தடங்கண்ணியசோதை" இத்யாதிகளாலே யசோதைப்பிராட்டியை வர்ணித்துச் சொன்னவையும், "உழந்தாள் நறுநெய்" "அதிருங் கடல்நிற வண்ணன்" "நோக்கி யசோதை" இத்யாதிகளாலே அவனுடைய சேஷ்டிதங்களாகச் சொன்னவையும், "மறங்கொளிரணியன் மார்வை முன்கீண்டான்" "இருமாமருதமிறுத்த விப்பிள்ளை" "சகடத்தைச் சாடிப்போய் வான்கொள்வினை யெய்திற்றுயிர் வல்லினான்" இத்யாதிகளாலே இவனுக்கு நிரூபகமாக வருளிச்செய்த அவதாரோத்தர சேஷ்டிதங்களும், இவ்வவதாரத்தன்னில் உத்தரகால சேஷ்டிதங்களுமெல்லாம், அவதாரகாலத்துக்குப் பிற்பாடராயிருக்கச்செய்தேயும் உபயவற மதிலமருவைப் பெறுகையாலே ஸர்வகாலத்திலுள்ளதும் ப்ரகாசிக்கும்படியான தசை பிறந்த இவர் இவ்விஷயத்தில் ஆதரிசயத்தாலே அருளிச்செய்தாராயித்தனை.

யசோதைப் பிராட்டியுடைய ஸ்நேஹத்தை யுடையராய்க்கொண்டு அநுபவித்ததும் இவள் பாதாதிகேசமநுபவித்துப்பிறர்க்குக்காட்டின கட்டளையிலே பேசினதுமாகவிறே, அவளோடு இவர்க்கு ஸாம்யம். ஆகையாலே, "அசோதை முன்சொன்ன திருப்பாதகேசத்தைத் தென்புதுவைப் பட்டன் விருப்பாலுரைத்த" என்றருளிச்செய்தது. இந்த ஸ்வாபத்தாலே மேலில் திருமொழிகளிலும் இப்படி வர்தவுத்திற்கு வகைபிடித்துக் கொள்வது. இருபதோடொன்றுமுரைப்பார். இருபத்தொருபாட்டையும் அபிப்ராயமாகச்சொல்லுவாரென்னுதல்; பாவபந்தமில்லையே யுரிதும் சப்தமாத்ரத்தைச் சொல்லுவாரென்னுதல். போயித்யாதி. இவ்விஷயத்தை பரிபூர்ணநுபவம் பண்ணலாம்படியான ஸ்ரீவைகுண்டத்திலேபோய் "சூழ்ந்திருந்தேத்துவர் பல்லாண்டு" என்கிறபடியே அவனை யநுபவித்து மங்களாசாஸனம் பண்ணிக்கொண்டு ஒரு காலமும் பிரிவின்றியிருக்கப்பெறுவர். ... உக.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.

மாணிக்கமித்யாதி. இரண்டருகும் மாணிக்கத்தையும் நடுவே வயிரத்தையும் பணைத் தொடையாகக் கொண்டு அழகுபடக் கட்டி, "இதுக்குமேலே மாற்றில்லை" என்னும்படியான பொன்னாலே சமைத்ததாகையாலே அழகியதாய்ப் பருவத்துக்குத் தகுதியாம்படி சிறியதாயிருந்துள்ள தொட்டிலை. பேணியித்யாதி. ஆதரித்து உனக்கு ப்ரஹ்மா வரவிட்டான். மாணியித்யாதி. உன்னுடைமை பெறுகைக்காக இரப்பிலே தாழ்ம்பெறின ப்ரஹ்மசாரியாய்ச் சென்று இரந்த வாமநரூபியானவனே! தாலேலோ; இரப்புப்பெற்ற நீர்வந் தாலே வளர்ந்து லோகத்தை யளந்த த்ரிவிக்ரமனானவனே! தாலேலோ. ... ... க

அ. இரண்டாம்பாட்டு. ப்ரஹ்மாவுக்கனந்தரம் பரிகணிதனும் ஈச்வராபிமானியான ருத்ரன் கிஞ்சித்கரித்தபடியைச் சொல்லுகிறது.

மூ.—உடையார் கனமணியோ டொண்மாதுளம்பூ
இடை விரவிக் கோத்த வெழிற்றெழ்கினோடு
விடையேறு காபாலி ஈசன் விடுதந்தான்
உடையாய்அழேல்அழேல் தாலேலோ வுலகமளந்தானே தாலேலோ ௨

பதவுரை.

| | |
|---|---|
| உடை ஆர்—திருவரைக்குப் பொருந்தின | காபாலி—கபாலதாரியாய் |
| கனமணியோடு—பொன்மணியோடு | ஈசன்—ஸர்வபூதத்துக்கு மீயாமகனான ருத்ரன் |
| இடை—நடு நடுவே | விடுதந்தான்—கொடுத்தனுப்பினான்; |
| விரவி—கலந்து | உடையாய்!—ஸர்வத்தையு முடையவனே! |
| கோத்த—கோக்கப்பட்ட | அழேல்! அழேல்!!—அழாதேகொள், அழாதேகொள்; |
| எழில்—அழகியதான | தாலேலோ—; |
| தெழ்கினோடு—¶ இடைச்சரிகையோடேகூட | உலகம் அளந்தானே!—உலகங்களை அளந்தருளினவனே! |
| ஒண்—அழகிய | தாலேலோ—; |
| மாதுளம்பூ—மாதுளம்பூக்கோவையான அரைவடத்தை | |
| விடை ஏறு—ரிஷபவாஹநனும் | |

¶ இடைச்சரிகை—இடையில் செருகுகிறசரிகை.

வ்யா. உடையித்யாதி. திருவரைக்குச் சேர்த்திருப்பதான பொன்மணியோடு நடு நடுவே கலசிக்கோத்த அழகிய இடைச்சரிகையோடும் கூடியிருக்குமுன்ன அழகிய மாதுளம் பூக்கோவையான அரைவடத்தை. விடையித்யாதி. ரிஷபவாஹநனும் கபால தீருபகனும் ஸ்ரவலோகத்துக்கு நியந்தாவா யிருக்கிற ருத்ரன் வரவிட்டான். உடையாயித்யாதி. ஒருவர் 'என்னது' என்று வரவிடாதபோதும் அவர்களோடு அவர்களுடைமையோடு வாசியற எல்லாவற்றையுமுடையவனே! அழாதேகொள்! அழாதேகொள்!! தாலேலோ. உலகமித்யாதி. திருவுலகளந்தருளின ஸர்த்தாந்தத்தாலே உன்னுடைய ஸர்வ ஸ்வாமித்வத்தை அடிப்படுத்தி வைத்தவனே! தாலேலோ வென்று தாலாட்டினதா யிருக்கிறது. தாலாட்டாவது - நா வசைத்தல். ... ... ... ... ... ... ...* ௨

ஆ. மூன்றும்பாட்டு. ப்ரஹ்மருத்ரர்களை எண்ணிலும், பின்பு தன்னை யெண்ணும் படியான முதன்மையையுடையனான இந்த்ரன் கிஞ்சித்கரித்தபடியைச் சொல்லுகிறது.

மூ—என் தம்பிரானா ரெழிற்றிருமார்வற்குச்
சந்த மழகிய தாமரைத் தாளற்கு
இந்திரன்றானு மெழிலுடைக் கிண்கிணி
தந்துவனாய்நின்றான்றாலேலோ தாமரைக்கண்ணனே தாலேலோ. ரு

பதவுரை.

என்—எனக்கு
தம் பிரானார் - ஸ்வாமியாய்
எழில்—அழகிய
திருமார்வற்கு—திருமார்வை யுடையவனுய்
அழகிய சந்தம்—அழகியநிறத்தையுடைய
தாமரை தாளற்கு— தாமரைப்பூ போன்ற திருவடிகளையுடையனுன உனக்கு
இந்திரன் தானும்—தேவேந்த்ரனும்
எழில் உடை—அழகை உடையதான
கிண்கிணி—கிண்கிணியை
தந்து—கொணர்ந்து ஸமர்ப்பித்து
உவனாய் நின்றான்—* அநுகூலப்ரவ்ருத்தனாய் நின்றான்;
தாலேலோ—;
தாமரைக்கண்ணனே!—தாமரைபோன்ற திருக்கண்களையுடையவனே!
தாலேலோ—;

* அநுகூலப்ரவ்ருத்தன்—ஸமீபத்திலும் தூரத்திலுமின்றியே மத்யஸ்தனுயிருக்குமவன்.

வ்யா. என்னிற்பாதி. என் தம்பிரானார் எழில் திருமார்வற்கு. எழில் - அழகு. என் தம்பிரானுரென்கிறவிது - திருமார்பினழகுக்குத் தோற்றுச்சொன்ன வார்த்தை. சந்தமித்யாதி. சிவப்பாலும் விகாஸத்தாலும் நிறமழகிய தாமரைப் பூப்போலேயிருக்கிற திருவடிகளை யுடையவனுக்கு. இந்திரனித்யாதி. தலைமேலான ஐச்வர்யங்களை முதன்மையையுடைய இந்த்ரன் தானும், அழகை யுடைத்தான கிண்கிணியைக் கொடுவந்து ஸமர்ப்பித்து ஸ்வகார்யத்தோற்ற அநுகூலப்ரவ்ருத்தனாய் நின்றான், தாலேலோ. தாமரையித்யாதி. கிஞ்சித்கரித்தவர்களைக் குளிரக் கடாக்ஷிக்கும் தாமரைபோன்ற திருக்கண்களை யுடையவனே! தாலேலோ. ... ... ... ... ... ... ... ... ... * ரு.

அ. ஸாமான்யபாட்டு. இந்த்ரனுக்கும் மேலாய், தனித்தனி ப்ரதாநரான தேவர்கள் ஸமுதாயேந பண்ணின கிஞ்சித்காரத்தைச் சொல்லுகிறது.

மூ—சங்கின் வலம்புரியுஞ் சேவடிக் கிண்கிணியும்
அங்கைச் சரிவளையு நாணு மரைத்தொடரும்
அங்கண் விசும்பிலமரர்கள் போத்தந்தார்
செங்கட் கருமுகிலே தாலேலோ தேவகிசிங்கமே தாலேலோ சு.

பதவுரை.

சங்கில்—சங்குகளில் சிறந்த
வலம் புரியும்— வலம்புரிச் சங்கும்
சே அடி— செவ்விய திருவடிகளில் சாத்தத் தகுந்த
கிண்கிணியும்— சதங்கையும்
அம் கை— அழகிய திருக்கைக்கு அங்கீகாரமான
சரி வளையும்— முன்கைவளைகளும், திருத்தோள்வளைகளும்
நாணும் – திருமார்பில் சாத்தத்தக்க பொன்நாணும்

வ்யா. மெய்யித்யாதி. திருமேனியிலே மர்திக்கைக் கேடான சந்தந கஸ்தூரீ கர்ப்பூராதி ஸௌகந்த்யத்ரவ்ய ஸமுதாய சூர்ணத்தோடே நிறம்பெறச் சாத்தத்தக்க மஞ்சள் பொடியும், இவர்ந்து புடை பரந்து நீண்ட திருக்கண்களுக்குச் சாத்துகைக்குத் தகுதியான அஞ்சனமும், திருநெற்றியில் அழகுபெறச் சாத்துகைக்குச் சிந்தூரமும். வெய்யவித்யாதி. வெவ்விதான கலையை வாகனமாகவுடைய துர்க்கையானவள் கொண்டுவந்து ஆதரிப்பக்ஷடையாய் நின்றாள். அப்பாவித்யாதி. ஸர்வஸ்வாமியானவனே அழாதே கொள் அழாதே கொள் தாலேலோ. அரங்கத்தித்யாதி. அந்தர்யாமித்வத்தை நிர்வஹிக்கைக்கேடாகக் கோயிலின் திருவாயினையிலே பள்ளிகொண்டருளினவனே! தாலேலோ. அன்றிக்கே, வெய்ய கலைப்பாகி என்கிறது, வெம்மை - விருப்பத்துக்கு வாசகமாகையாலே ஸ்ப்ருஹணீயமான கலைகளை நாவிலே நின்று நடத்துகிற ஸரஸ்வதியைச் சொல்லுகிறதாய், அடியிலே எல்லாருக்கும் ப்ரதாநகச் சொல்லப்பட்ட ப்ரஹ்மாவுக்கு ப்ரதாந மஹிஷியானவள் பண்ணின கிஞ்சித்காரத்தைச் சொல்லுகிறதென்று வாக்யார்த்தமாக்கி, மேலுடைய, அதுக்குச்சேர நிர்வஹிக்கவுமாம்' ... ... ... ... க.

அ. நிகமத்தில், இத்திருமொழி கற்றார்க்கு பலம் சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—வஞ்சனையால் வந்த பேய்ச்சி முலையுண்ட
அஞ்சனவண்ணனை யாய்ச்சி தாலாட்டிய
செஞ்சொல் மறையவர் சேர்புதுவைப் பட்டன் சொல்
எஞ்சாமை வல்லவர்க்கில்லை யிடர்தானே ய.

பதவுரை.

வஞ்சனையால்வந்த — பேய்வடிவைமறைத்து, தாய்வடிவு கொண்டுவந்த
பேய்ச்சி— பூதனையின்
முலை— முலையை
உண்ட— அவள் முடியும்படி உண்ட
அஞ்சனவண்ணனை—கரியமேனியை உடைய கண்ணனை
ஆய்ச்சி— தாயான யசோதை
தால் ஆட்டிய— தாலாட்டின படிகளை
செம் சொல்— செவ்விய சொல்லை உடைய
மறையவர்—வேதத்தை நிரூபகமாக உடையவர்கள்
சேர்— சேர்ந்துவர்த்திக்கிற
புதுவை—ஸ்ரீவில்லிபுத்தூரில் அவதரித்த
பட்டன் — ப்ராஹ்மணோத்தமரான பெரியாழ்வார் அருளிச்செய்த
சொல்— பாசுரங்களை
எஞ்சாமை— குறைவுபடாமல்
வல்லவர்க்கு— ஓதவல்லவர்களுக்கு
இடர்தான்— துன்பமானது
இல்லை— இல்லையாம்.

(ஏ - அசை.)

வ்யா. வஞ்சனையித்யாதி. "தாயாய்வந்தபேய்" என்கிறபடியே பேயான தன் வடிவை மறைத்துத் தாய்வடிவைக் கொண்டு வஞ்சித்து வந்த பூதனையுடைய முலையை, அவள் தாயாய்வந்தாற்போலே, தானும் பிள்ளையாய்க்கொண்டு, தாய்முலை யுண்ணுமாபோலே உண்ணு நிற்கச்செய்தே அவள் முடியும்படியாக வுண்ட. அஞ்சனவண்ணனை. விரோதிபோய்ப்பெற்றோமென்னும் ஹர்ஷத்தாலே திருமேனியிற் பிறந்த புகரைச் சொல்லுகிறது. ஆய்ச்சியித்யாதி. மாதாவான யசோதைப்பிராட்டி தாலாட்டினபாடலை. செஞ்சொலித்யாதி. பதா

பூதவாதியாகையாலே செவ்வியசொல்லை யுடைத்தான வேதத்தைத் தங்களுக்கு நிரூபகமாக வுடையவர்கள் சேர்ந்து வர்த்திக்கிற ஸ்ரீவில்லிபுத்தூரில் ப்ராஹ்மணோத்தமரான பெரியாழ்வாரருளிச்செய்த சப்தத்தை. எஞ்சாமைபிதயாதி. ஸங்கோசமற அதிகரிக்கவல்லவர்களுக்கு ஒரு துக்கமில்லை. ... ... ... ... ௰.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.

அடிவரவு—மாணி உடை என் சங்கின் எழி லோதக்
கானூர் கச்ச மெய் வஞ்சனை தன்.

———(*)———

ஆக - திருமொழி, ௩-க்கு, பாட்டு-௪௧.

அ. கீழ்த்திருமொழியிலே - யசோதைப் பிராட்டி அவனுடைய சைசவாநுகுணமாக அழுகையை மாற்றிக் கண்வளரப்பண்ணுகைக்காகச் சீராட்டிக்கொண்டு தாலாட்டின ப்ரகாரத்தை தத்பாவயுக்தராய்க்கொண்டு தாமும் அப்படி அருளிச்செய்தார்; இனிமேல், தொட்டில் பருவம்போய், தவழ்ந்து விளையாடத்தக்க பருவமானபின்பு அவன் சந்திரனைமுற்றத்தேபோந்து தவழ்ந்து புழுதியளைவது, சந்த்ரனை யழைப்பதான ப்ரகாரத்தை, அவள் அநுபவித்து அவனுக்குகப்பாகச்சந்த்ரனை வரச்சொல்லித் தான்பலகாலும் அழைத்தப்ரகாரத்தை, தாமும் அநுபவபூர்வகமாகப் பேசி விளியாநின்றார். பாகவதத்தில்(க)"அவ்யக்தவாக்யநாதாநி" என்கிறபடியே பெருமதிப்பனும் ஒருவார்த்தை சொல்லக்கடவ தன்றிக்கே, தன்னோடொக்க முகம்பார்த்து வார்த்தை சொல்லுகைக்கு ஒரு தத்வாந்தரமில்லாமையாலே அநாதரித்திருக்குமவன், லீலாவிபூதியிலே ஸம்ஸாரி ஸம்ரக்ஷணார்த்தமாகத் தன் இச்சையாலே இதரஸஜாதீயனும் வந்தவதரித்து அவதாரத்தின் மெய்ப்பாடு தோற்ற சைசவாத்யவஸ்த்தைகளை அடைந்து தத்ததவஸ்தாநுகுணமாகச்செய்த சேஷ்டிதங்களை அநுஸந்தித்தால் ஸமயாவற மதிலை மருளப்பெறுகையாலே அவன் மேன்மையையும் நீர்மையையும் தெரியக்கண்டவர்கள் அதிலே விக்தராய் அநுபவிக்கச் சொல்ல வேண்டாவிறே. மற்றுள்ள ஆழ்வார்களைப்போலன்றிக்கே இவ்வவதாரவிஷயத்தில் அதிப்ரேமாதிசயத்தாலே கோபஜந்மத்தை ஆஸ்த்தாநம் பண்ணி, இவ்வவதாரரஸமெல்லாம் அநுபவிப்பதாக இழிந்தவர் அவனுடைய பாலசேஷ்டிதங்களில் ஒன்றும் நழுவவிடாரிறே; ஆகையாலே, அவன் புழுதியளைவது சந்த்ரனை அழைப்பதான சேஷ்டிதங்களை தத்காலத்தில் யசோதைப் பிராட்டி அநுபவித்தாற்போலே தாமும் அநுபவித்துப் பேசுகிறார்.

மூ.—தன்முகத்துச்சுட்டித் தூங்கத்தூங்கத் தவழ்ந்துபோய்
பொன்முகக் கிண்கிணியார்ப்பப் புழுதியளைகின்றான்
என் மகன் கோவிந்தன் கூத்தினை யிளமாமதீ!
நின்முகம் கண்ணுளவாகில் நீஇங்கே நோக்கிப்போ: க.

(க) "அவ்யக்தவாக்யநாதாநி"

பதவுரை.

தன்முகத்து— தன்முகத்தில் (விளங்குகின்ற)
சுட்டி— சுட்டியானது
தூங்கத்தூங்க— பலகாலும் அசையும்படியாகவும்
பொன்முகம்— அழகிய முகத்தையுடைய
கிண்கிணி— கிங்கிணியானது
ஆர்ப்ப— (கணகணென்று) ஒலிக்கும்படியாகவும்
தவழ்ந்துபோய்— தவழ்ந்துபோய்
புழுதி— தெருப்புழுதியை
அளைகின்றான்— அளையாநின்றவனும்

என்மகன்— என்பிள்ளையான
கோவிந்தன்— கோவிந்தனுடைய
கூத்தினை— அழகிய சேஷ்டைகளை
மா— மிகவும்
இள— இளமை பொருந்திய
மதீ!— சந்த்ரனே!
நின்முகம்— உன்முகத்தில்
கண்— கண்கள்
உளஆகில்— உண்டானால்
நீ இங்கே நோக்கி போ— நீ இங்கே பார்த்துப்போ

வ்யா. முதற்பாட்டு. தன்முகத்து இ. வெளும்புறத்திலே ஆலத்தி வழிக்கவேண்டும்படியான தன் திருமுகத்திலே அழகுக்கு உடலாக ‡ தூங்கும்படி கட்டின சுட்டியானது தவழுகைக்காகத் திருமுடியை தாழ்த்துகையாலே பலகாலும் அசையும்படியாகவும் திருவரையிலே சாத்தியிருக்கிற அழகிய முகத்தை யுடைத்தான கிண்கிணியானது த்வனிக்கும்படியாகவும் தவழ்ந்துபோய்ப் புழுதி யளையாநின்றான். பொன்முகக் கிண்கிணியென்றது- சேவடிக்கிண்கிணியாகிற பாதச்சதங்கையாகவுமாம். அதிறே தவழும்போது மிகவும் சப்திப்பது. என்மகனித்யாதி. என்னுடைய பிள்ளையான கோவிந்தனுடைய, மனோஹாரிசேஷ்டிதத்தை, இளமாமதீ. இத்தைக்கண்டு கால் தாழ்ந்து நிற்கவேண்டியிருக்க, அது செய்யாதே போகிற அதிமுக்தனான சந்த்ரனே. இளமாமதி யென்றது இளமையால்மிக்க மதியென்றபடி. நின்முகமித்யாதி. உன்னுடைய முகத்தில் கண்ணுண்டாமாகில் கண்படைத்த ப்ரயோஜநம் பெறும்படி நீ இங்கே பார்த்துப்போ. ... ... ... ... க

மூ.—என் சிறுக்குட்டன் எனக்கோர் இன்னமுது எம்பிரான்
தன் சிறுக்கைகளால் காட்டிக் காட்டி யழைக்கின்றான்
அஞ்சனவண்ணனோடாடலாட வுறுதியேல்
மஞ்சில் மறையாதே மாமதீ! மகிழ்ந்தோடிவா உ.

பதவுரை.

எனக்கு— எனக்கு
ஓர்— அத்விதீயமாய்
இன் அமுது— மதுரமான அம்ருதம்போன்றவனும்
எம்பிரான்— எனக்கு உபகாரகனும்
என் சிறுகுட்டன்— என் சிறுப்பிள்ளையானவன்

தன்— தன்னுடைய
சிறு கைகளால்— சிறிய கைகளால்
காட்டிக் காட்டி— பலகாலும் உன்னைக் காட்டி
அழைக்கின்றான்— அழையாநின்றான்,
அஞ்சன வண்ணனோடு— கறுத்த வடிவையுடைய இப்பிள்ளையோடுகூட

‡ தூங்கும்படி- தொங்கும்படி.

பதவுரை.

நிறை மதி!— பூர்ணசந்த்ரனே!
என்— என்னுடைய
இளம் சிங்கத்தை—சிங்கக்குட்டிபோன்ற பிள்ளையை
சிறியன் என்று— சிறுப்பிள்ளையென்று
இகழேல் கண்டாய்— அவமதி செய்யாதே கொள்;
சிறுமையின் — இவன் பால்யத்தினுடைய
வார்த்தையை— சர்வவிசேஷத்தை
மா வலி இடை— மஹாபலியிடத்திலே
சென்று கேள்— போய் கேட்டுக்கொள்;
சிறுமை— ("இப்படிப்பட்டவன் விஷயத்தில்) சிறுமை நினைத்தவிது
பிழை கொள்ளில்—அபராதம்" என்று நினைத்தாயாகில்
(அப்போது,)
நீயும்— நீயும்
உன் தேவைக்கு—அவன் விஷயத்தில் தாஸ்யத்துக்கு
உரியை காண்— தகுந்தவனாவாய்;
நெடு மால்— ஸர்வாதிகனான இவன்
விரைந்து— த்வரித்து
உன்னை— உன்னை
கூவுகின்றான்— அழைப்பாநின்றான்.

வ்யா. எட்டாம்பாட்டு. சிறியனித்யாதி. பால ஸிம்ஹம்போலே செருக்கையும் வீர்யத்தையு முடையனாயிருக்கிற என்னுடைய பிள்ளையை, பருவத்தைப் பார்த்துச் சிறுப்பிள்ளையென்று அநாதரியாதே கிடாய். சிறுமையித்யாதி. இவனுடைய பால்யத்தினுடைய விசேஷத்தை வாமநனாய்ச் சென்று, தன்னை வசீகரித்து "மூவடி" என்று இரந்து இரண்டடியாலே ஜகத்தையடைய அளந்து ஓரடிக்குத் தன்னைச் சிறையிலே வைக்கப்பட்ட மஹாபலி பக்கலிலே சென்று கேட்டுக்கொள். சிறுமையித்யாதி. இப்படியிருக்கிறவன் விஷயத்தில் சிறுமையை நினைத்தவிது நமக்கு அபராதமென்று புத்திபண்ணுதியாகில், அப்போது நீயும் அவன் திறத்தில் அடிமைக்கு ப்ராப்தன் காண். நிறைமித்யாதி. பரிபூர்ணனான சந்த்ரனே! ஸர்வாதிகனானவன், பெரிய த்வரையோடே உன்னை அழையா நின்றான்; ஆனபின்பு பூர்த்திக்கேடாக ஓடிவாவென்று கருத்து. ... ... ... அ.

மூ.—தாழியில் வெண்ணெய் தடங்கையார விழுங்கிய
பேழைவயிற் றெம்பிரான் கண்டாயுன்னைக் கூவுகின்றான்
ஆழிகொண்டுன்னை யெறியுமையுற வில்லைகாண்
வாழவுறுதியேல் மாமதி! மகிழ்ந்தோடிவா, ௯.

பதவுரை.

மா மதி!— பெருமையுடைய சந்த்ரனே!
தாழியில்— தாழியிலே சேர்த்திருந்த
வெண்ணெய்— வெண்ணெயை
தடம்— விஸ்தீர்ணமான
கை ஆர— கை நிறையும்படி
விழுங்கிய— அள்ளி அமுதுசெய்த
பேழை— விசாலமாய் பருத்த
வயிறு— திருவயிற்றையுடையனும்
எம் பிரான் கண்டாய்— எங்கள் குலத்துக்கு உபகாரகனாயிருக்கிறவனான
உன்னை— உன்னை
கூவுகின்றான்— அழையாநின்றான்;
(அழைக்கச்செய்தேயும் நீ வாராதிருந்தால் உன் தலையை அறுக்கைக்காக)
உன்னை— உன்மேல்
ஆழி கொண்டு— திருவாழியைக்கொண்டு

| | |
|---|---|
| எறியும்— எறிவான்; | வாழ உதி ஏல்— நீ ஜீவிக்கவேண்டியிருந்தாயாகில் |
| ஐயுறவு— இதில் ஒருஸம்சயம் | மகிழ்ந்து— ப்ரீதனுய்க்கொண்டு |
| இல்லைகாண்— இல்லைகாண்; | ஓடிவா— ஓடிவா. |

வ்யா. ஒன்பதாம்பாட்டு. தாழியித்யாதி. தாழியிலே சேர்த்திருக்கிற வெண்ணெயை அபிநிவேசாதிசயத்தாலே பருவத்துக்குத்தக்க கையன்றே வெண்ணும்படி வெண்ணெயைக் கண்டவாறே விஸ்த்ருதமான கைநிறையும்படி அள்ளி அமுதுசெய்த. பேழையித்யாதி. உள்ளுப்புக்க த்ரவ்ய கௌரவத்தாலே விசைத்துப் பெருத்திருக்கிற திருவயிற்றையுடையனுய் எங்கள்குலத்துக்கு உபகாரகனு யிருக்கிறவன்காண் உன்னை யழையா நிற்கிறான். இத்தால் - தன்பருவத்துக்கீடாக வெண்ணெயை விரும்பி விழுங்கினாற்போலே விருப்ப தொன்றுகாண் உன்னை யழைக்கிறதுமென்கை. ஆழியித்யாதி. அவ் வெண்ணெய்த்தாழியை எட்டாதபடி வைக்கில் கல்லைக்கொண்டு எறிந்து உடைக்குமாப்போலே, நீயும் வாராதிருக்கில் தன்னை யறுக்கைக்காகத் திருவாழியைக்கொண்டு உன்னை யெறியும்; இதில் ஒரு ஸம்சய மில்லைகாண். வாழவித்யாதி. அப்படி அவன் க்ரோதத்துக்கு விஷயமாய் முடிந்து போகாதே ஜீவிக்கவேண்டி யிருந்தாயாகில், பெருமையையுடைய சந்த்ரனே! உன் பெருமைக்கீடாம்படி ப்ரீதனுய் ஓடிவா. ... ... ... ... ௯ ௯.

அ. நிகமத்தில், இத்திருமொழி கற்றார்க்கு பலம் சொல்லித் தலைக்கட்டுகிறார்.

> ௧௦.—மைத்தடங்கண்ணி யசோதை தன்மகனுக்கிவை
> ஒத்தனசொல்லி யுரைத்தமாற்ற மொளி புத்தூர்
> வித்தகன் விட்டுசித்தன் விரித்ததமிழிவை
> எத்தனையுஞ் சொல்லவல்லவர்க் கிடரில்லையே.

பதவுரை.

| | |
|---|---|
| மை— கறுத்த | வித்தகன் – மங்களாசாஸந வைசித்ரயமான |
| தடங்கண்ணி– பெரிய கண்களை உடையவளான | விட்டுசித்தன்– பெரியாழ்வார் |
| அசோதை – யசோதையானவள் | விரித்த– விஸ்தரித்து அருளிச்செய்ததாய் |
| தன் மகனுக்கு–தன் புத்ரனுன இவனுக்கு | தமிழ்– த்ராவிடபாஷா ரூபமான |
| ஒத்தன– நினைவுக்கும் சொல்லுக்கும் சேர்ந்தவையான | இவை– இப்பாசுரங்கள் பத்தையும் |
| இவை சொல்லி–இவற்றைச் சொல்லி | எத்தனையும்– ஏதேனும் ஒருபடியாக |
| உரைத்த – சந்த்ரனை நோக்கிச்சொன்ன | சொல்ல வல்லவர்க்கு – ஓதவல்லவர்களுக்கு |
| மாற்றம் – பாசுரத்தை | இடர்– துக்கம் |
| ஒளி – தேஜஸ்ஸை உடைத்தான | இல்லை– ஒன்றுமில்லை. |
| புத்தூர்–ஸ்ரீவில்லிபுத்தூரில் அவதரித்தவராய் | |

( ௪ - அனை. )

வ்யா. மைத்தடங்கண்ணி அசோதை. கறுத்துப் பெருத்திருந்துள்ள கண்களையுடையளான யசோதை. அஞ்சனத்தாலே அலங்க்ருதமாய்ப் பரந்திருந்துள்ள கண்களையுடையளென்றுதல்; *அஞ்சனவண்ணனுன இவனை அநவரதம் பார்த்துக்கொண் டிருக்கையாலே,

வ்யா. இத்யாதி. மத்தளவும் தயிரும். வார்குழல் நன்மடவார் வைத்தன. நீண்ட கேசபாசத்தையும் நன்றான மடப்பத்தையும் உடையரான ஸ்த்ரீகள் சேமித்து வைத்தவையான. மத்தளவும் தயிரும் நெய்யும் களவால் வாரி விழுங்கி. மத்தாலே அளாவிக் கடைகைக்கு யோக்யமான தயிரும், முன்பு கடைந்த வெண்ணெய் உருக்கின நெய்யும், ஸ்த்ரீகள் அறியாதபடி க்ருத்ரிமத்தாலே அபிநிவேசாநுகுணமாக வாரி யமுது செய்து. உன்னிய-ஒருங்கொத்த இணைமருதம்- வந்தவரை. உன்னை நலியவேணுமென்னும் நினைவையுடையராய் அதுக்கீடாக ஒருபடிப்பட நெருங்க நத்துள்ளவர்களாய் ஸ்வரூபமும் தெரியாதபடி இரட்டை மருதாய் வந்து நின்ற அஸுரர்களை. ஊருவித்யாதி. கடுகே தவழ்ந்து போகையாலே திருத்துடைகளாலும் திருக்கைகளாலும் இரண்டுருவும் சரிந்து விழும்படி தள்ளிப்போகட்ட கடிய திறலையுடையவனே. முத்தித்யாதி. திருமுத்துக்கள் தோன்றும்படி இனிதான மந்தஸ்மிதமானது பூர்ணமாக வருவதற்கு முன்னே, முன்முகத்திலே அழகுமிக்குச் செறிந்துள்ள திருக்குழல்களானவை "வந்துன்பவளவாய்மொய்ப்ப" என்கிறபடியே திருப்பவளத்தை மறைக்கும்படி தாழ்ந்திருக்கும்படியாக. அணி-அழகு. மொய்-செறிவு. அத்த-அப்பனே. ௫.

௬.—காயமலர்நிறவா! கருமுகில்போலுருவா!
கானகமாமடுவிற் காளியனுச்சியிலே
தூயநடம்பயிலுஞ் சுந்தரவென்சிறுவா!
துங்கமதக்கரியின் கொம்புபறித்தவனே!
ஆயமறிந்து பொருவானெதிர் வந்தமல்லை
யந்தரமின்றியழித்தாடிய தாளிணையாய்!
ஆய! எனக்கொருகாலாடுக செங்கீரை
ஆயர்கள்போரேறே யாடுகவாடுகவே. ௬.

பதவுரை.

காய மலர் — காயாம்பூப்போன்ற
நிறவா! — திரு நிறத்தை உடையவனே!
கருமுகில்போல் — நீலமேகம்போன்ற
உருவா! — வடிவை உடையவனே!
கானகம் — காட்டிலே
மா மடுவில் — பெரியமடுவினுள்ளே கிடந்த
காளியன் — காளியனுடைய
உச்சியிலே — தலையிலே
தூய — மனோஹரமான
நடம் — நர்த்தனத்தை
பயிலும் — செய்த
சுந்தர — அழகையுடைய
என் சிறுவா! — என் பிள்ளையானவனே!
துங்கம் — அத்யுன்னதமாய்
மதம் — மதத்தை உடைத்தான
கரியின் — குவலயாபீடமென்னும் யானையின்
கொம்பு — கொம்புகளை [தந்தங்களை]
பறித்தவனே! — அநாயாஸமாய்ப் பிடுங்கினவனே!
ஆயம் அறிந்து — மல்லயுத்தம் செய்யும் வகை அறிந்து
பொருவான் — யுத்தம் செய்வதற்காக
எதிர்வந்த — எதிர்த்துவந்த
மல்லை — மல்லர்களை
அந்தரம் இன்றி — உனக்கொரு அபாயமுமில்லாதபடி
அழித்து — த்வம்ஸம் செய்து
ஆடிய — "இன்னம் வருவார் உண்டோ?" என்று ஸம்ப்ரமமாய் ஸஞ்சரித்த
தாள் இணையாய்! — திருவடிகளை உடையவனே!
ஆய! — ஆயனே!

எனக்கித்யாதி பூர்வவத்.

நீலமித்யாதி. நீலமான திருமேனி நிறத்துக்கு பரபாகத்தாலே அழகுமிக்கிருக்கிற ஸ்ரீபஞ்சாயுதத்தின் நடுவே உன்னுடைய பக்வபலம்போலேயிருக்கிற திருப்பவளத்திலூறுகிற அம்ருதஜலமானது இற்றிற்று விழ. ஏதுமித்யாதி. தகுதியான வேதார்த்தமானவனே. (க) " [illegible] " என்கிறபடியே வேதத்துக்கு அநுரூபமான அர்த்தமியவனே. ... ... ... ... ... ௯.

மூ.—செங்கமலக்கழலிற் சிற்றிதழ்போல்விரலிற்
சேர்திகழாழிகளுங் கிண்கிணியுமரையில்
தங்கியபொன்வடமுந் தாளநன்மாதுளையின்
பூவொடுபொன்மணியும் மோதிரமுங்கிறியும்
மங்கலவைம்படையுந் தோள்வளையுங்குழையும்
மகரமும்வாளிகளுஞ் சுட்டியுமொத்திலக
எங்கள்குடிக்கரசே யாடுகசெங்கீரை
யேழுலகும்முடையா யாடுகவாடுகவே. ௰.

பதவுரை.

செம் கமலம்— செந்தாமரை மலரையொத்த
கழலில்— திருவடிகளில்
சிறு இதழ்போல்— (அம்மலரின்) உள்ளிதழ் போலே சிறுத்திருக்கிற
விரலில்— திருவிரல்களில்
சேர்— சேர்ந்து
திகழ்— விளங்காநிற்கிற
ஆழிகளும்— திருவாழிமோதிரங்களும்
கிண்கிணியும்— திருவடிச்சதங்கையும்
அரையில் தங்கிய— அரையிலேசாத்தியிருக்கிற
பொன்வடமும்— பொன் அரைநாணும்
தாள— தாளை உடைத்தாய்
நல்— நல்ல
மாதுளையின் பூவொடு — மாதளம்பூவோடே
பொன்மணியும் — நடுவே கலந்து கோர்த்த பொன்மணிக்கோவையும்
மோதிரமும்— மோதிரங்களும்
கிறியும்— மணிக்கட்டிலேசாத்தின சிறுப்பவளவடமும்
மங்கலம்— மங்களாவஹமான
ஐ படையும்— பஞ்சாயுதமும்
தோள்வளையும்— திருத்தோள் வளைகளும்
குழையும்— ஸ்ரோத்ராபரணங்களும்
மகரமும்— மகர குண்டலங்களும்
வாளிகளும் — திருச்செவிமடலிலேசாத்தின வாளிகளும்
சுட்டியும்— திருநெற்றிச்சுட்டியும்
ஒத்து— அமைந்து
இலக— விளங்க
எங்கள் — எங்களுடைய
குடிக்கு— வம்சத்துக்கு
அரசே!— ராஜாவானவனே!
ஆடுக இத்யாதி.

வ்யா. பத்தாம்பாட்டு செங்கமலமித்யாதி. சிவந்த கமலம்போலேயிருக்கிற திருவடிகளில், அதில் உள்ளிதழ்போலே சிறுகியிருக்கிற திருவிரல்களிலே வகையுமொன்றும்படி சேர்ந்து விளங்காநின்ற திருவாழி மோதிரங்களும், திருவரையில் கிண்கிணியும். அன்றிக்கே கிண்கிணி பென்கிற சிதங்கை நீரோடே சேர்த்து, பாதச்சதங்கையாகச் சொல்லவுமாம். "சேவடிக்கிண்கிணி" என்னக்கடவதிறே. அரையில்தங்கிய பொன்வடமும்; திருவரையில் ஸர்வகாலமும் சாத்தியிருக்கும் பொன்னரைநாணும். தாளநன்மாதுளையின் பூவொடுபொன்ம

(க) "வேதைச்ச ஸர்வை ரஹமேவ வேத்ய:"

ணியும். "உடையார்கனமணியோடொண்மாதளம்பூ" என்கிறபடியே தாலியுடைத்தாய்க் கன்றுன மாதளம் பூவோடே விரவிலே கோர்த்த பொன்மணிக்கோவையும். மோதிரமும் கிறியும். திருக்கையில் திருவிரலில் சாத்தின மோதிரங்களும், மணிக்கட்டிற்சாத்தின சிறுப்பவளவடமும். மங்கலவைம்படையும். திருமார்விற்சாத்தின மங்களாவஹமான ஸ்ரீ பஞ்சாயுதமும். தோள்வளையும். அதுக்கு பரபாகமாய்க்கொண்டு இரண்டுருகும் விளங்காவின் அன்ன திருத்தோள்வளைகளும். குழையும், திருக்காதுப் பணிகளும். மகரமும். திருமகரக் குழைகளும். வாளிகளும். திருச்செவிமடலிலே சாத்தின வாளிகளும். சுட்டியும். திருக்குழலிலே சாத்தித் திருநெற்றிக்கலங்காரமாக ‡ நாலும் சுட்டியும். ஒத்திலக. இரண்டுருகு மகரந்தாடுகையாலே எல்லாம் சேரவொளிவிட வென்றுதல்; திருமேனிக்குத் தகுதியாய்ப் ப்ரகாசிக்க வென்றுதல், எங்கள் குடிக்கரசே. எங்களுடைய குலத்துக்கு ராஜாவானவனே. ... ௰

அ. நிகமத்தில், இத்திருமொழி கற்றார்க்கு பலம் சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—அன்னமுமீனுருவு மாளரியுங்குறளு
மாமையுமானவனே! ஆயர்கணாயகனே!
என்னவலங்களைவா யாடுகவாடுகவென்
றேழுலகுமுடையாய்! ஆடுகவாடுகவென்று
அன்னநடைமடவா ளசோதையுகந்தபரி
சன்னுபுகழ்ப்புதுவைப் பட்டனுரைத்ததமிழ்
இன்னிசைமாலைகளிப் பத்தும்வல்லாருலகி
லெண்டிசையும் புகழ்மிக் கின்பமதெய்துவரே. கக.

பதவுரை.

அன்னமும்— "ஹம்ஸமும்
மீன் உருவும்— மத்ஸ்யமும்
ஆள் அரியும்— நரஸிம்மமும்
குறளும்— வாமநனும்
ஆமையும்— கூர்மமும்
(ஆக இப்படி எல்லாம்)
ஆனவனே!— அவதரித்தவனே!
ஆயர்கள்— இடையர்களுக்கு
நாயகனே!— தலைவனானவனே!
என் அவலம்— என் துன்பத்தை
களைவாய்!— நீக்கினவனே!
சங்கீர்த்தனமாக—சங்கீர்த்தனம் ஆடியருளவேணும்,
ஏழ் உலகும்— ஸப்தலோகங்களுக்கும்
உடையாய்!— ஸ்வாமியானவனே;
ஆடுக ஆடுக என்று— ஆடவேணும் ஆடவேணும்" என்று
அன்னம்— ஹம்ஸம் போன்ற
நடை— நடையழகையுடையளாய்
மடவாள்— மடப்பத்தையுடையளான
அசோதை— யசோதைப்பிராட்டி
உகந்த— உகந்து சொன்ன
பரிசு— ப்ரகாரத்தை
மன்— அமர்ந்தமான
புகழ்— புகழையுடையரான
புதுவைப் பட்டன்— ஸ்ரீ வில்லிபுத்தூரிலவதரித்த பட்டர்பிரான்
உரைத்த— அருளிச்செய்த
இன் இசை— இனிய இசையையுடைய
தமிழ்மாலைகள்— தமிழ்த் தொடையான
இப்பத்தும்— இப்பத்துப்பாசுரங்களையும்
வல்லார்— ஓதவல்லவர்கள்
உலகில்— இந்தலோகத்தில் இருக்கச்செய்தே
எண் திசையும்— எட்டுத்திசைகளிலும்
புகழ்— கீர்த்தியையும்
மிகு இன்பமது— மிக்கபோகத்தையும்
எய்துவர்— பெறுவர்கள்.

‡ நாலும்- தொங்குகின்ற.

பதவுரை.

ஆணி— மாற்று உயர்ந்த
பொன்னால்— பொன்னாலே
செய்த— செய்யப்பட்டதாய்
ஆய்— பழிப்பு அற்ற
பொன்— ஸ்பர்ஹணீயமான
உடைமணி- அரைவடத்தை உடைத்தான
மருங்கின்மேல்— இடுப்பிலே
மாணிக்கம்— மாணிக்கத்தால் செய்த
மின்மணி—மின்மினியான து
ஆர்ப்ப—சப்திக்க
பேணி—விரும்பி
பவளம்—பவளம்போன்ற
வாய்— திருவதரமும்
முத்து—திருமுத்துக்களும்

இலங்க— ப்ரகாசிக்கும்படி [ மந்தஸ்மிதம் பண்ணிக்கொண்டு என்றகருத்து.
பண்டு— முன்னே
காணி— பூமியை
கொண்ட— ( மஹாபலியிடத்தினின்றும் நீரேற்றுவாங்கிக்கொண்ட
கைகளால்— திருக்கைகளாலே
சப்பாணி— ‡ சப்பாணிகொட்டவேணும்
கரு குழல்— கறுத்தமயிர் முடியையுடைய
குட்டனே!— பிள்ளாய்!
சப்பாணி.

‡ சப்பாணிகொட்டுதலாவது— இருக்கைத்தலங்களைத்தட்டிக்கொண்டு செய்யும் ஒருவித சத்தம்

வ்யா. முதற்பாட்டு. மாணிக்கமித்யாதி. மாற்றெழும்பின பொன்னாலே சமைக்கப்பட்டதாய்ப் பழிப்பற்று அழகியதாயிருக்குமுள்ள அரைவடத்தை யுடைத்தான மருங்கின்மேலே மாணிக்க மின்மினியான து த்வனிக்க. " ஆய் பொன் னுடைமணி " என்கிற விடத்தில், ஆய்தல்- தெரிதலாய், பழிப்பறுதலைச் சொல்லுகிறது. " ஆணிப்பொன்னாற் செய்த " என்று கீழே சொல்லுகையாலே, மேல், பொன்னென்று அழகைச் சொல்லுகிறது. மாணிக்கமின்மினி சப்திக்குமோ வென்னில்; ¶ நவமாணிக்க மாகையாலே சப்திக்கும். மின்மினிக்குப் புறம்பே மாணிக்கம் பதித்தாலும் சப்தியாது. பேணியித்யாதி. என்னுடைய நிர்ப்பந்தத்துக்காகவன்றிக்கே, விருப்பத்தோடே, பவளம்போலே யிருக்கிற திருவதரமும் திருமுத்தும் பாபாகத்தாலே விளங்கும்படி ஸ்மிதம் செய்துகொண்டு. அன்றிக்கே, பேணி யென்றது - உன் திருமேனி யழியாதபடி பேணிக்கொண்டென்னவுமாம். பண்டித்யாதி முன்பு, " குடங்கையில் மண்கொண்டு " என்கிறபடியே உன்னுடைமையான பூமியை மஹாபலி பக்கலிலே சென்று உதகபூர்வகமாக பரிக்ரஹித்த திருக்கைகளாலே. இத்தால் தன்மேன்மைபாராதே ஆச்ரிதர்க்காகத் தன்னை யழியமாறிக் கார்யம் செய்யும் கையென்கை. சப்பாணி. சப்பாணி கொட்டியருளவேணும். கருங்குழலித்யாதி. கறுத்த திருக்குழலும், பிள்ளைத்தனத்தையு முடையவனே சப்பாணிகொட்டி யருளவேணும். ... ௧

மூ.—பொன்னரைநாணொடு மாணிக்கக்கிண்கிணி
தன்னரையாடத் தளிக்கட்டிதாழ்ந்தாட
என்னரைமேனின்றிழிந் துங்களாயர்தம்
மன்னரைமேற்கொட்டாய் சப்பாணி மாயவனே! கொட்டாய்சப்பாணி. ௨

பதவுரை.

பொன்— பொன்னால்செய்த
அரைநாணொடு— அரைநாணோடு சேர்ந்த
மாணிக்கம்— மாணிக்கத்தால் செய்யப்பட்ட
கிண்கிணி— கிண்கிணியான து

¶ (பா) " நவமாணிக்க மாகையாலே. "

மூ.—வெண்புழுதிமேற்பெய்துகொண்டளைந்ததோர் வேழத்தின்கருங்கன்றுபோல்
தெண்புழுதியாடித்திரிவிக்கிரமன் சிறுபுகர்படவியர்த்து
ஒண்போதலர்கமலச் சிறுக்காலுறைத்தொன்றுநோவாமே
தண்போதுகொண்ட தவிசின்மீதே தளர்நடைநடவானோ. கூ.

பதவுரை.

வெண் புழுதி— வெள்ளைப் புழுதியை
மேல் பெய்துகொண்டு— மேலே எறிட்டுக் கொண்டு
அளைந்தது— அளைந்த
ஓர்— ஒரு
கரு— கறுத்த
வேழத்தின் கன்றுபோல்— ஆனைக் குட்டி போலே
தெண்— தெள்ளிய
புழுதி— புழுதியிலே
ஆடி— விளையாடி
திரிவிக்கிரமன்— மூன்றடியால் உலகத்தை அளந்தவன்
சிறு புகர்பட— சிறிது திருமேனி புகர்த்துத் தோன்றும்படி
வியர்த்து— ஸ்வேதம் கொண்டு
ஒண்— அழகியதாய்
போது— உரிய காலத்திலே
அலர்— விகஸித்த
கமலம்— தாமரைப்பூப் போன்ற
சிறு— சிறிய
கால்— திருவடிகள்
உறைத்து— பதித்தவிடத்திலே
ஒன்றும் நோவாமே— ஒன்றும் நோவாதபடி
தண்— குளிர்ந்த
போதுகொண்ட— பூக்களையுடைய
தவிசின் மீது— மெத்தையின் மேல்
தளர்நடை நடவானோ.

வ்யா. ஒன்பதாம்பாட்டு. வெண்புழுதியித்யாதி. வெளுத்த புழுதியை மேலே எறிட்டுக்கொண்டு அளைந்ததொரு கரிய ஆனைக்கன்றுபோலே. தெண்ணித்யாதி. தெள்ளிய புழுதியைத் திருமேனியிலே எறிட்டுக்கொண்டு. திரிவிக்கிரமன். ஆச்ரிதருடைய இத்தனை பேணியும் செய்கைக்காகத் திருவடிகளின் மார்த்தவம் பாராதே லோகத்தை அளந்தவன். சிறுபுகர்பட வியர்த்து. எறிட்டுக்கொண்ட புழுதி ஸ்வேதபிந்துக்களாலே கரைந்தவிடங்களிலே திருமேனி சிறிது புகர்த்துத்தோன்றும்படி வியர்த்து. ஒண்போதித்யாதி. அழகியதாய்த் தானலர்ந்தகாலத்திலே மலர்ந்த தாமரைப்பூப்போலே இருக்கிற சிறியதான திருவடிகள் பதித்த விடத்திலே ‡ ஒன்றுறைத்து நோவாதபடியாக. தண்ணித்யாதி. குளிர்ந்த பூக்களையுடைத்தான மெத்தையிலே தளர்நடை நடவானோ. தவிசு-மெத்தை. ... கூ.

மூ.—திரைநீர்ச்சந்திரமண்டலம்போல் செங்கண்மால்கேசவன்றன்
திருநீர்முகத்துத்துலங்குசுட்டி திகழ்ந்தெங்கும்புடைபெயரப்
பெருநீர்த்திரையெழுகங்கையிலும் பெரியதோர்தீர்த்தபலம்
தருநீர்ச்சிறுச்சண்ணந்துள்ளஞ் சோரத்தளர்நடைநடவானோ. ௰.

பதவுரை.

திரை— அலை எழு...
நீர்— கடலின் இடையில் சஞ்சரித்தோற்றுகிற
சந்திர மண்டலம் போல்— சந்த்ர மண்டலம் போலே

‡ (பா) "ஒன்றுறுத்து."

செங்கண்—சிவந்த திருக்கண்களையும்
மால்—கறுத்த நிறத்தையு முடையனும்
கேசவன்—ப்ரசஸ்த கேசனுமான இவன்
தன்—தன்னுடைய
திரு—உஜ்ஜ்வலமாய்
நீர்—நீர்மையையுடைத்தான
முகத்து—திருமுகமண்டலத்தில்
துலங்கு—ப்ரகாசியாநின்ற
சுட்டி—சுட்டியானது
எங்கும் திகழ்ந்து—எங்கும் விளங்கி
புடைபெயர—இடமும் வலமுமாய் அசைய
பெரு—புண்ய தீர்த்தங்களில் சிறந்ததாய்
நீர்த்திரை எழு—வெள்ளை நீர் அலையெறியா நின்ற
கங்கையிலும்—கங்காநதியிலுங் காட்டில்
பெரியது—பெரியதாய்
ஓர்—அத்விதீயமான
தீர்த்தபலம்—தீர்த்தபலத்தை
தரும் நீர்—தரத்தக்க ஜலத்தையுடைய
சிறு சண்ணம்—சிறியசண்ணமானது [சண்ணம் - குஹ்யாவயவம்.]
துள்ளம் சோர—துளிக்கத் துளிக்க
தளர்நடை நடவானோ.

வ்யா. பத்தாம்பாட்டு. திருநீரித்யாதி. நிரைக்கிளப்பத்தை யுடைத்தான ஸமுத்ர மத்த்யத்திலே சலித்துத் தோற்றுகிற சந்த்ரமண்டலம்போலே. செங்கண்மாலித்யாதி. சிவந்த திருக்கண்களையும் அதுக்குப் பரபாகமான கறுத்த நிறத்தையு முடையனும் ப்ரசஸ்த கேசனுமிருக்கிறவன். மால்- கரியவன். தன்னித்யாதி. தன்னுடைய அழகியதாய் நீர்மையை யுடைத்தான திருமுகமண்டலத்தில் விளங்குகிற சுட்டியானது எங்குமொக்க ப்ரகாசித்து இடம் வலம் கொண்டசைய. பெருநீரித்யாதி. தீர்த்தங்களில் ப்ரசித்தமாய் ப்ரவாஹஜலம் மாறாமல் அலையெறிகிற கங்கையிலுங்காட்டில் பெரியதாய் அத்விதீயமான தீர்த்தபலத்தைத் தரும் ஜலத்தை யுடைத்தான சிறுச்சண்ணமானது துளிக்கத் துளிக்கத் தளர்நடை நடவானோ. ௰.

அ. நிகமத்தில், இத்திருமொழிகற்றார்க்கு பலம் சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ—ஆயர்குலத்தினில்வந்துதோன்றிய அஞ்சனவண்ணன்றன்னைத்
தாயர்மகிழவொன்னார் தளரத்தளர்நடைநடந்ததனை
வேயர்புகழ்விட்டுசித்தன்சீரால் விரித்தனவுரைக்கவல்லார்
மாயன்மணிவண்ணன்றாள் பணியுமக்களைப்பெறுவார்களே. கக.

பதவுரை.

ஆயர்குலத்தினில்—இடைக்குலத்திலே
வந்து தோன்றிய—வந்து ஆவிர்ப்பவித்த
அஞ்சனவண்ணன் தன்னை—மைபோன்ற வடிவையுடைய கண்ணனை
தாயர்— பெற்ற தாயான யசோதையும், அவளையொத்த பரிவர்களும்
மகிழ—ஹர்ஷிக்கவும்
ஒன்னார்—சத்ருக்கள்
தளர—மனமொடிந்து போகவும்
தளர்நடை நடந்ததனை—தளர்நடை நடந்தப்ரகாரத்தை
வேயர்—வேயரானவர்கள்
புகழ்—ச்லாகிக்கும்படியான
விட்டுசித்தன்—பெரியாழ்வார்
சீரால்—சீர்மையோடே
விரித்தன—விஸ்தரித்தருளிச் செய்த இவற்றை
உரைக்க வல்லார்—ஓதவல்லவர்கள்
மாயன்—ஆச்சர்ய சக்தியுக்தனும்
மணி வண்ணன்— நீலமணி போன்ற வர்ணத்தையுடையனுமான எம்பெருமானுடைய
தாள்—திருவடிகளிலே
பணியும்—அடிமைசெய்யத்தக்க
மக்களை—பிள்ளைகளை
பெறுவார்கள்— பெறுவார்கள்.

சங்குவில்வாள்தண்டுசக்கரமேந்திய
அங்கைகளாலேவந்தச்சோவச்சோ ஆரத்தழுவவந்தச்சோவச்சோ. ௨

பதவுரை.

செம் கமலப்பூவில்— செந்தாமரை மலரிலே
தேன் உண்ணும்— மதுபானம் பண்ணுகின்ற
வண்டே போல்— வண்டுகள்போலே
பங்கிகள்— கருண்ட கேசங்கள்
வந்து— வந்து
உன்— உன்னுடைய
பவள வாய்— பவளம்போன்ற அதரத்தை
மொய்ப்ப— மொய்க்கும்படியாக
சங்கு— ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும்
வில்— ஸ்ரீசார்ங்கதநுஸ்ஸையும்
வாள்— "ஸ்ரீநந்தகம்" என்னும் வாளையும்
தண்டு— ஸ்ரீகௌமோதகீ கதையையும்
சக்கரம்— ஸ்ரீஸுதர்சநாழ்வானையும்
ஏந்திய— தரித்துக்கொண்டிருக்கிற
அம் கைகளாலே— அழகிய கைகளாலே
வந்து அச்சோ அச்சோ.
ஆர— பரிபூர்ணமாக
தழுவ— தழுவும்படி வேணும்;
வந்து அச்சோ அச்சோ.

வ்யா. இரண்டாம்பாட்டு. செங்கமலமித்யாதி. செந்தாமரைப் பூவிலே மதுபானம் பண்ணுகிற வண்டுகள் போலே. பங்கிகளித்யாதி. சுருண்ட திருக்குழல்கள் வந்து உன் திருப்பவளத்தை மொய்க்கும்படியாக. சங்கித்யாதி. ஆச்ரிதவிரோதி நிரஸநத்துக்கும் அழகுக்குமுடலாய் உனக்கும்பரிகையே யாத்ரையாயிருக்கும் ஸ்ரீபஞ்சாயுதங்களை பூவேந்தினாற்போலே தரித்துக்கொண்டிருக்கு மவையாய், அவைதானும் மிகையாம்படி வெறும்புறத்திலே ஆலத்திவழிக்க வேண்டும்படியான அழகையுடைய திருக்கைகளாலே வந்து அணைத்துக்கொள்ளவேணும். ஆரவித்யாதி. ஸ்பர்சமாத்ரமாக வன்றிக்கே, பரிபூர்ணமாக அணைத்துக்கொள்ளவேணும். ... ... ... ... ... ... ௨

௩.—பஞ்சவர்தூதனாய்ப் பாரதங்கைசெய்து
நஞ்சுமிழ்நாகங்கிடந்த நற்பொய்கைபுக்கு
அஞ்சப்பணத்தின்மேற் பாய்ந்திட்டருள்செய்த
அஞ்சனவண்ணனேயச்சோவச்சோ ஆயர்பெருமானேயச்சோவச்சோ. ௩

பதவுரை.

பஞ்சவர் தூதனாய்— பாண்டவ தூதனாய்
பாரதம்— பாரதயுத்தத்திலே
கை செய்து— உதவி செய்து
நஞ்சு உமிழ்— விஷத்தை கக்குகின்ற
நாகம்— காளியனாகிய நாகம்
கிடந்த— வசித்துக்கிடந்த
நல் பொய்கை— க்ரூரமான பொய்கையிலே
புக்கு— புகுந்து
அஞ்ச— அஞ்சும்படியாக
பணத்தின்மேல்— அக்காளியனுடைய படங்களின்மேல்
பாய்ந்திட்டு— சென்று குதித்து
(அவ்வளவிலே அவன் சரணம்புக)
அருள்செய்த— அவன்மேல் க்ருபைபண்ணின
அஞ்சனவண்ணனே! அச்சோ அச்சோ;
ஆயர் பெருமானே!— இடைக் குலத்துக் காசனே,
அச்சோ அச்சோ.

வ்யா. நான்காம்பாட்டு. பஞ்சவரித்யாதி. துர்யோதநாதிகளாலே நெருக்குண்டு, ராஜ்யாதிகளை யிழந்து, உன்னையொழிய வேறொரு துணையின்றிக்கே நின்ற பாண்டவர்களை வர்க்கும் பாதந்த்ரனுக்கொண்டு தூதக்ருத்யத்திலே அதிகரித்து, துர்யோதநாதிகள் பக்கலிலே சென்று அவர்களையும் இவர்களையும் சேர்க்கப்பார்த்த விடத்தில் அவர்கள் இசையாமை யாலே, 'ஆனால் யுத்தத்தைப்பண்ணி ஜயித்தவர்கள் ஒருவர் ராஜ்யத்தை ஆளுங்கோளெ'ன்று சொல்லிப்போந்து, பின்பு பாண்டவர்களுக்காய் நின்று பாரதயுத்தத்திலே கையும் அணியும் வகுத்து யுத்தத்தை நடத்தி. வஞ்சித்யாதி. விஷத்தைப் புமிழாநின்ற காளியனுகிற ஸர்ப்பம் கிடக்கு கொடிய பொய்கையிலே அத்தை மதியாமற் சென்றுபுக்கு. நற்பொய்கையென்றது- விபரீதலக்ஷணையாய், காளியவிஷதூஷித மாகையாலே க்ரூரமான பொய்கை யென்றபடி. அஞ்சவித்யாதி. "ஆய்ச்சிமார்களு மாயருமஞ்சிட" என்கிறபடியே இந்த வ்ருத்தாந்தத் தைக் கேட்டு அருகலிலூரெல்லாரும் "என்னாகப்புகுகிறதோ" என்று பயப்படும்படி யாக. "கிளர்ந்தவைபக்ஷாதகத்தலைப் பாய்ந்தவனே" என்கிறபடியே அந்தக்காளியனுடைய பணங்களின்மேலே சென்று குதித்து ந்ருத்தம் செய்து அவனை நிக்ரஹித்து, (க) "ஸுமஹா ந்ரஸமா நாகாத் ரூயவிதமே" என்று தன்னுடைய ப்ராணரக்ஷணத்துக்காக அவன் சரணம்புகுந்த பின்பு அவன் பக்கலிலே அருளைப்பண்ணின. அஞ்சப்பணத்தின்மேல் பாய்ந் திட்டென்றது-காளியன்தானஞ்சும்படியாக அவன் பணத்தின்மேலே பாய்ந்தென்னவுமாம். அஞ்சனவண்ணனே. சாணுகதாக்ஷனம் பண்ணுகையாலே அஞ்சனம்போலே குளிர்ந்த புகர் பெற்ற திருமேனியை யுடையவனே யச்சோவச்சோ. ஆயர்பெருமானே. அமரர்பெருமானை மேன்மைக்கெதிர்த்தட்டாக ஆயர்பெருமானை நீர்மையையுடையவனே யச்சோவச்சோ. ச.

> நாறிய சாந்த நமக்கிறைநல்கென்னத்
> தேறியவளுந் திருவுடம்பிற்பூச
> ஊறிய கூனினை யுள்ளே யொடுங்கவன்
> றேறவுருவினாயச்சோவச்சோ வெம்பெருமான்! வாரா வச்சோவச்சோ. ரு.

பதவுரை.

| | |
|---|---|
| நமக்கு— "நம் உடம்புக்குத் தக்கதாய் | அன்று— அப்போது |
| நாறிய— பரிமளிதமாயிராநின்ற | ஊறிய— அவள்முதுகில் புறப்பட்டிருந்த |
| சாந்தம்— சந்தனம் | கூனினை— கூனை [கூன்-குப்ஜத்வம்.] |
| இறை— கொஞ்சம் | உள்ளே ஒடுங்க— சரீரத்திலுள்ளே அழுந் தும்படி |
| நல்கு என்ன— கொடுக்கவேணு" மென்று கூனியைக் கேட்க | ஏற உருவினாய்!— கைகளால்நிமிர்த்து உருவினவனே! |
| அவளும்— அந்த கூனியும் | அச்சோ அச்சோ; |
| தேறி— மனம் தேறி | எம் பெருமான்!— எங்கள்குலத்துக்கரசே! |
| திரு உடம்பில்— திருமேனியிலே | வாரா— வந்து- அச்சோ அச்சோ. |
| பூச— நல்லசாந்தைப் பூச | |

வ்யா. ஐந்தாம்பாட்டு. நாறியவித்யாதி. ¶ சாங்கொல்லியைக் கொன்று பரிவட்டங்கள் சாத்தி ஸ்ரீமதுரையிலே போய்ப்புகுந்தவளவிலே, கம்ஸனுக்குச் சாத்திட்டுப்போகும் கூனி,

(க) "ஸர்பாமாத்ந மபராதம் த்ஷந்துமர்ஹஸி." ¶ சாங்கொல்லி- கம்ஸனுடைய வண்ணான்.

இத்யாதிப்படியே ஸர்வஜ்ஞமாய்நின்று, ப்ரதிபக்ஷபூதரானவர்களுடைய அநேகம் தேருக்கு வேமாக அவனுடைய தேரை நடத்தினவனே. "ஆயுதமெடுக்க வொண்ணாது" என்கையாலே ஸாரத்யத்திலே அதிகரித்து, தேர்க்காலாலே ப்ரதிபக்ஷஸேனைகளைத் துகளாக்கி நுனுப்பித்து. "கொல்லமாக்கோல்" இத்யாதிப்படியே ஸாரத்யம் பண்ணின ஸாமர்த்யத்தாலேயிறே பூபாரநிரஸநம் பண்ணிற்று. காரொக்குமித்யாதி. வர்ஷாகாலமேகம்போலேயிருக்கிற திருமேனியை யுடையனும், கரியவாகிப் புடைபரந்திருக்கிற திருக்கண்களை யுடையனுமாயிருக்கிறவனே. இத்தால்- பூபாரத்தைப் போக்குகையாலும், ஆச்ரிதனான அர்ஜுநனை விஜயியாக்குகையாலுமுண்டான ஹர்ஷம் வடிவிலும் கண்ணிலும் தோற்றும்படி நின்ற நிலையைச் சொல்லுகிறது. ஆரத்யாதி. என்னுடைய அபிநிவேசம் தீரும்படி வந்து பூர்ணமாக அணைத்தருளவேணும். ஆயர்களித்யாதி. கோபர்க்கு பவ்யனும், அத்தாலே புத்ரோத்ஸவமான ஸ்வயம்போலே செருக்கியிருக்கிறவனே யச்சோவச்சோ. ... ... ௬

மூ.—மிக்கபெரும்புகழ் மாவலிவேள்வியில்
தக்கதிதன்றென்று தானம்விலக்கிய
சுக்கிரன்கண்ணைத் துரும்பாற்கிளறிய
சக்கரக்கையனேயச்சோவச்சோ சங்கமிடத்தானேயச்சோவச்சோ. எ.

பதவுரை.

மிக்க பெரு- மிகவும் பெருத்த
புகழ்- (ஔதார்யத்தாலுண்டான) கீர்த்தியையுடைய
மா வலி- மஹாபலியின்
வேள்வியில்- யாகத்திலே
(சென்று மூவடியாசித்தவளவிலே,)
இது- "இவனுக்கு தானஞ்செய்வது தக்கது அன்று என்று-தகுந்ததன்று" என்று
தானம்- பூமிதானத்தை
விலக்கிய- தடுத்த
சுக்கிரன்- அஸுரகுருவான சுக்ரனுடைய
கண்ணை- கண்ணை
துரும்பால்- திருக்கையில் பவித்ரத்தின் நுனியாலே
கிளறிய- கலக்கின
சக்கரக்கையனே!- திருவாழியைக்கையிலே யுடையவனே!
அச்சோ அச்சோ—;
சங்கம்- ஸ்ரீபாஞ்சஜந்யத்தை
இடத்தானே!- இடக்கையில் தரித்தவனே!
அச்சோ அச்சோ.

வ்யா. ஏழாம்பாட்டு. மிக்கவித்யாதி. ஔதார்யத்தாலே மிகவும் பெரிய புகழையுடையனான மஹாபலியுடைய யஜ்ஞவாடத்திலே இந்த்ரனுக்காக வாமநவேஷத்தைக்கொண்டு சென்று "மன்னவன், நான், மாவலி, மூவடி, தா" என்ன; "மலங்கொள் மாணாய்" என்கிறபடியே ஸர்வேச்வரத்வாபஹாரக்ஷமமான அவனுடைய வடிவழகாலும், அர்த்தித்வமாகச்சொன்ன (க)முக்தோக்தியாலும் மஹாபலி அபஹ்ருதசித்தனும், இவனபேக்ஷித்தது கொடுப்பதாக உத்யோகிக்கிறவளவிலே, குருவான சுக்ரன், இவன் வடிவும், வாத்தும், சொன்ன வார்த்தையும் அதிமாநுஷமாயிருக்கையாலே நிரூபித்து, "இவன் ஸர்வேச்வரன், தேவகார்யம் செய்பவன்தான், உன் ஸர்வஸ்வத்தையும் அபஹரிக்கவந்தான்; ஆனபின்பு, நீ தானம் பண்ணுகிற இது தகுதியன்று" என்று தானத்தை நிரோதிக்க; அவன் அதுகொள்ளாதே உதகம்

(க) முக்தோக்தி.

ரணைப் புகுந்தவளவிலே, உதகபாத்ர த்வாரத்திலே சுக்ரன் ப்ரவேசித்து உதகம் விழாத படி தகைய; அந்த த்வாரசோதநம் பண்ணுவாரைப்போலே திருக்கையில் திருப்பவித்ரத்தி னுடைய அக்ரத்தாலே அவன் கண்ணைக் கலக்கின திருவாழியைக் கையிலே யுடையவனே. 'குறும்பாற் றிகழ சக்கரக்கையன்" என்கையாலே - அந்த பவித்ராக்ரமாய்ப் புகுந்து அவன் கண்ணைக் கலக்கிற்று - 'கருதுமிடம் பொருந் திருவாழி' என்று தோற்றுகிறது. ஙகமிடந்தானே. ஒருகாலும் திருவாழிக்கும் ஸ்ரீபாஞ்சஜந்யத்துக்கும் பிரிவில்லையிறே. துணையாலே, அவன் வலக்கையிலே தோன்றும்போது இவன் இடக்கையிலே தோன்றும் படியாயிறே யிருப்பது. அச்சோவச்சோ. இப்படி யிருக்குமவ்வளவு கையு மாழ்வார்களுமான சேர்த்தியோடேவந்து அணைத்துக்கொள்ள வேணுமென்கை. ... ... ... எ.

மூ.—என்னிதுமாயமென் னப்பனறிந்திலன்
முன்னையவண்ணமே கொண்டளவாயென்ன
மன்னுநமுசியை வானிற்சுழற்றிய
மின்னுமுடியனேயச்சோவச்சோ வேங்கடவாணனேயச்சோவச்சோ. அ.

பதவுரை.

(திருக்கையிலே உதகம் விழுந்தவுடனே திருவடிகளை வளர்த்து அளக்கப்புக;)
இது— "நீ இப்படிசெய்வது
என் மாயம்— என்ன மாயமாயிரா நின்றதே!
என் அப்பன்— என்னுடைய தகப்பன்
அறிந்திலன்— (நீ இப்படிசெய்வாய் என்று முன்பு) அறியவில்லை;
(ஆதலால்;)
முன்னைய வண்ணமே கொண்டு— யாசிக்கும் போதிருந்த வடிவையே கொண்டு
அளவாய்— அளக்கக்கடவாய்"
என்ற— என்றுசொன்ன

மன்னு— தான்பிடித்த பிடிவிடாதேநிற்கு மவனான
நமுசியை— (மஹாபலிபுத்ரனான) நமுசியை
வானில்— ஆகாசத்திலே
சுழற்றிய— சுழற்றியெறிந்தவனும்
மின்னு— விளங்காநின்ற
முடியனே!— திருவபிஷேகத்தை யுடையவனே!
அச்சோஅச்சோ;
வேங்கடம்— திருவேங்கடமலையிலே
வாழ் நனே!—வாழும்படியானவனே!
அச்சோஅச்சோ.

வ்யா. எட்டாம்பாட்டு. என்னிதுமாயம். திருக்கையிலே உதகம் விழுந்தவாக்ஷணம் திருவடிகளை வளர்த்து அளக்கப்புக்கவாறே, இத்தைக்கண்ட மஹாபலிபுத்ரனான நமுசி ஓடிவந்து "இதுவென்" என்று வளருகிற திருவடிகளைத் தகைய; "நீ தகைகிறதென்? நான் உதகமேற்றது அளந்துகொள்ள வேண்டாவோ" என்ன; "நீ செய்தது க்ருத்ரிம மன்றோ" என்ன; "நீ க்ருத்ரிமமென்பானென்? என்னுடைய ப்ரஹ்மசர்ய வேஷத்தை யும் அர்த்தித்வத்தையுங்கண்டு உன்னுடையபிதா உதகதானம்பண்ணிப்போந்ததுபோய்யோ?" என்ன; "என்னுடைய பிதாவானவன் உன்னுடைய வஞ்சநத்திலேயகப்பட்டு உன்னுடைய படிபொன்று மறிந்திலன்" என்ன; "நான் செய்தது வஞ்சநமென்று நீ சொல்லுகிறது என்கொண்டு?" என்ன; "வஞ்சநமன்றாகில் நீ முற்பட்ட வடிவைக்கொண்டு அளவாய்"

அ. கீழ்த்திருமொழியிலே - யசோதைப்பிராட்டி, இவனுடைய சைசவாநுகுணமாக முன்னே போவந்து மேல்விழுந்து அணைத்துக்கொள்ளும் ரஸத்தை யநுபவிக்க வாசைப்பட்டு அச்சோ வென்கிற தன்னுடைய உக்தியாலும் அதற்கு அநுகுணமான தன்னுடைய ஹஸ்தமுத்ரையாலும் வந்தணைத்துக்கொள்ளவேணுமென்று அவனை யபேக்ஷித்து அந்த ரஸத்தை யநுபவித்தபடியை, தம்முடைய ப்ரேமாநுகுணமாக, தாமும் அப்படியே அபேக்ஷித்து அநுபவித்தாராய் நின்றார்; அவ்வளவன்றிக்கே, அவன் தன்னுகப்பாலே போவந்து முதுகிலே மேல்விழுந்து அணைத்துக்கொள்ளும் சேஷ்டிதாஸத்தையும் அநுபவிக்க வாசைப்பட்டு, "புறம்புல்குவான்" என்று அதுதன்னை அவனைக்குறித்தபேக்ஷித்து, அவனும் அப்படிசெய்ய அவளநுபவித்த ப்ரகாரத்தை, அவ்வளவுமல்லாத ப்ரேமத்தையுடைய தாம், அந்த சேஷ்டிதத்தை யநுபவிக்கையிலுண்டான ஆசையாலே அவனுடையமென்மையையும் நீர்மையையும் சொல்லிப்புகழ்ந்துகொண்டு, "புறம்புல்குவான், புறம்புல்குவான்" என்று பலகாலுமபேக்ஷித்து, தத்காலம்போலே தர்சித்து ப்ரீதரா யநுபவிக்கிறு ரித்திருமொழியில். ... ... ... ... ... *

மூ.—வட்டுநடுவே வளர்கின்றமாணிக்க<br>
மொட்டுநுனையின்முளைக்கின்றமுத்தேபோல்<br>
சொட்டுச்சொட்டென்னத் துளிக்கத்துளிக்கவென்<br>
குட்டன்வந்தென்னைப்புறம்புல்குவான் கோவிந்தனென்னைப்புறம்புல்குவான். க.

பதவுரை.

வட்டு நடுவே — இரண்டு சீலாத்ர வட்டின் நடுவே
வளர்கின்ற— வளராநிற்கிற
மாணிக்கம்— மாணிக்கத்தால் செய்யப்பட்ட [நடுவே
மொட்டு— மொட்டினுடைய [மொட்டு-குஹ்யாவயவம்.]
நுனையில்— நுனியிலே
முளைக்கின்ற— அரும்பாநிற்கிற
முத்து போல்— முத்துக்கள்போலே
சொட்டுச்சொட்டு என்ன-"சொட்டுசொட்டு" என்று
துளிக்கத்துளிக்க- (உள்ளில்நின்றும் புறப்படுகிற ஜலபிந்துக்கள்) பலகாலும்துளிக்க
என்— எனக்கு பவ்யனான
குட்டன்— குழந்தையானவன்
வந்து— தானேவந்து
என்னை— என்னை
புறம்புல்குவான்— முதுகிலணைத்துக்கொள்வானாக; (அல்லது;) முதுகிலணைத்துக்கொள்ளாநின்றான்,
கோவிந்தன்— பசுமேய்க்கப்பிறந்தவன்
என்னைப்புறம்புல்குவான்.

வ்யா. முதற்பாட்டு. வட்டிப்பாதி. இரண்டு சீலாத்ரவட்டின் நடுவே வளராநிற்பதொரு சீலாத்ரத்தாலுண்டான மொட்டினுடைய அக்ரத்திலே அரும்பாநிற்கிற முத்துக்கள் போலே. சீலாத்ர மொட்டென்றது - நிறத்தையும் ஆகாரத்தையும்பற்ற. சொட்டிப்பாதி. உள்ளில்நின்றும் புறப்படுகிற ஜலபிந்துக்களிற்று முறித்து சொட்டுச்சொட்டென்னப் பலகாலும் துளியாநிற்க. சொட்டுச் சொட்டென்கிற திது அநுகாரம். என்குட்டனிப்பாதி. என் பின்னேவந்து என்னைப் புறம்புல்குவான். கோவிந்தன். ஸுலபனானவன் என்னைப் புறம்புல்குவான். புறமென்று - முதுகு. புல்குதலாவது - தழுவுகை. புல்குவான் என்று- அபேக்ஷிக்கை. அன்றிக்கே, புல்குவான் என்றது- புல்குகிறவனென்றபடி. அப்போது - இத்தலை அபேக்ஷிக்கவன்றிக்கே, அவன் தானேவந்து புல்குகிறபடியைச் சொல்லுகிறதாம். இது "ஆழிப்பிரான் புறம்புல்கிய" என்கிற நிகமத்துக்கு மிகவும்சேரும். ... ... க.

மூ.—கிண்கிணிகட்டிக் கிறிகட்டிக் கையினில்
கங்கணமிட்டுக்கழுத்திற்றொடர்கட்டித்
தன்கணத்தாலே சதிராநடந்துவந்து
என்கண்ணனென்னைப்புறம்புல்குவா னெம்பிரானென்னைப்புறம்புல்குவான். உ.

பதவுரை.

கிண்கிணி— சதங்கையை
கட்டி— திருவரையில் கட்டியும்
கிறி— சிறுப்பவளவடத்தை
கட்டி— முன்கையிலே கட்டியும்
கையினில்— புறத்திலே
கங்கணம்— திருத்தோள்வளையை
இட்டு— சாத்தியும்
கழுத்தில்— கண்டத்திலே
தொடர்—கண்டிகையை
கட்டி— சாத்தியும்
தன் கணத்தாலே— அந்த திருவாபரணத் திரளோடே
சதிரா— அழகிதாக
நடந்து வந்து— நடந்து வந்து
என்— என்னுடைய
கண்ணன்— கண்ணனானவன்
என்னைப் புறம்புல்குவான்;
எம்பிரான்— எனக்குஸ்வாமியானவன்
என்னைப்புறம்புல்குவான்.

வ்யா, இரண்டாம்பாட்டு. கிண்கிணியித்யாதி. திருவரையிலே கிண்கிணியைக்கட்டித் திருமுன்கையிலே கிறியைக்கட்டி. கிறி- சிறுப்பவள வடம். கங்கணமித்யாதி. திருத்தோள் வளையிட்டுத் திருக்கழுத்திலே சங்கிலியாகிற வாபரணத்தைச்சாத்தி. தன்கணத்தாலே. திருவாபரணத் தன்னுடைய திரளோடே. திருவாபரண ப்ரகரணமாகையாலே அநுக்தமான திருவாபரணங்களையும் கட்டி, கணமென்கிறது. அன்றிக்கே, தன்கண்ணாலே என்னைக் கடாக்ஷித்துக்கொண்டென்னுதல். சதிர்- சாரியை. சதிராநடந்துவந்து. ஸாஸ்த்ரீயபடி நடந்து வந்து. அன்றிக்கே, அழகிதாக நடந்துவந்தென்னுதல். என்கண்ணன். எனக்கு ஸுலபனானவன், என்னைப் புறம்புல்குவான். எம்பிரான். எனக்கு ஸ்வாமியானவன், என்னைப் புறம்புல்குவான். ... ... ... ... ... ... உ.

மூ.—கத்தக்கதித்துக் கிடந்தபெருஞ்செல்வம்
ஒத்துப்பொதிந்துகொண் டுண்ணாதுமண்ணாள்வான்
கொத்துத்தலைவன்குடிகெடத்தோன்றிய
அத்தன்வந்தென்னைப்புறம்புல்குவானாயர்களேறென்புறம்புல்குவான். ௩.

பதவுரை.

கத்தக்கதித்து கிடந்த— மிகவும் கொழுத்துக் கிடந்த
பெரும் செல்வம்— பெரிதான ஐச்வர்யத்தை
ஒத்து— பாண்டவர்களோடு ஒத்து
பொதிந்துகொண்டு— நெஞ்சு பொருந்திக் கொண்டு
உண்ணாது— ஜீவியாமல்
மண்— பூமிப்பரப்படங்கலும்
ஆள்வான்— தானொருவனுகவே ஆளுவதாக யோசித்திருந்தவனும்
கொத்து— துச்சாஸனாதி ப்ராதர்பந்து வர்க்கத்துக்கு

நிக்கே, ஸ்ரீத்யாநிக்கு - ஆச்ரித பாரதந்த்ர்யமாகிற குணத்தாலே பலர்க்கிறனும், இச்சீர்மைக்கும் மேன்மைக்கும் ப்ரகாசகமான சிவந்த திருக்கண்களை யுடையனும் வாத்ஸல்ய ரத்நாகரனா யிருக்கிறவன் விஷயத்திலே யென்று பொருளாகவுமாம். தென்றலித்யாதி. பாடல் வல்லார் தாம் செங்கண்மால் பக்கலிலே பொருபடிப்படைச் சென்ற மால்களை யுடையவராவர். ௧௧.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.

அடிவரவு.—அரவிலை வைத்த நந்தம் கஞ்சன் தீய மின்
வெண்ணெய் இருமலை பங்கமல மோட வாரணி போய்.

ஆக - திருமொழி, ௧௧ - க்கு, பாட்டு- ௧௨௬.

அ. கீழ்த்திருமொழியிலே இவனுடைய பால்யாநுகுணமாக முலை யுண்கையை மறந்துகிடக்க உறங்குகிறவனை யெழுப்பி, முலையுண்ணாயே யென்று பேசுவித்து, அவன் இருப்பிறுகுமளவிலும் விடாதே பஹுமுகமாக நிர்ப்பந்தித்து பசிசனைப்பிரட்டி முலை யூட்டினப்ரகாரத்தை, அவளுடைய ப்ராப்தியையும் ஸ்நேஹத்தையு முடையளாய்க்கொண்டு தத்காலம்போலே அவனைக்குறித்துப் பேசி யநுபவித்து இனியரானார்; அவன் அவனுக்குக் காதுகுத்திக் காதுபெருக்கிக் காதுப்பணிகளுமிட்டநுபவிக்க வாசைப்பட்டு, காதுகுத்துகையாகிற உத்ஸவத்துக்கு ஊரில் பெண்களை யெல்லாம் அழைத்துவிட்டு, வந்தவர்களை ஸம்பாவிக்கைக்கீடான பதார்த்தங்களும் ஸம்பாதித்துவைத்து, "அவனைக் காதுகுத்த" என்று அழைக்க, அவன் "நோம்" என்று அஞ்சி, "மாட்டேன்" என்னச் செய்தேயும் அவனை இசையும்படியான வசனங்களைச் சொல்லியும் அவனுக்கு அபிமதமான பதார்த்தங்களைக் காட்டியும் உடன்படுத்திக்கொண்டு காதுபெருக்கின ப்ரகாரத்தை, தாமும் அவளைப்போலே அநுபவிக்கவாசைப்பட்டு, தத்பாவத்தை ப்ராப்தராய்க்கொண்டு தத்காலம்போலே அவனைக்குறித்து அப்ப்ரகாரங்களைப் பேசி யநுபவித்து ப்ரீதராகிறார் இத்திருமொழியில். ... ... ... க

மூ.—போய்ப்பாடுடைய நின்தந்தையும் தாழ்த்தான் பொருதிறற் கஞ்சன்கடியன்
காப்பாருமில்லைக் கடல்வண்ணா வுன்னைத்தனியே போயெங்குந்திரிதி
பேய்ப்பால் முலையுண்ட பித்தனே கேசவநம்பீ யுன்னைக்காதுகுத்த
ஆய்ப்பாலர் பெண்டுகளெல்லாரும் வந்தாரடைக்காய் திருத்திநான்வைத்தேன். க.

பதவுரை.

பாடு உடைய— ஸ்வஜாதிகளாத்தில் பரிவை யுடைய
நின் தந்தையும்— உன் தமப்பனும்
போய்— பசுமேய்க்கப்போய்

தாழ்த்தான்— வருவதற்குத் தாமதித்தான்;
பொரு— யுத்தம் செய்யத்தக்க
திறல்— மிடுக்கையுடைய
கஞ்சன்— கம்ஸனானவன்

வன் புற்று அரவின்— வலியபுற்றிலே பதுங்கிக் கிடக்கிற பாம்புக்கு
பகை— சத்ருவான கருடனை
கொடி— த்வஜமாகவுடையனும்
வாமன நம்பீ!— * குறள் பிரமசாரியாகப் போய் அபிமதம்பெற்று பூர்ணனானவனே!
உன் காதுகள்— உன்னுடைய காதுகள்
தூரும்— தூர்ந்துவிடும்
உற்றன— ஆச்ரிதர்கள்பட்ட
துன்பு எல்லாம்— துன்பத்தை யெல்லாம்
தீர்ப்பாய்!— தீர்க்குமவனே!
பிரானே!— உபகாரகனானவனே!
திரி இட்டு— உன்காதில் திரியை இட்டு
மெய் ¶ சொல்லுகேன்— மெய்யே சொல்லக் கடவேன்.

¶ "செல்லுகேன்" என்று பாடமான போது "உன்காதில் திரியை இட்டுவிட்டு மெய்யே நடக்கப்போய் கிடக்கிறேன்" என்று பொருளாகக்கடவது.

வ்யா. எட்டாம்பாட்டு. என்குற்றமிற்பாதி. "நீ உன் குற்றம் சொல்லி வெருக்கிறது நான் உன்சொல்லிற்றுச் செய்திலன் என்று என் குற்றத்தை நினைத்தன்றோ, என் குற்றமேயென்று சொல்லவும்வேண்டாகாண்" என்ன; "பின்னை யார்குற்றம்" என்ன; "உன்குற்றமில்லையோ" என்ன; "உன்னை நான் என் செய்தேன்" என்ன; என்னை நான்மண்ணுண்டேனாக நினைத்து. அன்புற்றுநோக்கி. ஸ்ரோத்ரியனைப்போலே என்னுடைய வாயிலும் கையிலும் மண்ணுண்டேனோவென்று பார்த்து. அடித்தும்பிடித்து மனைவர்க்கும் காட்டிற்றிலையே. சுவடு கண்டாளைப்போலே என்னைப் பிடித்தும், அவ்வளவன்றிக்கே அடித்தும், "பாரீர்கோள் இவன் மண்தின்னும்படி" என்று எல்லார்க்கும் காட்டிற்றில்லையோ வென்ன; வன்புற்றரவின் பகைக்கொடி வாமன நம்பீ. வலிய புற்றிலே (க) பாதகபீதியாலே கிடக்கும் பாம்புக்குப் பகையான கருடனை த்வஜமாகவுடையனும், *வெறுத்தோனால் நிலங்கொண்ட வாமனனை முதலியானவனே. இத்தால்- திருவனந்தாழ்வானைப் படுக்கையாகக்கொண்டு பெரியதிருவடியை த்வஜமாகக்கொண்டிருப்பானொருவனுமையாலே, லோகத்தில் ஒன்றுக்கொன்று சோரதகாபுள்ளவற்றைச் சேர்த்து நடத்தவல்லனாய், க்ரூரமாகச் செய்தவற்றை ஸ்யாமமாக்கவும் வல்லவனன்றோ வென்கை. உன்காதுகள் தூரும். இப்படி நீயொன்றுசொல்ல நானொன்றுசொல்லிப் போதுபோக்கியிருந்தால் உன்னுடைய காதுகள் தூருங்காண். துன்புற்றனவெல்லாம் தீர்ப்பாய்பிரானே. ஆச்ரிதரானவர்கள் துன்பப்படுமவையெல்லாம் போக்குமுபகாரகனானவனேயென்ன; நீ என்னை வ்ரதஸ்தம்பண்ணவேண்டா, 'இனியுன்னை முன்போல் பிடிக்குதல், அடிக்குதல் செய்யேன்' என்று மெய்யாக ஒரு வார்த்தை சொல்லு - நான் திரியிடுகைக்கு இசையும்படியென்ன; திரியிட்டுச் சொல்லுகேன்மெய்யே. திரியையிட்டுவிட்டாறே பின்னை மெய்யே சொல்லக்கடவேனென்கிறான். ... ... ... ... ... அ

மூ.—மெய்யென்றுசொல்லுவார் சொல்லைக்கருதித் தொடுப்புண்டாய் வெண்ணெயை
கையைப்பிடித்துக் கரையுரலோடென்னைக் காணவே கட்டிற்றிலையே [யென்று
செய்தனசொல்லிச் சிரித்தங்கிருக்கிற் சிரீதரா வுன்காதுதூரும்
கையிற்றிரியை யிடுகிடா யிந்நின்ற காரிகையார் சிரியாமே. கூ

(க) பாதகபீதி.

வ்யா. என்கிறபாட்டு. கஞ்சனித்யாதி. கம்ஸப்ரேரிதனாய்வந்த அதிக்ரூரனான சகடாஸுரனை, முலைவரவு தாழ்த்ததுச்சீறி நிமிர்த்த திருவடிகளாலே கலக்கழியும்படி யுதைத்து. வஞ்சகமித்யாதி. தாய்வடிவுகொண்டுவந்த வஞ்சகியான பேய்ச்சி முடியும்படியாக அவள் முலையிலே உன் திருப்பவளத்தைவைத்து உண்ட வ்யபாரகனானவனே. சகடாஸுரன் கையிலும் பூதனைகையிலும் அகப்படாமல் உன்னை நோக்கித்தந்த வ்யபாரகனானவனென்றுமென்கை. மஞ்சளுமித்யாதி. உன் திருமேனிக்கு நிறம்பெறச் சாத்துகைக் கீடான மஞ்சளும், உன் திருமுடிக்கலங்காரமாகச் சாத்தத்தக்க செங்கழுநீர் மாலையும், உன் திருமேனிக்கனுகுணமாம்படி ஆறிக்குளிர்ந்து மணத்திருக்கிற சாந்தும், உன்னுடைய திருக்கண்களுக்குச் சாத்துகைக்கீடான அஞ்சனமும் கொண்டுவந்து வைத்தேன். அழகனே நீராடவாராய் இவையெல்லாம் நிலைமாம்படியான வழகையுடையவனே! உன்னழகு தோன்றும்படி திருமஞ்சனம் செய்ய வரவேணும் ... ... ... ... ௨.

௴—அப்பங்கலந்த சிற்றுண்டி யக்காரம் பாலிற்கலந்து
சொப்படநான் சுட்டுவைத்தேன் தின்னலுறுதியேனம்பீ!
செப்பிள மென்முலையார்கள் சிறுபுறம்பேசிச் சிரிப்பர்
சொப்பட நீராடவேண்டுஞ் சோத்தம்பிரா னிங்கேபோதராய். ௩.

பதவுரை.

நம்பீ!— பூர்ணனானவனே!
நான்— தாயான நான்
அப்பம் கலந்த— அப்பத்தோடே சேர்ந்த
சிறு உண்டி— சிற்றுண்டியை
பாலில்— பாலிலே
அக்காரம் கலந்து— $ கருப்புக்கட்டியை இட்டுப் பிசைந்து
சொப்பட— நன்றாக
சுட்டு வைத்தேன்— பக்வமாக்கி வைத்தேன்;
தின்னல் உறுதியேல்— அவற்றை அமுது செய்ய விருப்புற்றிருந்தாயாகில்
சொப்பட— நன்றாக
நீர் ஆடவேண்டும்— திருமஞ்சனம் கொண்டருளவேணும்;

(நீ நீராடா திருந்தால்,)
செப்பு— செப்புப்போன்ற வடிவை யுடைத்தாய்
இள— இளையதாய்
மெல்— ம்ருதுவான
முலையார்கள்— முலையை யுடையவர்கள்
சிறு— தோற்றின சேஷ்டிதங்களை
புறம்பேசி— காணாதவிடங்களிலே சொல்லி
சிரிப்பர்— பரிஹஸிப்பார்கள்;
பிரான்!— ஸ்வாமியே!
சோத்தம்— உன்னைத் தொழுகிறேன்;
இங்கே போதராய்— (அவர்கள் பரிஹஸிக்க இடமறும்படி) இங்கே வரவேணும்.

வ்யா. இத்தாம்பாட்டு. அப்பமித்யாதி. அப்பத்தையும் அத்தோடே சேர்ந்த சிற்றுண்டியாகிற அபூப விசேஷத்தையும். அக்காரம் பாலில்கலந்து. பாலிலே கருப்புக்கட்டியையிட்டுப் பிசைந்து. சொப்படவித்யாதி. நன்றாக நான் சுட்டுவைத்தேன். சொப்பட நன்றாக. தின்னலுறுதியேல் நம்பீ. பின்னைத்தனத்தில் பூர்த்தியை யுடையவனே! அமுது செய்யவேணுமென்று அதிலே உற்றிருந்தாயாகில், நீராடவேண்டுமென்று மேலே அந்வயம். செப்புப்போலேயிருக்கிற வக்ஷோஜத்தையுடைத்தாய் இளையதாய் ம்ருதுவாயிருக்கிற முலை

$ கருப்புக் கட்டி-இக்ஷு கண்டம்.

௬.—கிழக்கிற்குடிமன்னர் கேடிலாதாரை
அழிப்பானினைந்திட் டவ்வாழியதனால்
விழிக்குமளவிலே வேரறுத்தானைக்
குழற்கணியாகக் குழல்வாராயக் காக்காய்
கோவிந்தன்றன் குழல்வாராயக் காக்காய். ௬.

பதவுரை.

கேடு இலாதாரை— க்ஷுத்ரசாபத்தால் ஒரு குறையுமில்லாத இந்த்ராதிகளை
அழிப்பான்— அழிப்பதாக
நினைந்திட்ட— நினைத்த
கிழக்கில் குடி— ப்ராக்ஜ்யோதிஷ புரவாஸிகளான
மன்னர்— நரகாஸுரன் முதலானவர்களை
விழிக்கும் அளவிலே— ஒரு நிமேஷப் பொழுதிலே [கண்மூடித்திறப்பதற்குள்ளே]
வேர் அறுத்தானை— வேரற்றுப் போம்படி பண்ணினவனுடைய
குழற்கு— திருக்குழலுக்கு
அணி ஆக— அலங்காரமாக
குழல் வாராய் அக்காக்காய்;
கோவிந்தன்— பசு மேய்ப்பவனுடைய
தன் குழல்— சிறந்த குழலை
வாராய் அக்காக்காய்.

வ்யா. ஆறும்பாட்டு. கிழக்கில் குடிமன்னர். ப்ராக்ஜ்யோதிஷ புரவாஸிகளாய் நரகாஸுரப்ரப்ருதிகளான ராஜாக்களை. கேடிலாதாரை. வரபல புஜபலங்களையுடையராகையாலே நமக்கொருகேடில்லையென்று நினைத்திருந்தவர்களை. அழிப்பான் நினைந்திட்டு. ஆச்ரிதரான இந்த்ராதிகளை நலிகையாலே அழிக்கத் திருவுள்ளம் பற்றி. அவ்வாழியதனால். * கருதுமிடம் பொருமதாய், "அறமுயலாழி" என்கிறபடியே தன்னினுங்காட்டில் ஆச்ரிதவிரோதி நிரஸனத்தில் மிகவும் முயலாநிற்கும் ஏற்றத்தையுடைய திருவாழியாலே. விழிக்குமளவிலே வேரறுத்தானை. இமைத்து விழிக்கும் முன்னே ஸமூலமெடுத்துப் போகட்டவனை. அதவா, கேடிலாதாரை யழிப்பான் நினைந்திட்டு- கிழக்கில் குடிமன்னர்- விழிக்குமளவிலே- ஆழியதனால்- வேரறுத்தானை என்று அந்வயமாக்கி- "நமக்கு ரக்ஷகனும் ஈச்வரன் உண்டு" என்றிருக்கையாலே- தங்களுக்கொரு கேடின்றிக்கே யிருக்குமிந்த்ராதிகளை அடர்த்தழிப்பதாகக் கோலின ப்ராக்ஜ்யோதிஷபுரவாஸிகளான நரகப்ரப்ருத்யஸுரராக்ஷஸர்களை யழிக்கப் பார்க்கிற அளவிலே அச்செய்தி இந்த்ரன் வந்து விண்ணப்பஞ்செய்தவாறே, பெரியதிருவடியை மேற்கொண்டு நகரபுரத்திலே யெழுந்தருளி * கருதுமிடம் பொருமவ்வ திருவாழியாலே அந்த நரகாதிகளை மறுகிளையுண்டாகாதபடி அறுத்துப்போகட்டவனென்னவுமாம். குழற்கணியாகக் குழல்வாராய். திருக்குழலுக்கு அழகு பிறக்கும்படி குழல்வாராய். கோவிந்தன். பாலனத்திலே தீர்ந்த வ்யாபாரங்களையுடையவன். தன்குழல். விலக்ஷணமான குழல். ... ... ... ... ... ... ... ௬.

௭.—பிண்டத்திரளையும் பேய்க்கிட்ட நீர்ச்சோறும்
உண்டற்குவேண்டி நீ யோடித்திரியாதே
அண்டத்தமரர் பெருமானழகமர்
வண்டொத்திருண்ட குழல்வாராயக் காக்காய்
மாயவன்றன் குழல்வாராயக் காக்காய். ௭.

பிறங்கு ஒளி— மிகவும் செவ்வியையுடைய வெண்ணெயும்— பசு வெண்ணெயும் உண்டோ வென்று சோதிக்கின்றான்— ஆராய்கின்றான்; ( இத்தீம்புகளைக்குப் பொறுக்கப் போகாமையால், )

உன் மகன் தன்னை— உன்பிள்ளையை கூவிக்கொள்ளாய் — அழைத்துக்கொள். இவையும் — இப்படி இவனைத்தீம்பிலே கைவளர விட்டிருக்கிறவிதுவும் சிலவே— ஒரு பிள்ளைவளர்க்கையோ? என்று சேரிப்பெண்கள் முறையிடுகிறபடி.

வ்யா. கன்னல். கருப்புக்கட்டி. இது, மேற்சொல்லுகிறவை யெல்லாவற்றோடும் அந்வயித்துக் கிடக்கிறது. கருப்புக்கட்டியோடே சமைத்தவை, லட்டுவுக்காட்டில் சவிக்கு மிறே. இலட்டுவத்தோடு சீடை காரெள்ளினுண்டை. இலட்டுகமாவது - ஓரபூபவிசேஷம் அத்தோடே சீடையையும், கறுத்த எள்ளினாலே செய்த உண்டையையும், கலத்திலிட்டு அத ற்குத்தகுதியான பாத்ரங்களிலே யிட்டு, என்னகமென்று நான் வைத்துப்போந்தேன். என் னகமன்றோ, இங்குப் புகுவாரில்லையே யென்று வைத்து நான் புறம்போந்தேன். இவன் புக் கவற்றைப் பெறுத்திப்போந்தான். நான் போனதே அவகாசமாக இவன் சென்று புக்கு அவ ற்றை நான் பெறும்படி பண்ணிப்போந்தானென்று வ்யதிரேகமாகச் சொல்லுகிறான். அது வது - அவற்றில் எனக்கொன்றும் லபியாதபடி தானே ஜீவித்துப்போந்தானென்கை. பின் னுமகம்புக்குறியை நோக்கி. அதுபோராமல் மீண்டும் அகத்திலேபுக்கு உறியைப்பார்த்து. பிறங்கொளி வெண்ணெயும் சோதிக்கின்றான். மிகவும் செவ்வியையுடைத்தான வெண்ணெயு முண்டோவென்று ஆராய்கின்றான். உன்மகனித்யாதி. யசோதைப்பிராட்டீ ! உன்னு டைய பிள்ளையானவனை அங்குமின்றும் தீம்புசெய்யாதே உன்னருகேயழைத்துக்கொள்ளாய். இவையும்சிலவே. இப்படி யிவனைத்தீம்பிலே கைவளரவிட்டிருக்கிற விவையும் ஒருபிள்ளை வளர்க்கையோ.

அன்றிக்கே, உன்மகன்றன்னை யசோதைநங்காய் கூவிக்கொள்ளாயென்று - குணபூர் த்தியையுடைய யசோதாய்! அவனும் உன்னைப்போலே குணபூர்த்தியையுடையனாம்படி உன் னருகே யழைத்துக்கொள்ளா யென்றவாறே, என்னுடைய குணபூர்த்தியும் அவனுடைய தோஷங்களும் சொல்லிக்கதுகைபோ உங்களுக்குள்ளது,சிறுபிள்ளைகள் படைத்திறக்(கு)த் குரம்பையளவிலேபுக்கு கண்டவற்றைப் பொறுக்கி வாயிலேயிட்டவதன்றோ,உங்கள் பிள்ளை கள்தாமே உங்களுக்கு வசவர்த்திகளாய்த் திரிகிறன என்று இவள் இவர்களை வெறுத்து கிழுக்கையாக, அவன் செய்தவற்றுக்குமேலே, இவையும் சிலவேயென்று - இவள் இன்னும் பாலே சொல்லுகிறு ளாகவுமாம். ... ... ... ... ... க.

அ. பத்தாம்பாட்டு. " உன்மகன்றன்னை யசோதை நங்காய் கூவிக்கொள்ளாய் " என்று ஒருத்திசொல்லி வாய்மாறுவதுக்குமுன்னே வேறே யொருத்திவந்து, தன்னுடைய க்ருஹத்தில் இவன் செய்த தீம்புகளை முறைப்பட்டபடியைச் சொல்லுகிறது.

மூ.—சொல்லிலரசிப்படுதிநங்காய் சூழலுடையனுன்பிள்ளைதானே
இல்லம்புகுந்தென் மகளைக்கூவிக் கையில்வளையைக் கழற்றிக்கொண்டு
கொல்லையினின்றுங் கொணர்ந்துவிற்ற வங்கொருத்திக் கவ்வளைகொடுத்து

பதவுரை.

நங்காய் — குணபூர்ணையான யசோதாய்!
சொல்லில் — உன்மகன் செய்த தீம்புகளைச் சொன்னால்
அமர்ப்படுதி — கோபியாநின்றாய்;
உன் பிள்ளைதான் — உன் பிள்ளையானவன்
சூழல் உடையன் — பற்பல வஞ்சகச் செய்கைகளை உடையனாயிராநின்றான்;
இல்லம் புகுந்து — என் வீட்டில் நுழைந்து
என்மகளை — என் பெண்பிள்ளையை
கூவி — பேர் சொல்லியழைத்து
கையில் — அவள் கையிலிருந்த
வளையை — அடையாளவளையை
கழற்றிக்கொண்டு — கழற்றிக்கொண்டுபோய்
கொல்லையில் நின்றும் — கொல்லையிலிருந்து
கொணர்ந்து — தெருவில் கொண்டுவந்து
அங்கு — அவ்விடத்திலே
விற்ற — நாவற்பழம்விற்ற
ஒருத்திக்கு — ஒருபெண்ணுக்கு
அவ்வளை — அந்தவளையை
கொடுத்து — கொடுத்து
நல்லன — தன்மேனிபோலொத்து அழகியதான
நாவல் பழங்கள் — நாவற்பழங்களை
கொண்டு — வாங்கிக்கொண்டு
(போரும் போராதென்று சொல்லுகிற வளவிலே நான் கண்டு 'இவ்வளை இவனுக்கு நீயோ தந்தாய்?' என்று கேட்க;)
நான் அல்லேன் என்று — 'இவ்வளை கொடுத்தவன் நானல்லேன்காண்' என்று சொல்லிக்கொண்டு
சிரிக்கின்றான் — சிரியாநின்றான்.

வ்யா. சொல்லிலமர்ப்படுதி நங்காய். முன்பே ஒருத்தி சொன்னதுக்குமேலே புண்ணின்மேல் புண்ணாக இவளுமொருத்தி வந்து தன்மகன் குறைகளைச் சொல்லப்புக்கவாறே, இதுவுமொரு தெருவோ! என்று தாயான யசோதைப்பிராட்டி குபிதையாக; நங்காய்! உன் பிள்ளை செய்தவற்றைச்சொல்லில் நீ கோபியாநின்றாய். சூழலுடையன் உன்பிள்ளைதானே - உன்பிள்ளையானவன்றானே தவறுமாய் உனக்குவந்து சொல்லியல்லது நிற்கவொண்ணாதபடியான சூழல்களை யுடையனாயிராநின்றான். சூழலாவது-சூழ்ச்சி. அதாவது-நாநாவான வ்ருத்திமைகைகள். அவற்றில் இவனுக்கில்லாதது இல்லையென்ன; இப்படி சொல்லுகைக்கு அவன் இப்போது தவறுமாகச் செய்ததுதான் ஏது, அத்தைச் சொல்லென்னச் சொல்லுகிறாள்மேல்; இல்லம் புகுந்தென் மகளைக்கூவி. என்னகத்திலே புகுந்து என்மகளைப் பேரைச் சொல்லியழைத்து. கையில்வளையைக் கழற்றிக்கொண்டு. அவள்கையில் ‡அடையாளவளையைக் கழற்றிக்கொண்டுபோய். கொல்லையிற்போதி. கொல்லையில் நின்றும் கொண்டுவந்து, அங்கே நாவற்பழம் விற்கிறவொருத்திக்கு அவ்வளையைக்கொடுத்து. நல்லன நாவற்பழங்கள்கொண்டு. தனக்கேறவழகிதான நாவற்பழங்கொண்டு, போரும் போராது என்று சொல்லுகிறவளவிலே நான்கண்டு, "இவ்வளை உனக்குவந்தபடி யென்" என்று அவளைக்கேட்க, அவள் "இவன் தந்தான்" என்ன; "நீயோ இவளுக்கு வளைகழற்றிக் கொண்டுகொடுத்தாய்" என்ன; நானல்லேனென்று சிரிக்கின்றானே. "நானல்லேன்காண், என்கையில் வளைகண்டாயோ, நான் உன் இல்லம் புகுகிறது கண்டாயோ, உன் பெண்ணைப் பேரைச்சொல்லியழைக்கிறதைக் கேட்டாயோ, வந்து கையில் வளைகழற்றினது கண்டாயோ, கண்டாயாகில் உன்வளையை பங்கேபடுத்திக்கொள்ளாவிட்டதென்" என்றாற்போலே எனக்கு மறுமாற்றஞ்சொல்லவிடமில்லாதபடி இவ வார்த்தைகளைச் சொல்லிநின்று சிரியாநின்றான், இதிற் காட்டிலுண்டோ தவறுமான தீம்பென்கை. ... ... ... ... ... ... ... ... ... அ.

‡ நாவற்பழம் விற்கிறவிடத்தில் கண்டு கேட்கவேண்டும்படி இருக்கையாலே 'அடையாளவளை' என்று விசேஷித்தருளிச் செய்கிறார்.

அ. நிகமத்தில், இத்திருமொழி கற்றார், தமக்கு ப்ராப்யரா வென்கிறார்.

மூ.—வண்டுகளித்திரைக்கும் பொழில்சூழ் வருபுனற்காவிரித் தென்னரங்கன்
பண்டவன்செய்த கிரீடையெல்லாம் பட்டர்பிரான் விட்டுசித்தன்பாடல்
கொண்டிவைபாடிக் குனிக்கவல்லார் கோவிந்தன்றன்னடியார்களாகி
எண்டிசைக்கும் விளக்காகிநிற்பா ரிணையடியென் றலைமேலனவே. ௧௧.

பதவுரை.

வண்டு— வண்டுகளானவை
களித்து— மதுபானத்தாலே களித்து
இரைக்கும்— பேரொலிபாய்ப் பாடாநிற்கிற
பொழில்— சோலைகளாலும்
வரு— அச்சோலைகளுக்காகப் பெருகிவாரா நின்ற
புனல்— நீரையுடைத்தான
காவிரி— திருக்காவேரியாலும்
சூழ்— சூழப்பட்டதாய்
தென்— அழகிதான
அரங்கன்— திருவரங்கத்தில் வர்த்திக்கிற
அவன்— அப்படிப்பட்ட வைபவத்தை யுடையனானவன்
பண்டு— விபவாவதாரத்திலே
செய்த— செய்தருளின
கிரீடை எல்லாம்— விளையாட்டுச் செய்கைகளெல்லாவற்றையும்
விட்டுசித்தன்— விஷ்ணுவை மனஸ்ஸிலே உடையராய்

பட்டர் பிரான்— ப்ராஹ்மணோத்தமரான பெரியாழ்வார்பாடின
பாடல்— பாடலாகிய
இவை கொண்டு— இப்பாசுரங்களைக்கொண்டு
பாடி— வாயாரப்பாடி
குனிக்க வல்லார்— உடம்பு இருந்தவிடத்திலிராதே ஆடவல்லவர்களாய்
கோவிந்தன் தன்— கோவிந்தனுக்கு
அடியார்கள் ஆகி— தாஸபூதர்களாய்
எண் திசைக்கும்— எட்டுதிக்கிலுமுள்ள இருள்நீங்கும்படி
விளக்கு ஆகி நிற்பார்— விளக்காக விளங்கி நிற்குமவர்களுடைய
இணை— சேர்த்தியழகையுடைத்தான
அடி— திருவடிகள்
என் தலைமேலன— என்தலைமேலே வர்த்திக்குமவைகளாயிருக்கும்.
[ அவர்கள் திருவடிகளை என்சென்னியிற் சூடுவேன் என்றபடி. ]

வ்யா. வண்டித்யாதி. வண்டுகளானவை மதுபானத்தாலே களித்துப்பாடுகிற கோஷத்தை யுடைத்தான பொழில்களாலும், பொழில்களுக்கு தாரகமாகப்பெருகி வாராநின்ற புனலையுடைத்தான காவிரியாலும் சூழப்பட்டு, திருமதிள்களும் திருக்கோபுரங்களும் திருவீதிகளும் * மாடமாளிகைகளுமான இவற்றோடேசேர்த்தியால்வந்த அழகையுடைத்தாயிருந்துள்ள * திருவரங்கப்பெருநகரிலே நித்யவாஸம்பண்ணுகிற வைபவத்தை யுடையனானவன் முன்புசெய்த லீலாசேஷ்டிதங்களெல்லாவற்றையும். பட்டர்பிரானித்யாதி. ஸர்வஜ்ஞராய் விஷ்ணுவை மனஸ்ஸிலேயுடையராய் ப்ராஹ்மணோத்தமரான பெரியாழ்வார் பாடின பாடலான இவற்றைக்கொண்டு. பாடிக்குனிக்கவல்லார். ப்ரீதிப்ரேரிதராய்ப்பாடி, உடம்பு இருந்தவிடத்திலிராதே விகாரராய் ஆடவல்லவர்களாய். கோவிந்தனித்யாதி. இந்த சேஷ்டிதங்களெல்லாம்செய்த கோவிந்தனுக்கே அடியார்களாய், தங்களுடைய ஸந்நிதி விசேஷத்தாலே எட்டுதிக்கிலுமுண்டான அந்தகாரம்போம்படி ப்ரகாசகராய்க்கொண்டு நிற்குமவர்களுடைய. இணையடியென்றலைமேலனவே. சேர்த்தியழகையுடைத்தான திருவடிகளானவை என்தலைமேலே ஸர்வகாலமும் வர்த்திக்குமவைகளென்கிறார்.

பதவுரை.

ஆற்றில் இருந்து—யமுனையாற்றங்கரை மணலிலிருந்து
விளையாடுவோங்களை — தோழிகளுடன் விளையாடுகிற எங்கள்மேல்
சேற்றால் எறிந்து— சேற்றையிட்டெறிந்து
வளை— எங்கள் வளைகளையும்
துகில்— புடவைகளையும்
கைக்கொண்டு— வாரிக்கொண்டு
காற்றில்— காற்றிற் காட்டிலும்
கடியனாய்— வேகமுடையனாய் [ மிகவும் தவரிதனாய் ]
ஓடி— ஓடி
அகம் புக்கு— வீட்டினுள்ளே நுழைந்து
மாற்றமும் தாராளுல்— எங்கள் கூப்பிட்டு இரந்தாலும், அதற்கு ஒரு மறுமொழியும் கொடாத கண்ணனும்
இன்று முற்று(து)ம்— இன்று ‡ முடிவோம்;
வளைத்திறம்— வளையின் விஷயமாக
பேசானுல்— தருவன், தாரேன் என்பவற்றிலொன்றும் பேசாதவனுளே
† இன்றுமுற்றும்.

‡ இது - வயிறெரிந்து சொல்லும்வார்த்தை. உயிரை இழக்கக்கடவோமென்றபடி..
† இருகாற்சொல்லுகிறது - ஆற்றாமையின் மிகுதி.

வ்யா. முதற்பாட்டு. ஆற்றிலிருந்து. இவர் "எங்களது" என்றபிமானிக்கும் நிலத்திலே யிருந்தோமோ, ஸர்வஸாதாரணமான ஸ்தலத்திலேயன்றோ நாங்களிருந்தது. இத்தால் ஏகாந்தமாய், இவனுக்குவந்து தீம்புசெய்ய வொண்ணுதபடி பலரும் போவார் வருவாரான ஸ்தலத்திலேயன்றோ நாங்களிருந்ததென்கை. விளையாடுவோங்களை. விளையாடுகிறவெங்களை. தன்னையொழிய நாங்கள் அப்யஸிக்கலாமன்றோ; தன் இடையாட்டம்பட்டோமோ: நாங்கள் முன் தீமை செய்தோமாகிலுமாமிறே; தன்னைக்கடைக்கண்ணாலும் கணிசித்தோமோ: தன்னை யிங்கிட்டெண்ணினோமில்லையே. சேற்றாலெறிந்து. சேற்றையிட்டெறிந்து. பிறரறியாதபடி கைகளாலே ஸ்பர்சித்தானாகாதோ; "இதேது" என்று பிறர்கண்டு கேட்கும்படி சேற்றையிட்டெறியவேணுமோ. வளைதுகில்கைக்கொண்டு. நாங்கள் குளிக்கைக்காகக் கரைக்கிட்டு வைத்தவளைகளையும் துகில்களையும் வாரிக்கொண்டு. இடைப்பெண்களாகையாலே ஆபரணங்களும் பரிவட்டங்களும் கரைக்கிட்டுவைத்திறே குளிப்பது. காற்றிற்கடியனாய். கூட அகப்படாதே காற்றினுங்காட்டில் கடியனாய். தன்ஜீவனத்தில் ஒன்றும் குறையாதபடி கொண்டான், எங்கள் ஜீவனத்தையும் கொண்டுபோகவேணுமோ. அவனுக்கு ஜீவனம் இவர்களுடைய வளைகளும் துகில்களும்; இவர்களுக்குஜீவனம் அவன்றன்னுடைய வடிவிறே. அகம் புக்கு. பின்தொடர்ந்துசென்றாலும் காணப்போகாதபடி தன்னகத்திலேசென்றுபுக்கு. வழிபறித்து அவனுடைய ஸ்தலத்திலே பாய்ந்திருப்பது. மாற்றமும்தாராளுலின்றுமுற்றும். நாங்கள் தன்பேரைச் சொல்லியழைத்தாலும் அதுக்கு ஒருமறுமாற்றத்தாலும் சொல்லுகிறுவில்லை; வார்த்தையும், ஏதேனும்வளையும் துகிலுமோ; ஒரு வார்த்தைதன்னையாகிலும் தந்தாலாகாதோ. இப்படி ஒருவார்த்தையுமுட்படச் சொல்லாதவனுலே இன்றுமுடிவோம். ஒரு வார்த்தைபெறில் ஜீவிப்பார்போலேயாலும். வளைத்திறம்பேசானு லின்றுமுற்றும். தருவனென்னுதல், தாரேனென்னுதல், வளைவிஷயமாக ஒன்றும் சொல்லாதவனுலே இன்று முடிவோம். "முற்றுதும்" என்கிறவிது, "முற்றும்" என்று குறைந்துகிடக்கிறது. முற்றுதல் முற்றலாய்; அதாவது - முடிவாய், முற்றுமென்றது - முடிவோமென்றபடி. ... க.

மூ.—குண்டலந்தாழக் குழல்தாழநாண்தாழ
எண்டிசையோரு மிறைஞ்சித்தொழுதேத்த
வண்டமர்பூங்குழலார் துகில்கைக்கொண்டு
விண்டோய்மரத்தானா லின்றுமுற்றும்.
வேண்டவுந்தாரானா லின்றுமுற்றும். உ.

பதவுரை.

குண்டலம்— காதுப்பணிகள்
தாழ— தோளளவும் தாழ்ந்தசைய
குழல்— திருக்குழற்கற்றை
தாழ— அத்தோடொக்கத் தாழ்ந்தசையவும்
நாண்— திருக்கழுத்திற் சாத்தின விரோணானது
தாழ— திருவரையளவும் தாழ்ந்தசையவும்
எட்டு திசையோரும்— எட்டு திக்கிலுமுள்ள தேவர், முனிவர் முதலியவர்களெல்லாரும்
இறைஞ்சி) சாஷ்டாங்கமாக
தொழுது— வணங்கி
ஏத்த— ஸ்துதிக்கவும்
வண்டு அமர்— வண்டுகள் படிந்திருக்கிற
பூ— பூக்களா லலங்கரிக்கப்பட்ட
குழலார்— மயிர்முடியையுடைய ஸ்த்ரீகளுடைய
துகில்— புடவைகளை
கைக்கொண்டு— வாரிக்கொண்டு
விண் தோய்— ஆகாசத்தை அளாவிய
மரத்தானால்— குருந்தமரத்தின் மேலேறி யிரா நின்றவனால்
இன்று முற்றும்;
வேண்டவும்— "துகிலைப்பணித்தருளாய்" என்று வேண்டினாலும்
தாரானால்— அவற்றைக் கொடாதவனால்
இன்று முற்றும்.

வ்யா. இரண்டாம்பாட்டு. குண்டலந்தாழக்குழல்தாழநாண்தாழ. குண்டலம் - காதுப்பணி. அது திருத்தோள்ளளவும் தாழ்ந்தசைய, திருக்குழல்களும் அதுக்கு பரபாகமாம்படி அத்தோடொக்கத்தாழ்ந்தசைய, திருக்கழுத்திற்சாத்தின விரோணானது திருவரையளவும்தாழ. எண்டிசையோரு மிறைஞ்சித் தொழுதேத்த. எட்டுதிக்கிலுமுண்டான தேவமநுஷ்யாதிகளெல்லாம் இவ்வடிவழகையும் சேஷ்டிதவைலக்ஷண்யத்தையும் கண்டு பக்திபரவசராய் வணங்கி ஸ்தோத்ரம்பண்ண. வண்டமர்பூங்குழலார் துகில்கைக்கொண்டு. வண்டு கள்மாறாதபூக்களாலே அலங்க்ருதமான குழலையுடையவர்களுடைய, கரையிலே யிட்டு வைத்த பரிவட்டங்களைக் கைக்கொண்டு. விண்டோய்மரத்தானாலின்றுமுற்றும். இவர்களுக் கெட்டாதபடி விண்ணிலேதோய வளர்ந்த குருந்தமரத்திலேயிருந்தவனால் இன்றுமுடிவோம். வேண்டவும் தாரானாலின்றுமுற்றும். " துகிலைப்பணித்தருளாய் " என்றபேக்ஷிக்கவும் கொடாதவனாலே இன்றுமுடிவோம். ... ... ... ... உ.

மூ.—தடம்படுதாமரைப் பொய்கைகலக்கி
விடம்படுநாகத்தை வால்பற்றிஈர்த்துப்
படம்படுபைந்தலை மேலெழப்பாய்ந்திட்
டுடம்பையசைத்தானா லின்றுமுற்று
முச்சியில்நின்றானா லின்றுமுற்றும். ௩.

வ்யா. ஏழாம்பாட்டு. மாவலிவேள்வியில் - இந்த்ரனுடைய ஐச்வர்யத்தை பலத்தாலே அபஹரித்துக்கொண்டு, "கொடைமிகு மாவலி" என்கிறபடியே தன்னாசாய்; அழிக்கவொண்ணாதபடி ஔதார்யமென்பதொரு குணத்தையுடையனாயிருந்த மஹாபலியினுடைய யாகத்திலே. மாணுருவாய்ச்சென்று "கள்ளக்குறளாய்" என்கிறபடியே - அவனை வஞ்சனபண்ணுகைக்காக வாமநவேஷத்தைக் கொண்டு வடிவழகாலும் பேச்சழகாலும் அவன் அபேக்ஷிதத்தைத் தான் சொன்னதுமாறுமத் செய்யும்படி சென்று. மூவடிநீவென்றிரந்த இம்மண்ணினை. அவன் கடக்கொள இசைந்து தருகைக்காகவும், பின்பு ஓரடிக்கு அவனைச் சிறைவைக்கைக்காகவும் "மண்ணாளவே மூன்றடி தா" என்று இரந்துபெற்ற இப்பூமியை. மண்ணென்கிறது - மற்ற லோகங்களுக்கெல்லாம் உபலக்ஷணம். ஓரடியிட்டாதி. அளக்கிறவளவிலே பூமிப்பரப்படங்கலும் தனக்குள்ளே யாம்படி ஓரடியிட்டு இரண்டாமடிதன்னிலே. தாவடியிட்டாதி. ஊர்த்வலோகங்களடங்கலும் தனக்குள்ளே யாம்படி தாவியடியிட்டவனாலே இன்று முடிவோம். தரணியிட்டாதி. திருவடிகளின் மார்த்தவம் பாராதே, § அர்த்திதனுக்காக இப்படி லோகத்தை யளந்தவனாலே யின்று முடிவோம்.

இத்தால் - தன்னை யழியமாறியும் ஆச்ரித ரக்ஷணம் செய்யுமவன் எங்கள் ரக்ஷணத்தைச் செய்யாதே யுபேக்ஷித்தானின்றான்; ஆனபின்பு, அவனாலே நாங்கள் முடிவோமென்கை.

மூ.—தாழைதண்ணாம்பற் றடம்பெரும்பொய்கைவாய்
வாழுமுதலை வலைப்பட்டுவாதிப்புண்
வேழந்துயர்கெட விண்ணோர்பெருமானாய்
ஆழிபணிகொண்டானா லின்றுமுற்று
மதற்கருள்செய்தானா லின்றுமுற்றும். அ.

பதவுரை.

தாழை— (கரையிலே) தாழைகளையும்
தண் ஆம்பல்— (உள்ளே) குளிர்ந்த ஆம்பல்களையுமுடைத்தாய்
தடம் பெரு— மிகவும் பெரிதான
பொய்கைவாய்— தடாகத்திலே
வாழும்— இராநின்ற
முதலை— முதலையாகிற
வலை— வலையிலே
பட்டு— அகப்பட்டு
வாதிப்புண்— வருந்தின [வாதிப்பு - பாதை.
வேழம்— ஸ்ரீ கஜேந்த்ராழ்வானுடைய
துயர்— மனத்துன்பமானது
கெட— தீரும்படியாக
விண்ணோர்— நித்யஸூரிகளுக்கு
பெருமான்— நிர்வாஹகனானவன்
ஆய்— பெரியதிருவடியை மேற்கொண்டவனாய்
ஆழி— சக்ராயுதத்தாலே
(முதலையைத் துணித்து அந்தச்சிறையை விடுவித்து,)
பணி கொண்டானால்— அந்த கஜேந்த்ரன் கையிலிருந்த பூவைத்தம் திருவடிகளில் இடுவித்துக்கொண்டவனாலே இன்று முற்றும்;
அதற்கு— அந்த கஜேந்த்ரனுக்கு
அருள் செய்தானால்— அப்படி க்ருபைபண்ணினவனால் இன்று முற்றும்.

§ அர்த்திதன் - தேவேந்த்ரன்.

லவர்க்கு. இந்த லோகத்திலே லாபிப்ராயமாக வல்லவர்களுக்கு. ஏதமொன்றுமில்லையே. பொல்லாக்கென்னப்பட்டவை யொன்றுமில்லாதபடி பேசும். ... ... ... ௰.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.

---

அடிவரவு.—ஆற்றில் குண்டலம் தடம் தேனுகனும்சீ தள்ளி
மாவலி தாழை வானத்து அங்கமலம் தன்னேர்.

---

ஆ. திருமொழி- ௧௧-க்கு, பாட்டு -உ௪0.

---

மூன்றாம்பத்து, முதல் திருமொழி. தன்னேராயிரம் ப்ரவேசம்.

அ. திருவாய்ப்பாடியில் ப்ராப்தயௌவனைகளாய் லீலாபரைகளாய்த்திரிகிற பெண்கள் திறத்தில் அவன் துஷ்டமமான தீம்புகளைச்செய்து தங்களை நலிகிற ப்ரகாரத்தை, த்ரபாரான யசோதைப்பிராட்டிக்குவந்து முறைப்பட்ட ப்ரகாரத்தை, தத்பாவயுக்தராய்க் கொண்டு, தாமும் அவர்களைப்போலேபேசி அவனுடைய அந்த லீலாவ்யாபாரங்களை அநுபவித்தாராய்நின்றார்-கீழ்; மாத்ருத்வமேறுதலாலே பலகாலும் அவனை அம்மமுண்ணவழைத்தும் அம்ம மூட்டியும்போரும் யசோதைப்பிராட்டி, அவனுடைய பருவத்தின் இளமையையும் அதுக்கநுரூபமல்லாதபடியான அதிமாநுஷ சேஷ்டிதங்களையும் கண்டு, அவனை "தன்னுடைய பிள்ளை" என்று நினைத்திருக்கை தவிர்ந்து, "அகிலாண்டமுண்டாப்ராக்ருத லீலையனான ஸர்வேச்வரன்" என்றறுதியிட்டு அவனைக்குறித்து அவைதன்னைச்சொல்லி, "உனக்கம்மந்தரவஞ்சுவன்" என்று பலகாலும் பேசின ப்ரகாரத்தை, தத்பாவ்யதாபன்னராய்க் கொண்டு தாமு மப்படியேபேசி அந்தாவத்தை அநுபவிக்கிறார்- இத்திருமொழியில். ... *

ரூ,—தன்னேராயிரம் பிள்ளைகளோடு தளர்நடையிட்டு வருவான்
பொன்னேய் நெய்யொடு பாலமுதுண்டொரு புள்ளுவன் பொய்யேதவழும்
மின்னேர் நுண்ணிடை வஞ்சமகள் கொங்கைதுஞ்ச வாய்வைத்தபிரானே
அன்னேயுன்னை யறிந்துகொண்டே னுனக்கஞ்சுவனம்மந்தரவே. க.

பதவுரை.

| | |
|---|---|
| தன்— தனக்கு | பால் அமுது— போக்யமான பாலையும் |
| நேர்— ஒப்பான | உண்டு— அமுது செய்து |
| ஆயிரம் பிள்ளைகளோடு— ஆயிரம் பிள்ளைகளோடு கூட | ஒரு— அத்விதீயனான |
| தளர்நடை இட்டு— தளர்நடை நடந்து | புள்ளுவன்— க்ருத்ரிமனுங்கொண்டு |
| வருவான்— வருமவனாய் | பொய்யே— பொய்யாக |
| பொன் ஏய்— பொன்னேடொத்த நிறத்தையுடைய | தவழும்— தவழுமவனாய் |
| நெய்யொடு— நெய்யோடு கூட | மின் நேர்— மின்னலை யொத்ததாய் |
| | நுண்— ஸூக்ஷ்மமான |
| | இடை— இடையையுடைய |

பொய்" என்றவோபாதி "அம்மம்" என்கிற இவன்சொல்லும் பொய்யென்று தோற்றுகிற்கச்செய்தேயும் அவன் சொல்லை அநுவதித்துச்சொல்லுகிறாள். ... ... க.

மூ.—பொன்போல் மஞ்சனமாட்டி யமுதூட்டிப் போனேன் வருமளவிப்பால்
வன்பாரச்சகட மிறச்சாடி வடக்கிலகம் புக்கிருந்து
மின்போனுண்ணிடையா ளொருகன்னியை வேற்றுருவஞ் செய்துவைத்த
அன்பாவுன்னை யறிந்துகொண்டே னுனக்கஞ்சுவனம்மந்தரவே. உ.

பதவுரை.

பொன் போல் — பொன் போல் (வடிவழகு விளங்கும்படி)
மஞ்சனம் ஆட்டி — திருமஞ்சனம் செய்து
அமுது ஊட்டி — அமுது செய்யப் பண்ணி
போனேன் — யமுனை நீராடப்போன நான்
வரும் அளவு இப்பால் — வருவதற்கு முன்னே
வன் — வலியதாய்
பாரம் — பாரமாயிருக்கிற
சகடம் — சகடமானது
இற — கட்டுக்குலைந்து முறியும்படி
சாடி — திருவடிகளாலுதைத்து
வடக்கில் — இவ்வகத்துக்கு வடக்கிலுள்ள
அகம் — அகத்திலே
புக்கு இருந்து — புகுந்து ‡ இருந்து
மின் போல் — மின்னலை யொத்ததாய்
நுண் — ஸூக்ஷ்மமான
இடையாள் — இடையையுடையவளான
ஒரு கன்னியை — ஒரு யௌவனையான பெண்ணை
வேறு உருவம் செய்து வைத்த — ஸம்போக சிஹ்நங்களாலே மாறுபட்ட வடிவையுடையவளாம்படி பண்ணிவைத்த
அன்பா — கண்டதொன்றிலே மேல் விழும்படியான அன்பையுடையவனே!
* உன்னை இத்யாதி பூர்வவத்.

‡ "இருந்து" என்கிறவிடம் - வார்த்தைப்பாடு.

வ்யா. இரண்டாம்பாட்டு. பொன்னித்யாதி. திருமேனியழகு விளங்கும்படியாகத் திருமஞ்சனஞ்செய்து, "என்னிலங் கொள்கையமுதமூட்டி" என்கிறபடியே அமுது செய்யப்பண்ணி, "யமுனை நீராடப்போனேன்" என்கிறபடியே யமுனையாகிற துறையிலே குளிப்பதாகப்போன நான் வருவதற்குமுன்னே. வன்பாரச்சகடமிறச்சாடி. வலியதாய்க் கனத்தாயிருக்கிற சகடமானது கட்டுக்குலைந்து முறிந்துபோம்படியாக, முலைவரவுதாழ்ந்துச் சீறி நிமிர்த்த திருவடிகளாலே உதைத்து. வடக்கிலகம்புக்கிருந்து. இவ்வகத்துக்கு வடவருகில் அகத்திலே புக்கிருந்து. மின்போல் நுண்ணிடையாளொரு கன்னியை. மின்போலே நுண்ணிதான இடையையுடையளாய், நவயௌவனையா யிருப்பா ளொருத்தியை. வேற்றுருவம் செய்துவைத்த. ஸம்போகசிஹ்நங்களாலே விகாரப்பட்டவடிவையுடையளாம்படி பண்ணிவைத்த. அன்பா. கண்டதொன்றிலே மேல்விழும்படியான ஸ்நேஹத்தையுடையவனே. இத்தால் - நிம்பனென்றபடி. உன்னை யறிந்துகொண்டேன். இவன் நம்மோடு ஸஜாதீயனல்லன், வ்யாவ்ருத்தனென்று உன்னை உள்ளபடி யறிந்துகொண்டேன். உனக்கஞ்சுவனம்மந்தரவே. ஆனபின்பு, உனக்கம்மந்தர வஞ்சுவன். ... ... ... ... ...உ.

மூ.—கும்மாயத்தொடு வெண்ணெய் விழுங்கிக் குடத்தயிர் சாய்த்துப்பருகிப்
பொய்ம்மாய மருதான வசுரரைப் பொன்றுவித்தின்று நீவந்தாய்
இம்மாயம்வல்ல பிள்ளைநம்பீயுன்னை யென்மகனே யென்பர் நின்றார்
அம்மாவுன்னை யறிந்துகொண்டே னுனக்கஞ்சுவனம்மந்தரவே. ௩.

† { கொய் ஆர் — கொய்தல் நிறைந்த
பூ — அழகிய
துகில் — புடவைகளை }
பற்றி — பிடித்து
தனி நின்று — தனியாய் நின்று
பல பல — எண்ணிறந்த
குற்றம் — தீம்புகளை
செய்தாய் — பண்ணினாய்;
பொய்யா — க்ருத்ரிமனே!
உன்னை — உன் விஷயமாக
பேசுவ — பிறர் பேசுகிற
புறம்பல — பொல்லாங்குகள்
புத்தகத்துக்கு — ஒருபுஸ்தகமெழுதுகைக்கு
உள — தகுந்தவளவற்றை
கேட்டேன் — என்காதால் கேட்டேன்;
ஐயா — க்ருத்ரிமர்க்கெல்லாம் ஸ்வாமியானவனே!

உன்னை இத்யாதி பூர்வவத்.

† கொய்யார் பூந்துகிலாவது - புடவைகளின் கொய்ச்சகம். [கொய்ச்சகமென்பது 'கொசாம்' என்று உலகத்தில் சிதைந்து வழங்கும்.]

வ்யா. நான்காம்பாட்டு. மையார் இத்யாதி. அஞ்சனத்தாலே அலங்க்ருதமான கண்களையும், ஆத்மகுணங்களில் ப்ரதாநமான மடப்பத்தையும், குடிப்பிறப்பையுமுடையரான பெண்களை மையன்மைசெய்து உன்பக்கலிலே விமோஹிக்கைப் பண்ணி முதலானோர்க்கு வசவர்த்திகளாகாதபடி உன்னுடைய சௌந்தர்யாதிகளாலே பிச்சேற்றி. அவர்பின்போய், அவர்களுடைய பின்னேபோய். கொய்யார்பூந்துகில்பற்றி. கொய்தலைச் சேர்ந்த திருந்தின அழகிய பரிவட்டங்களைப் பிடித்து. இத்தால் - அவர்கள் பரிவட்டங்களின் கொய்ச்சகங்களைப் பிடித்துக்கொண்டு, அவர்கள் பின்னேபோனபடி என்கை. தனிநின்று குற்றம் பலபலசெய்தாய். ஏகாந்த ஸ்தலத்திலேநின்று அவாச்யமான வ்யாபாரங்களை அபரிகண்யமாம்படி செய்தாய். ஆனதென், நானொரு குற்றமும் செய்திலேன், நீ மற்றுக்கண்டாயோவென்ன பொய்யாவித்யாதி. க்ருத்ரிமனே! உன்னைப்பொல்லாங்கு பலவற்றையும் பிறர்சொல்லுமவைகள் ஒருபுஸ்தகம் நிறைய வெழுதத்தக்கவை கேட்டேன். அவர்கள் சொல்லுமதும் நீ கேட்டதுபோல ஸத்யம், நான்சொன்னதன்றோ ஸத்யமென்ன; ஐயா. இதென்ன தெளிவுதான்! என்று கொண்டாடுகிறாள். அன்றிக்கே, ஐயா என்று - க்ருத்ரிமர்க்கெல்லாம் ஸ்வாமியானவனே யென்கிறாளாதல். உன்னையறிந்துகொண்டேன். உன்னை அதிமாநுஷமான சக்திசேஷ்டிதங்களையுடையவனென் றறிந்துகொண்டேன். உனக்கித்யாதி. ஆனபின்பு, உனக் கஞ்சுவன். ... ... ... ... ... ... ... ௪.

௫.—முப்போதுங் கடைந்தீண்டிய வெண்ணெயினோடு தயிரும்விழுங்கிக்
கப்பாலாயர்கள் காவிற்கொணர்ந்த கலத்தொடு சாய்த்துப்பருகி
மெய்ப்பாலுண்டழு பிள்ளைகள்போல நீவிம்மிவிம்மியழுகின்ற
அப்பாவுன்னை யறிந்துகொண்டே னுனக்கஞ்சுவனம்மந்தரவே. ௫.

பதவுரை.

மூன்று போதும் — காலை, உச்சி, அந்தி ஆகிற மூன்று போதிலும்
கடைந்து — கடையப்பட்டு
ஈண்டிய — திரண்ட
வெண்ணெயினோடு — வெண்ணெயோடே
தயிரும் — தயிரையும்
விழுங்கி — அமுது செய்து
ஆயர்கள் — இடையர்கள்

விஷாதாதிசயத்தாலே வைரித்துச் சொல்லுகிற வார்த்தை. எந்தன்களாய் பகம்புல் ஐச்வர்ய மறியாத ஸ்ரீ நந்தகோபர்பிள்ளையான நீ இப்படி செய்யக்கடவையோ. அன்றிக்கே, அவர் உன்னை வியமித்து வளர்க்கவையிறே நீ யிப்படி திம்பனுப் தென்னுதல். உன்னையறிந்து கொண்டேன். பருவமிநுவாயிருக்க, செய்கிற செயல்களினுவாலையாலே உன்னை " காட்டார்படியல்ல " என்று அறிந்துகொண்டேன். உனக்கித்யாதி. ஆனபின்பு உனக்கம்மந்தர வஞ்சவன். ... ... ... ... எ.

மூ.—தாய்மார்மோர் விற்கப்போவர் தமப்பன்மார் கற்றுநிரைப் பின்புபோவர்
நீயாய்ப்பாடி யிளங்கன்னிமார்களை நேர்படவே கொண்டுபோதி
காய்வார்க்கென்று முகப்பனவேசெய்து கண்டார்கழறத்திரியும்
ஆயாவுன்னை யறிந்துகொண்டே னுனக்குன்ற னம்மந்தரவே. க.

பதவுரை.

தாய்மார்— தாய்மாரானவர்கள்
மோர் விற்க— மோர் விற்பதற்காக
போவர்— ( பெண்களை அகம்பார்க்க வைத்துவிட்டு ) அயலூருக்குப் போவார்கள்;
தமப்பன்மார்— தமப்பன்மாரானவர்கள்
கன்று ஆ நிரை பின்பு— இளம்பசுக் கூட்டத்தின் பின்னே
போவர்— போகா நிற்பர்கள்;
நீ— அந்தமயம் பார்த்திருக்கிற நீ
ஆய் பாடி— இடைச் சேரியிலுள்ள
இள கன்னிமார்களை— கலியாணமாகாத பெண்களை
நேர்பட—உன்னிஷ்டப்படிக்கு அயர்க்கும் இடங்களில்
கொண்டு போதி— கொண்டுபோகா நின்றாய்;
காய்வார்க்கு— உன்மேல் சீறுகின்ற பிதாக்களுக்கு
என்றும்— எப்போதும்
உகப்பனவே— உகக்கும்படியான வற்றையே
செய்து— செய்து
கண்டார்— உன் செயல்களைக் கண்டவர்கள்
கழற— ( மனம் நொந்து ) உறுத்திச் சொல்லும்படி
திரியும்— திரியா நிற்கிற
ஆயா— இடைக்குமாரனே!

உன்னை இத்யாதி பூர்வவத்.

வ்யா. ஒன்பதாம்பாட்டு. தாய்மாரித்யாதி. பெண்களை அகம்பார்க்க வைத்து, தாய்மாரானவர்கள் மோர்விற்கப் போகா நிற்பர்கள். இடையர்க்கு ஐச்வர்யம் மிகவுமுண்டானாலும் இடைச்சிகள் மோர்விற்று ஜீவிக்குமதிறே தங்களுக்குத் தகுதியான ஜீவனமாக நினைத்திருப்பது. மோர்தானிற்கை அரிதாயிருக்குமிறே. திருவாய்ப்பாடியில் பஞ்சலக்ஷம் குடியிலும் தப்பாமல் குறைவற்றிருக்கையால் அசலூர்களிலேபோய் விற்க வேண்டுகையாலே இக்காலவிளம்பம் இவனுக்கு அவகாசமாவதாயிறே யிருப்பது. தமப்பன்மாரித்யாதி. தாய்மார்போனாலும் தமப்பன்மார்தானிருந்தாலும் இவனுக்கு நினைத்தபடி செய்யப்போகாதிறே; அதுவுமில்லாதபடி, தமப்பன்மாரானவர்கள் கற்றுநிரைபின்பின்னே போகாநிற்பர்கள். அவை மேச்சலுள்ளவிடங்களிலே தாய்போகையும், இவர்களவற்றை விடமாட்டாமல் அவற்றின்பின்னே போகையும், அவைமேய்த்து வயிறுநிறைந்தாலல்லது மீளாதொழிகையும், அவை மீண்டால் அவற்றின்பின்னே இவர்கள் வருகையுமாயிறே யிருப்பது; ஆகையால் இந்தக்கால விளம்பமும் இவனுக்கு அவகாசமிறே. நீயாய்ப்பாடி யிளங்கன்னிமார்களை நேர்படவே கொண்டுபோதி. நீ திருவாய்ப்பாடியில் யுவதிகளானபெண்களை

டன்னிலேவுக்கு வாய்க்கும்படி சொண்டுபோதி. அதாவது - உனக்கு அபிமதமான ஸ்தலங்களிலே கொண்டுபோனாகின்று பென்றபடி. தாய்மார் தமப்பன்மார் போகையாலும், காவிலேப்பு முண்டாகையாலும், அவ்வகர்தானே அபிமதஸ்தலமாயிருக்கச்செய்தேயும் "ப்ராமாதிகமாக ஆரேனும் வரக்கூடும்" என்றிறே ஸ்தலாந்தரம் தேடிப் போகவேண்டிற்று. காய்வார்க்கென்றும் உகப்பனவேசெய்து. உன் குணத்திலும் தோஷத்தை ஆவிஷ்கரிக்குமவர்களாய், உன்பக்கல் த்வேஷபராயேயிருக்கும் சிசுபாலாதிகளுக்கு, 'சொல்லிப் பரிபவிக்கைக்கு இடம்பெற்றோம்' என்று அவர்களெல்லாம் உகக்கும்படியானவற்றைச்செய்து. கண்டார்கழறத் திரியுமாயா. காய்வார்க்கன்றிக்கே, உனக்கு நல்லவர்களாய் நீ செய்கிற வ்யாபாரங்களைக் கண்டவர்கள் நீ செய்கிற தீம்புபொறுமல் வியமிக்கும்படி திரியாநிற்கிற ஆயனே. குல மர்யாதை தன்னையும் பார்க்கிறிலையே யென்கை. உன்னை யறிந்துகொண்டேன். நீ யிப்படி திரிந்தாயாகிலும் உன்னுடைய அதிமாநுஷசேஷ்டிதங்களைக் கண்ட பின்பு, உன்னை "மநுஷ்யஜாதீயனல்லன்" என்று அறிந்துகொண்டேன். உனக்கிதியாதி. ஆனபின்பு, உனக்கு அம்மந்தரவஞ்சுவன். ... ... ... ... ... ... ௭.

மூ.—தோத்தார் பூங்குழற்கன்னி யொருத்தியைச் சோலைத்தடங்கொண்டுபுக்கு
முத்தார் கொங்கைபுணர்ந்திரா நாழிகை மூவேழுசென்றபின் வந்தாய்
ஒத்தார்க்கொத்தன பேசுவருன்னை யுரப்பவே நானொன்று மாட்டேன்
அத்தாவுன்னை யறிந்துகொண்டே னுனக்கஞ்சுவ னம்மந்தரவே. ௮.

பதவுரை.

தோத்து— சொத்தாய்
ஆர்— சேர்ந்திருந்துள்ள
பூ— புக்களணிந்த
குழல்— கூந்தலையுடையளாய்
கன்னி— யௌவனவதியான
ஒருத்தியை— ஒருத்தியை
‡ { தடம்— இடமுடைத்தான
‡ { சோலை—சோலையிலே
கொண்டு புக்கு— அழைத்துக் கொண்டு போய்
முத்து— முத்துமாலையாலே
ஆர்— அலங்கரிக்கப்பட்ட
கொங்கை— ஸ்தனங்களிலே
புணர்ந்து— ஸம்ச்லேஷித்து
இரா— ராத்திரி
மூன்று ஏழு நாழிகை சென்றபின்— மூன்று யாமம் கடந்தபிறகு
வந்தாய்— மீண்டு சேர்ந்தாய்;
உன்னை— உன்திறத்தில்
ஒத்தார்க்கு ஒத்தன — வேண்டுவோர்க்கு வேண்டினபடி யெல்லாம்
பேசுவர்— குற்றம் சொல்லுவர்கள்;
உரப்ப — (இப்படியிருக்கிற வுன்னைக்) கோபிக்க
நான்— தாயான நான்
ஒன்றும் மாட்டேன்— எவ்வளவும் சக்தையாகிறிலேன்;
அத்தா— என் ஸ்வாமியே!
உன்னை இத்யாதி பூர்வவத்.

‡ "தடம்" என்றது "தடீ" என்ற வடசொல்லின் விகாரமாய், 'சோலைத்தட' மென்றதற்கு - சோலைப் பிரதேசங்களிலே யென்று பொருளாகவுமாம்.

வ்யா. பத்தாம்பாட்டு. தோத்தாரித்யாதி. சொத்தாய்ச் சேர்ந்திருந்துள்ள புக்களாலே அலங்க்ருதமான குழலை யுடையளாய், இருளாய்ப்பாடியிலுள்ள பெண்களிற்காட்டில்

பேரனுக்கு எவ்வும் என்கிறவிடத்தில் வசவொற்று, சிறிலடிகளுக்குச் சேவேவல்லமை யாலே வந்திருக்கிற வித்தனே. இப்படி யிருந்தவன்ன சிலையயுடையரான வேடர் வர்த்திக்கிற காட்டிடத்திலே. கன்றின்பின் தெய்வத் தலைவனைப் போக்கினேன். ஸ்வைர கதிகளான கன்றுகளின்பின்னே தேவர்களுக்குத் தலைவனானவனைப் போகவிட்டேன். எல்லேபாவமே. ௫.

மூ.—மிடறுமெழுமெழுத்தோட வெண்ணெய் விழுங்கிப்போய்ப்
படிறுபலசெய்திப்பாடி யெங்குந்திரியாமே
கடிறுபலதிரி கானதரிடைக் கன்றின்பின்
இடறவென்பிள்ளையைப் போக்கினே னெல்லேபாவமே. ௬.

பதவுரை.

வெண்ணெய்— வெண்ணெயை
மிடறு— கழுத்திலே
மெழுமெழுத்து ஓட— (உருத்தாமல்)
மெழுமெழுத்து உள்ளே போம்படி
விழுங்கி— அமுது செய்து
போய்— புறம்பு போய்
பல— அளவற்ற
படிறு—தீம்புகளை
செய்து— செய்து
இ பாடி எங்கும்— இச்சேரியெங்கும்
திரியாமே— திரியாதபடி
பல கடிறு— பல காட்டானைகள்
திரி— திரியாநின்றுள்ள
கான் அதரிடை— காட்டுவழியிலே
கன்றின் பின்— கன்றுகளின் பின்னே
இடற— தட்டித் திரியும்படி
என் பிள்ளையை — ஸ்ரீகுமாரனான என் கண்ணனை
போக்கினேன் எல்லே பாவமே.

வ்யா. ஆரும்பாட்டு. மிடறு மெழுமெழுத்தோட வெண்ணெய் விழுங்கிப்போய். இத்தால் - வெண்ணெய் விழுங்கும்போதை அநாயாஸம் சொல்லுகிறது. அதாவது - ஒதுங்கி பூபாதிகள் அமுதுசெய்யும்போது குதிக்கொண்டு திருப்பவளத்திலே இட்டிருந்து மென்று மெள்ள மிடற்றுக்குக்கீழே யிழிச்சவேணுமிறே; அங்ஙனன்றிக்கே, "தாழியில் வெண்ணெய் தடங்கையார விழுங்கிய" என்றும், "தடாநிறைந்த வெண்ணெய்மலையிருந்தாலொத்த வெண்ணெயை வாரிவிழுங்கிட்டு" என்றும் சொல்லுகிறபடியே வெண்ணெயினுடைய வைச்சத்திலைக்கண்டு ப்ரியப்பட்டு அபிநிவேசாதிசயத்தாலே திருக்கைகளைவிரித்து நிறையவன்றி "கைவளர்ந்தண்டான்" என்கிறபடியே இடக்கையாலும் வலக்கையாலும் வாரியமுது செய்யும்போது ஒருபருக்கை பிள்ளைமையாலே மிடற்றிலுறுத்தாமல் மெழுமெழுத்து உள்ளே போம்படியாயிறே யிருப்பது. ஆகையால் இது இவன் ஸௌகுமார்யத்துக்குச் சேர்ந்திருக்குமிறே. இப்படி வெண்ணெயை யமுதுசெய்து, கவ்யாந்தரங்களிற் காட்டிலும் இவன் விரும்பியிருப்பது வெண்ணெயேயிறே. * சட்டிய வெண்ணெய் தொடுவுண்ணக்காகவிறே அவதரித்ததும். விழுங்கிப்போயென்றது - விழுங்கிவிட்டென்னுதல்; ஸ்வைர ஸஞ்சாரத்திலே இப்படி வெண்ணெயை விழுங்கிப் புறம்போயென்னுதல்.

படிறுபலசெய்து. படிறு - தீம்பு. பலவென்கையாலே - அதுக்கு எண்ணில்லாமை சொல்லுகிறது. "பருதுபதித்துத் துகில்பற்றிக்கீறிப் படிறன் படிறுசெய்ய" என்கிறபடியே விளையாடுகிற பெண்களையில் விளையாட்டங்களைப் பறிப்பது, அவர்கள் புடை

போர்— யுத்தோந்முகமான
ஏறே — ரிஷபம்போல் செருக்கியிருக்குமவனே!
உரால்— கன்றுகளிடத்தில் வ்யாமோஹத்தையுடையவனே!
நீ உகக்கும்— நீ உகக்குமவையான
குடையும்— குடையையும்
செருப்பும்— செருப்பையும்
குழலும்— வேய்ங்குழலையும்
தருவிக்க— தருவிக்கச் செய்தேயும்
கொள்ளாதே— (அவற்றைக்) கொள்ளாமல்
போனாய்— கன்று மேய்க்கப் போனவனே!
கடிய வெம்— மிகவும் வெவ்விதான
கானிடை— காட்டிலே
கன்றின் பின்— கன்றுகளின் பின்னே
போன— தொடர்ந்து போன
சிறு குட்டன் — சிறுப்பிள்ளையான உன்னுடைய.
செங்கமலம்— செந்தாமரைப்பூப் போன்ற
அடியும்— திருவடிகளும்
வெதும்பி— கொதித்து
உன்— உன்னுடைய
கண்கள்— கண்களும்
சிவந்து ஆய்— சிவந்த தாகி
அசைத்திட்டாய்— இளைத்தாய்;
நீ எம் பிரான்— நீ என் நாயகனன்றோ
என்று மனம் தளர்ந்து சொல்லுகிறாள்.

வ்யா. கான்காம்பாட்டு. கடியீத்யாதி. பரிமளப்ரசுரமான பொழில்களையுடைத்தாய் அழகியதாயிருக்கிற திருமலையிலே நித்யவாஸம்பண்ணுகிறவனே. கதும்போரேறே. அழுத்த நிறத்தை யுடைத்தாய், செருக்காலே எதிரேபொருது வெல்லவல்லத்திலே திரியும் ரிஷபம்போலே, திருவாய்ப்பாடியை மூலையடியே நடத்தி, மேனாணிப்புத் தோற்றத் திரிகிறவனே. “பட்டிமேய்ந்தோர் காரேறு” என்னக்கடவதிறே. நீ யுகக்குமித்யாதி. நீ யுகக்குமவையான வர்ஷாதபவாரணமான குடையும், கண்டகாதி பரிஹாரகமான திருவடிநிலைகளும், கன்றுகளையழைத்து மேய்க்கைக்கும் அழைக்கைக்கு முறுப்பாக ஆகுகைக்குடலான வேய்ங்குழலும் தருவிக்கச்செய்தே இவற்றைவாங்கிக்கொள்ளாதே, கன்றுகள் மேய்க்கையில் வ்யாமோஹத்தாலே போனவனே. கடியவெங்கானிடைக் கன்றின்பின்போன. மிகவும்வெம்மையையுடைத்தான காட்டிலே கன்றுகள்போனவிடமெங்கும் தொடர்ந்துபோன. சிறுக்குட்டச் செங்கமலவடியும் வெதும்பி. சிறுப்பிள்ளையான உன்னுடைய சிவந்தகமலம்போன்ற திருவடிகளும் கொதித்து. செங்கமலவடியென்கையாலே- திருவடிகளினுடைய மென்மை குளிர்த்தி முதலானவற்றைச் சொல்லுகிறது. இப்படியிருக்கிற திருவடிகள் குடையும் செருப்புமின்றிக்கே * கடியவெங்கானிலே திரிந்தால் வெதும்பச்சொல்லவேண்டாவிறே. உன் கண்கள் சிவந்தாய். கால்கொதித்தால் கண்கள்சிவக்கை ஸித்தமிறே. அதுக்குமேலே; கன்றுகளுக்கு மேய்ச்சற்றரைபார்க்கை, அவற்றின் வயிற்றிலே நிறைவுகுறைவு பார்க்கை, “துஷ்டர்கள் வருகிறதன்றோ” என்று சுற்றும்பார்க்கை, கைப்பிரிந்துபோனவை புல்லோ வென்று மதிக்கைக்குப்பார்க்கை முதலாக ஒன்றிலே ஒன்றப்பார்க்கையாலும் திருக்கண்கள் சிவக்குமிறே. அசைத்திட்டாய் நீ எம்பிரான். இளைத்திட்டாய் நீ என்னுடையனே. திருவடிகள்வெதும்பித் திருக்கண்கள் சிவந்தவளவேயோ, வருக்குள்ளே திரியும்போது “கதும்போரேறு” என்னும்படி புஷ்கலமான வடிவையுடையவனும் செருக்கித்திரியக்கடவ நீ போர இளைத்துவிட்டாயென்று வெறுத்துச் சொல்லுகிறாள். ... ... ... ௪.

மூ.—பற்றார்நடுங்க முன்பாஞ்சசன்னியத்தை வாய்வைத்தபோரேறேயென்
சிற்றாயர்சிங்கமே சீதைமணாளா சிறுக்குட்டச் செங்கண்மாலே
சிற்றடையுஞ் சிறுப்பத்திரமுமிவை கட்டிலின்மேல் வைத்துப்போய்க்
கற்றாயரோடே கன்றுகள்மேய்த்துக் கலந்துடன்வந்தாய் போலும். ௫.

அதுகண்டு இவ்வூரொன்று புகராகின்ற தென்பாரும், அவன்வருகிற படியைத் தெருவிலே கண்டு, அவன்பக்கல் ஸ்நேஹத்தாலே தாங்கள் விக்ருதைகளாய், காணாதாரையு மழைத்துக் காட்டுவாரும், அவன் சேஷ்டிதத்திலே ஈடுபட்டு தாங்கள் அகப்பட்டானமை சொல்லுவாரும், அவன் இத்தெருவே வருமாகில் "எங்கள் பல்லைப் பறித்துக்கொண்டு போனவன்" என்றவனைத்து அவனுடைய பவளவாய் முறுவலைக் காண்போம் என்பாரும், அவன்வைகலைக்கண்டு தாம்தாம் ஈடுபட்டமையைத் தாய்மார்க்குச் சொல்லும்படி விக்ருதைகளாவாருமாய், இப்படி அவன்பக்கல் ஸமுத்ப்ரவாஹத்தை அவர்களெல்லாருடையவும் பாவவ்ருத்தியை யுடையராய்க் கொண்டு தாம் அவனைக்குறித்துப்பேசி ப்ரீதராகிறார் - இத்திருமொழியில்.

மூ.—தழைகளுந் தொங்கலுந் ததும்பியெங்குந் தண்ணுமையெக்க மத்தளிதாழ்பீலிக்
குழல்களுங் கீதமுமாகியெங்குங் கோவிந்தன் வருகின்றகூட்டங்கண்டு
மழைகொலோ வருகின்றதென்று சொல்லி மங்கைமார் சாலகவாசல்பற்றி
நுழைவனர் நிற்பனராகியெங்கு முள்ளம்விட்டூண்மறந்தொழிந்தனரே. ௧.

பதவுரை.

தழைகளும் தொங்கலும்—தழையென்றும், தொங்கலென்றும்பேர் பெற்ற பீலிக்குடைகள்
எங்கும் ததும்பி— எங்கும் நிறைந்து
தண்ணுமை— ம்ருதங்கங்களும்
எக்கம்— ஒருதந்தியையுடைய
மத்தளி— மத்தளியென்னும் வாத்யங்களும்
தாழ் பீலி— பீலிகளின் திரள்களும்
குழல்களும்— இலைக்குழல், வேய்க்குழல் முதலான முரளிகளும்
கீதமும்— ஊதிக்குத்தக்க பாட்டுக்களும்
எங்கும் ஆகி— எங்கு மிவையேயாய்க் கொண்டு
கோவிந்தன்— கண்ணபிரான்
வருகின்ற— * தன்னோராயிரம் பிள்ளைகளும் தானுமாக வருகிற
கூட்டம்— கூட்டத்தை
கண்டு— பார்த்து
மழை கொல் ஓ— "மேகமுழை மோ தான்
வருகின்றது— தரையிலே நடந்து வருகிறது"
என்று— என்று
மங்கைமார்— யுவதிகளான பெண்கள்
சொல்லி— களித்துச் சொல்லி
சாலகம் வாசல் பற்றி— ஜாலகரந்த்ரங்களிற் சென்றுபிடித்து
நுழைவனர்—(ஸம்ப்ரமத்தாலே சென்று மேல்விழுவதாக) நுழைவாரும்
நிற்பனர் ஆகி— (குருஜநபீதி முதலியவற்றால்) நிற்பாருமாகி
எங்கும்— அவன்போன வழியெங்கும்
உள்ளம் விட்டு— நெஞ்சைப் பரக்கவிட்டு
ஊண்— உணவை
மறந்து ஒழிந்தனர்— மறந்து விட்டார்கள்.

வ்யா. முதற்பாட்டு. தழைத்பாதி. தழையென்றும், தொங்கலென்றும் பீலிக்குடைவிசேஷங்கள். "தழைதொங்கல் சாபலம் பிச்சம் குளிரி பீலிக்குஞ்சமாகும்" என்று தழையென்றும், தொங்கலென்றும், சாபலமென்றும், பிச்சமென்றும், குளிரியென்றும், பீலிக்குடைக்குப் பேராகச்சொன்னதிறே நிகண்டு. எல்லாம் பீலிக்குடைக்குப்பேராகுதும் அதில் ஆகாரபேதமுண்டாகையாலே, தழையென்றும் தொங்கலென்றும் பிரித்துச்சொல்லுகிறது. "தழைகளும்" என்றபன்மைச்சொல்லாலேயே, "தொங்கலும்" என்றவிடத்திலும் பஹுவசநம்விவக்ஷிதம். ததும்பியெங்கும். எங்கும்நிறைந்து. தண்ணுமை-அதாவது

தீம்- யாவர்க்கும் இனிமையைத்தாரா நின்றுள்ள
குழல்— வேய்ங்குழலை
வாய் மடுத்து- திருப்பவளத்தில் வைத்து
ஊதி ஊதி— பலகாலூதிக் கொண்டும்
அலங்காரத்தால்- இப்படிப்பட்ட வேஷத்தோடே
வரும்— வாராநின்ற
ஆயப்பிள்ளை— இடைப்பிள்ளையின்
அழகு கண்டு- அழகைக்கண்டு
என் மகள்— என் பெண்ணானவள்
ஆசைப்பட்டு— ஆசைப்பட்டு
விலங்கி நில்லாது— ('இது கண்டவர்களை வருத்தும்' என்று கண்ணை மறைவைத்து) வழிவிலங்கி நில்லாதே
எதிர் நின்று கண்டீர்— அவனுக்கெதிரே நின்று இடீர் !
வெள்வளை- சங்குவளைகளும்
கழன்று— ( கையில் தங்காமல் ) கழன்று
மெய்- சரீரமும்
மெலிகின்றது- சரியாநின்றுள்
என்று- வினவவந்தவர்களுக்குத் தன் பெண்ணின் தசையைச் சொல்லுகிற தாயார் பாசுரமாய்ச் செல்லுகிறது.

௯௰. ஒன்பதாம்பாட்டு. வலங்காதில் மேல்தோன்றிப் பூவணிந்து - வலக்காதிலே செங்காந்தள்பூவை யலங்காரமாகச்சாத்தி. இடக்காதுக்கு ஒன்றும் சொல்லாமையாலே ஒரு காதுக்குச் சாத்திக்கொண்டு வருகிறவிதுதானும் ஓரழகாகச் சாத்திக்கொண்டு வந்தானென்னுதல்; ஒரு காதுக்குச் சாத்தினவளவிலே, மல்லிகைமாலையைக் கண்கையாலே அத்தை மறந்து இத்தைச்சாத்தி விட்டானென்னுதல். மல்லிகைவனமாலை. "வனம்" என்கிறவித்தை, மல்லிகையோடே சேர்த்து - காட்டு மல்லிகைமாலை யென்னுதல். அன்றிக்கே, வனமென்று - அழகாய், மல்லிகையா லுண்டான அழகியமாலை யென்னுதல். மௌவல்மாலை. மௌவலாவது மல்லிகையின் அவாந்தரபேதம். பூவை, காயா என்னுமிடத்தில், பூவை யாவது - காயாவின் அவாந்தர பேதமானாற் போலே. மௌவல் மாலையென்று - இங்கும் அந்தவனப்புக் கூட்டிச் சொல்லவுமாம். இஃது, "அணிந்து" என்றத்தை இங்கும் கூட்டி இம்மாலைகளையுமணிந்து என்று சொல்லக்கடவது. இவைதான் திருமார்புக்கு அலங்காரமாகச் சாத்துமவையிறே.

சிலிங்காரத்தால் குழல்தாழவிட்டு. சிலிங்காரம் - ச்ருங்காரம்; அலங்காரமென்றபடி. இத்தால் - திருக்குழல் பணியாகச் சாத்தும் பூந்தொடையைச் சொல்லுகிறது. அந்த அலங்காரத்தோடே கூடத் திருக்குழலைத் திருமுதுகிலே தாழவிட்டு. தீங்குழல்வாய் மடுத்தூதியூதி. தீமென்று - இனிமை. "இன்னார்க்கு" என்று விசேஷியாமையாலே - தன்னோடு பிறரோடு வாசியற எல்லார்க்கு மினிதாயிருக்கும் குழலென்றபடி. கேட்கிறவர்களினும் தன் செவி பணித்தாகையாலே "பேதுறுமுகஞ்செய்து நொந்து நொந்து" என்கிறபடியே முதல் தன்னைவருத்தி, பின்னையிறே பிறருக்குப்போவது. பிறரைவருத்துகையாவது - "அவிழ்ந்துமறந்து வானவரெல்லாம்" என்னும், "தும்புருவோடு நாரதனும் தந்தம்வீணை மறந்து" என்னும், "கோவலர் சிறுமியர் - வந்து கவிழ்ந்து நின்றனர்" என்னும், "பறவையின் கணங்கள் கூடுதுறந்து வந்துசூழ்ந்து" என்னும் "மரங்கள்நின்று மதுதாரைகள் பாயும்" என்னும் சொல்லுகிறபடியே - தேவமனுஷ்ய திர்யக்ஸ்தாவர விபாகமற எல்லாரையும் மொக்க வருத்துகை. இப்படியிருக்கிற திருக்குழலைத் திருப்பவளத்திலே வைத்துப் பலகாலூதிக்கொண்டு.

மூன்றாம்பத்து - ஐந்தாந்திருமொழி - அட்டுக்குவி - ப்ரவேசம்.

அ. கீழ்ச்சொன்னபடியே தான்விரும்பி மேய்த்துக்கொண்டுபோகிற கன்றுகளுக்கும் பசுக்களுக்கும், தனக்கு அபிமதவிஷயங்களான கோபகோபீஜநங்களுக்கும் பாதகமாம்படி இந்த்ரன் பசிக்கோபத்தாலே கல்வர்ஷத்தை வர்ஷிப்பிக்க, " குன்றெடுத் தாநிரை காத்தபிரான் " என்கிறபடியே மலையையெடுத்து ஜங்கமவர்க்கமானவற்றுக்கு ஒரு நலிவு வாராதபடி. சொக்கினவுபகாரம் திருவுள்ளத்திலே பின்னூட்டி, மலையெடுக்கவேண்டின தோள்களையும், மலைதன்னிலுண்டான வளப்பங்களையும், மலையினுடைய பரப்பையும், அதினுடைய வளப்பாட்டையும், அத்தை அநாயாஸேனப் பிடுங்கியெடுத்தபடியையும், அதுதன்னை ஏழுநாள் ஒருபடிப்பட தரித்துக்கொண்டுநின்ற படியையும், அத்தால் திருக்கைக்கு ஒரு வாட்டமின்றிக்கேயிருந்தபடியையுமெல்லாம் தன்னம்போலேதரித்துப்பேசி, அவனுடைய ஆபத்ஸகத்வமாகிற மஹாகுணத்துக்கு ப்ரகாசகமான அந்த திவ்யசேஷ்டிதத்தினுடைய ரஸத்தையநுபவித்து இனியராகிறார்- இத்திருமொழியில். ... ... ... ...*

மூ.—அட்டுக்குவிசோற்றுப்பருப்பதமும் தயிர்வாவியு நெய்யளறுமடங்கப்
பொட்டத்துற்று மாரிப்பகைபுணர்த்த பொருமாகடல்வண்ணன் பொருந்தமலை
வட்டத்தடங்கண்மடமான்கன்றினை வலைவாய்ப்பற்றிக்கொண்டுகுறமகளிர்
கொட்டைத்தலைப்பால் கொடுத்துவளர்க்குங்கோவர்த்தனமென்னும் கொற்றக்குடையே.

பதவுரை.

அட்டு— சமைத்து
குவி— குவிக்கப்பட்ட
சோறு— சோறாகிற
பருப்பதமும்— பர்வதமும்
தயிர் வாவியும்— தயிரோடையும்
நெய் அளறும்— நெய்ச் சேறும்
அடங்க— ஆகிய இவற்றையெல்லாம்
பொட்ட— சடக்கென
துற்று— அமுது செய்து
மாரி— மழையாகிற
பகை— பகையை
புணர்த்த— உண்டாக்கினவனும்
பொரு— திரைபொருகிற
மா கடல்— கருங்கடல் போன்ற
வண்ணன்— திருநிறத்தை யுடையவனுமானவன்
பொருந்த— தாங்கின
மலை— மலையானது;
வட்டம்— வர்த்துலமாய்
தட— பெருத்திருக்கின்ற
கண்— கண்களையுடைத்தாய்
மடம்— தாயின் வசத்திலே ஒழுகும் பவ்யதையையு முடைத்தான
மான் கன்றினை— மான்கன்றை
வலைவாய்— வலையிலே
பற்றிக்கொண்டு— பிடித்துக்கொண்டு
குறமகளிர்— குறப்பெண்கள்
கொட்டை— பஞ்சுச்சுருளின்
தலை— தலையிலே
பால்கொடுத்து— ‡பால் உண்ணக்கொடுத்து
வளர்க்கும்— வளர்க்காநிற்பதாய்
கோவர்த்தனம் என்னும்— பசுக்களைப் பெருக்கிக்கொண்டு போருகையாலே ‘கோவர்த்தந’ மென்னும் பேரையுடைத்தாய்
கொற்றம்— அம்மழையை வென்ற வெற்றியையுடைத்தாய்
குடை— ஒருவர்மேலொருதுளி விழாதபடி கவிந்து நிற்கையாலே குடையென்னப்பெற்றமலையாம்.

‡பஞ்சுச்சுருளின் தலையாலே பால்தோய்த்து மான்கன்றுகளுக்குக் கொடுப்பர்கள்.

வ்யா. முதற்பாட்டு. அட்டுக்குவிசோற்றுப் பருப்பதமும். ஆக்கிக் குவித்த சோற்றுப் பர்வதமும், கோபஜநங்கள், வர்ஷார்த்தமாக இந்த்ரனை ஆராதிக்க, அவன் ப்ரீதனும் வர்

வர்ஷிப்பிக்க அத்தாலே பசுக்களுக்குப் புல்லும் தண்ணீருமுண்டாய், அத்தாலே பாலும் நெய்யும்மிகுந்து ஊர்த்புஷ்டமான ஸம்பத்தோடே வர்த்திக்கக்கடவதாயிறே யிருப்பது. ஆகையாலிறே, "எழில்விழவில்பழநடைசெய் மந்திரவிதியிற் பூசனை" என்று இத்தைப் பழையதாகநடந்துபோரும் அநுஷ்டானமாகச்சொல்லுகிறது. இப்படியாகையாலே, இந்த்ராராதனை பண்ணுகைக்காக, திருவாய்ப்பாடியில் பஞ்சலக்ஷங்குடியிலும் வாசல்கள்தோறும் வரிவைத்துச்சமைத்து, "அன்னக்குடத்தாற் புக்கபெருஞ்சோறு" என்கிறபடியே சகடங்களிலே வைத்திழுத்துக்கொண்டுவந்த சோறெல்லாம்சேர, பெருந்திருப்பாவாடைபோலே குவிக்கையாலே பர்வதம்போலே உயர்ந்திருக்குமிறே; அத்தைப்பற்ற "அட்டுக்குவிசோற் றுப்பருப்பதமும்" என்கிறது. பருப்பதமென்றது - பர்வதமென்றபடி. தயிர்வாவியும். தயிரோடையும். நெய்யளறும். நெய்ச்சேறும். அச்சோற்றுமலையின்மேலே தொட்டியாகக் கட்டி தயிரை நிறையவிடுகையாலே, அத்தை அந்தமலைக்குண்டான வோடையாக ரூபித்துச்சொல்லுகிறது. நெய்யையும் அப்படியே தொட்டிகளாகப்பிடித்து அதுக்குள்ளும் சுற்றெங்கும் நிறையவிடுகையாலே செறிந்துகிடக்கும்படியைப்பற்ற "அளறு" என்கிறது. இவை மூன்றையும்சொன்னது - மற்றுமுண்டான பால் பழங்கள் கறிகள் முதலானவற்றுக்கும் உபலக்ஷணம். அடங்க. இவையடைய. பொட்டத்துற்று. போரத்துற்ற- சடக்கெனவமுதுசெய்து. தேவதாந்தரத்தை உத்தேசித்துச்சமைத்ததில் தத்தத்பரம்பரை நின்றும் நீக்கவும்வல்ல தனக்கொழிய, "தனக்கு அசாதாரணமாயிருப்பார்க்கொள்ளாது" என்றுபுத்து அடக்கத்தானே யமுதுசெய்தது. "நாக்கள் முன்புசெய்துபோந்தபடியாதை செய்யவேணும்; என்று மறுமகள்வோ ப்பட்டு இன்னமும் இவர்கள் விலக்கவுங்கூடும்" என்றுபுத்துச் சடக்கெனவமுதுசெய்தது. மாரிப்பகைபுணர்த்த. வர்ஷமாகிற பகையையுண்டாக்கின. அதாவது - இந்த்ரனுக்கென்று சமைத்தசோற்றை அவனுக்கு இடாதபடி விலக்கி, மக்கு இடச்சொல்லி, (க) "மேராவபூ(ேகாஷ்டி)" என்று தான் அமுதுசெய்தவிதனை யாலேயிறே அவன் பசிக்கோபத்தாலே புஷ்கலாவர்த்தகாதி மேகங்களையேவி வர்ஷிப்பிக்க வேண்டிற்று; ஆகையாலே வர்ஷமாகிற பகையையுண்டாக்கினன் இவனொருவனேயென்கிறது. பொருமாகடல்வண்ணன். திரைபொருகிற கருங்கடல்போன்ற திருநிறத்தையுடையவன்; தான்பிறந்தவூரிலுள்ளவர்களுக்கு அப்யசேஷ்டிதத்தை அநுபவியாநுண்டான ஹர்ஷத் தேகத்தையும் திருமேனியின் புகரையும் சொல்லுகிறது. பொறுத்தமலை. தரித்துக்கொண்டு நின்றமலை, எழுநாள் ஒருபடிப்படச்சுமந்துகொண்டிறே நின்றது. வட்டத்தடங்கண்மடமான்கன்றினை. †வட்டணித்தப்பெருத்தகண்களையும், தாயினுடையவசத்திலே பொழுதும் பவ்யதையையுமுடைத்தான மான்கன்றை. வலைவாய்ப்பற்றிக்கொண்டு. வலையிட்டுப்பிடித்துக்கொண்டு. அம்மலைமேல் வர்த்திக்கிற குறவர், மான்கன்றுகளை குழ்வலைக்குள்ளாக்கிப் பிடித்துக்கொண்டுபோய், தங்களிடங்களிலே குறப்பெண்களகையிலே காட்டிக்கொடுப்பார்களாய்த்து. குறமகளிர்கோட்டைத் தலைப்பால்கொடுத்து வளர்க்கும். அந்தக்குறப்பெண்களானவர்கள் பஞ்சச்சுருளைப் பாலிலேதோய்த்து, அதினுடைய தலையை தாய்முலைபோலே உண்ணக்கொடுத்து வளர்ப்பார்களாய்த்து. கோட்டை - பஞ்சச்சுருள். கோவர்த்தனமித்யாதி. புல்லும் தண்ணீரும் எப்போதுமுண்டாய், பசுக்களை வர்த்திப்பித்துக்கொண்டு போருகையாலே "கோவர்த்தனம்" என்கிற பேரையுடைத்தாய், கவியவர்ஷத்தை ஜயித்து ஒருவர்மேல் ஒருதுளிவிழாதபடி கவிந்துநிற்கையாலே "கோவர்த்தனமென்னும்கொற்றக்குடை" என்கிறது. ... ... ... ... ... ... ... ... க,

(க) "கோவர்த்தகோர்ஸ்மி" † வட்டணித்து - வர்த்துலமாய்.

தோற்ற நின்றதே. என்கையென்னில்; சிலையென்று - க்ரூரமாயிருக்கிற மிளிரு தலையுடைய சப்தத்தையும் கோரத்தையும், "வெங்கண்" என்று - நெருப்புப்பறந்த கண்களையும் சொல்லுகையாலே. இத்தனையும் மேகத்துக்கு முண்டிறே; கேட்டவர்களுக்கு பயங்கரமாம் படியான முழக்கமும், அடர்த்துக்கொண்டு வர்ஷிக்கிற்கிற ஆக்ரஹமும், "நிலைநின்று மின்னிலகும்" என்கிறபடியே சொல்லிவிட்டம் போலேயிருக்கிற மின்னினுடைய சுழிப் பையுமுடைத்தாய், இருட்சியாலும் திரட்சியாலும் உயர்த்தியாலும் கண்டவர்களுக்கு "மத்தகஜம்" என்றே சொல்லலாம்படி யிருக்கையாலே.

அடிவயிறுக்கையிட் டெழுப்பியிட்டு. பகலியினுடைய வேர்ப்பற்றிலே உதும்படியாகத் திருக்கையைச் சேறுசெலுத்தி, மற்றத் திருக்கையாலே மேலேபிடித்துக் கொப்பிடு க்கி. அமரர்பெருமான் கொண்டுநின்றமலை. * அபர்வருமமர்களதிபதி, இயற்றியில்லாத னைப்போலே தானேதரித்துக் கொண்டுநின்றமலை. கடல்வாய்ச்சென்று மேகம்கவிழ்ந்திறங்கி. கடலிடத்தேசென்று மேகங்கள் இறங்கிக் கவிழ்ந்துகிடந்து. கதுவாய்ப்பட நீர்முகந்தேறி. கதுவாய்ப்பட வென்றது - வடுப்படவென்றபடி. வடுப்படுகையாவது - குறைபடுகை. இத் தால் - கடல்குறைபடும்படியாக அங்குள்ள நீரையெல்லாவற்றையும் முகந்துகொண்டு ஆகாசத்திலே யேறியெல்கை. அன்றிக்கே, கதுவுதல்-கவ்வுதலாய், அபிநிவேசயுக்தமானவாயை யுடைத்தாய்க்கொண்டு "பெருப்பெரவம் மண்டியுண்ட" என்கிறபடியே கடல்வெறுக் கலையாம்படி அங்குள்ளநீரை முகந்துகொண்டு ஏறியென்னவுமாம். எங்கும் குடவாய்ப்பட நின்று மழைபொழியும். ஸார்வத்திகமாய்க்கொண்டு குடத்திட்டுச் சொரிந்தாற்போலே ஏழு நாள் ஒருபடிப்படநின்று வர்ஷத்தைச்சொரிகிற. கோவர்த்தனமென்னும் கொற்றக்குடையே.௪.

மூ.—வானத்திலுள்ளீர்வலியீருள்ளீரே லறையோவந்து வாங்குமினென்பவன்போல்
ஏனத்துருவாகிய வீசனெந்தையிடவனெழ வாங்கியெடுத்தமலை
கானக்களியானை தன்கொம்பிழந்து கதுவாய்மதஞ்சோரத் தன்கையெடுத்துக்
கூனற்பிறைவேண்டி யண்ணாந்துநிற்குங் கோவர்த்தனமென்னுங் கொற்றக்குடையே,

பதவுரை.

வானத்தில் உள்ளீர்— "மேலுலகங்களில் வசிக்குமவர்களே!
வலியீர் உள்ளீரேல்— வல்லமையுள்ளவர்களாயிருந்ீர்களாகில்
அறை— ஜயபத்ஸூசகமான சரவமிட்டு
வந்து— இவ்விடம் வந்து
வாங்குமின்— இம்மலையை யெடுத்துக்காணுங்கள்"
என்பவன் போல்— என்று சொல்லுமவன் போலே
ஏனம் உரு ஆகிய— வராஹவேஷங்கொண்டு, பூமியை அண்டபித்தியினின்று மெட்டு விடுவித்தவனும்
ஈசன்— ஸர்வநிர்வாஹகனும்
எந்தை— எமக்கு ஸ்வாமியாயுள்ளவன்
இடவன்— மண்கட்டிபோலே
எழ— வேர்ப்பற்றோடே கிளரும்படி
வாங்கி— வாங்கி
எடுத்த— எடுத்துக்கொண்டு நின்ற
மலை— மலையானது;
கானம்— காட்டிலே
களி— செருக்கித்திரிகிற
யானை— யானையானது
தன் கொம்பு – தன் தந்தத்தை
இழந்து—(கரைபொருதுதிரிகையாலே துடித்திலிருக்குதுண்டு முறிகையாலே) இழந்து

வன் பாரத்தை— வலிய பாரத்தைத் (தாங்கிக் கொண்டு)
நின்றது ஓர்— நின்றதொரு
வன் தூணை— வலிய தூணைப்போலே
தன் பேர்— 'கோவர்த்தநன்' என்ற தன் பேரை
இட்டுக்கொண்டு— அந்தமலைக்கு இட்டுக் கொண்டு
தரணிதன்னில் — இந்நிலத்திலே
தாமோதரன்— ஆய்ச்சி பொருத்திக்குக் கட்டவு மடிக்கவுமாம்படி பவ்யனாயிருந்தவன்
தாங்கு— தாங்கிக்கொண்டு நின்ற
தடம் வரை தான்— பெரிய மலையாவது;
முசுக்கணங்கள்— (ஓர் வகைப்பட்ட) குரங்குகளின் திரளானவை
முன்பே— ஏற்கவே
வழி காட்ட— ஒரு கிளையில் நின்றும் மற்றொரு கிளையில் பாயும் வழி காட்டுகைக்காக
தம்முடை குட்டன்களை— தங்கள் குட்டிகளை
முதுகின்— முதுகிலே
பெய்து— கட்டிக்கொண்டு போய்
கொம்பு— கொம்பிலே
ஏற்றி இருந்து— ஏற்றிவைத்து
குதி— ஒரு கொம்பில் நின்று மொரு கொம்பிலே தத்தும்படியை
பயிற்றும்— பழக்குவியாநிற்கிற கோவர்த்தநமென்னும் கொற்றக் குடையாம்.

வ்யா. ஒன்பதாம்பாட்டு. வன்பேய்முலையுண்டதோர் வாயுடையன். வலிய பேயுடைய முலையுண்டதொரு வாயையுடையவன். பேய்க்கு வன்மையாவது- இவனுடைய மௌக்த்யத்தையும் வடிவழகையும் கண்டவிடத்திலும் இளகாத நெஞ்சின்வலிமை. அன்றிக்கே, வன்மை முலைக்கு விசேஷணமாய்- அதின் விஷத்தினுடைய க்ரௌர்யத்தைச் சொல்லவுமாம். கஞ்சேற்றின முலையிறே. ஓர்வாயென்றது- அந்த நஞ்சைப்போக்கி உண்கையாலும் அவளை முடிக்கையாலும் அத்விதீயமானவாயென்றபடி. வன்றூணைநின்றதோர் வன்பாரத்தை வலியபாரத்தை தரித்துநின்றதொரு வலியதூணைப்போலே. "தரித்து" என்கிற கிரியையும் அத்யாஹார்யம்.

தன்பேரிட்டுக்கொண்டு. "கோவர்த்தநன்" என்கிற தன்பேரை அதுக்கிட்டுக்கொண்டு. தரணிதன்னில். தேசாந்தரங்களில் வ்யாவ்ருத்தி. அதாவது - பேறுவுடையாரான ப்ரஹ்மசாரிகள்போல்லாக்கன்றிக்கே, கூர்த்தமுநிந்திருக்கும் வளவரம்படியான இந்நிலத்திலேயென்றபடி. தாமோதரன். பெற்றதாய்க்குக் கட்டவைக்கலாம்படி பவ்யனாயிருந்தவன். "வன்பேய்முலையுண்டதோர் வாயுடையன்" என்றும், "தாமோதரன்" என்றும் சொல்லுகையாலே- பேய்த்தாயை முடித்து ஆய்த்தாய்க்கு பவ்யனாயிருந்தபடி சொல்லுகிறது. தாங்குதடவரைதான். இப்படி யிருக்கிறவன் தரித்துக்கொண்டுநின்ற பெரிய மலைதான். முன்பேயித்யாதி. முசுக்கணங்களானவை ஏற்கவே பிள்ளைபோபெயாயாயும்வழி காட்டுகைக்காகத் தந்தாமுடைய குட்டிகளை முதுகிலே கட்டிக்கொண்டுபோய், கொம்பிலே யேற்றியிருந்து ஒரு கொம்பில் நின்றும் ஒரு கொம்பிலே குதிக்கும்படியைப், பின்முன்னுறக் குதித்துக் காட்டி அப்பயிற்பியாநிற்கும். கோவர்த்தநமென்னும் கொற்றக்குடையே. ...௯.

செங்கமல மலர்— செந்தாமரைப் பூவை
சூழ்— சூழப்படிந்த
வண்டு இனம் போலே— வண்டுகளின் திரள்போலே
சுருண்டு இருண்ட— சுருட்சியையும் இருட்சியையு முடைத்தான
குழல்— கேசபாசங்களானவை
தாழ்ந்த— தாழ்ந்திருந்துள்ள
முகத்தான்— முகத்தையுடையவன்
ஊதுகின்ற— ஊதுகிற
குழல் ஓசை வழியே— குழலோசை செவிப்பட்ட வழியே
மான் கணங்கள்— மான் திரளானவை
மருண்டு— அறிவழிந்து

மேய்கை மறந்து— மேய்ச்சலையும் மறந்து
மேய்ந்த— மேயக் கவ்வின
புல்லும்— புல்லும்
கடைவாய் வழி— கடைவாய் வழியே
சோர— நழுவி விழ
இரண்டு பாடும்— முன்னும் பின்னுமான இரண்டருகும்
துலுங்கா— அசையாமலும்
புடை— பக்கங்களில்
பெயரா— அடிபெயர மாட்டாமலும்
எழுது— (சுவரில்) எழுதப்பட்ட
சித்திரங்கள் போல— சித்திரங்களைப் போலே
நின்றன— ஒரு செயலற்று நின்றன.

வ்யா. ஒன்பதாம்பாட்டு. திரண்டெழு தழைமழைமுகில்வண்ணன். கார்காலத்திலே தன்னிலே திரண்டு கிளர்ந்து ஆகாசத்தில் கிளர்ந்ததாலே தழைப்புண்டாயிருக்கிற வர்ஷுகவலாஹகம்போலே இருக்கிற திருநிறத்தையுடையவன். செங்கமலமித்யாதி. சிவந்தசெந்தாமரைப்பூவைச் சூழப்படிந்த வண்டினுடைய திரள்போலே சுருட்சியையு மிருட்சியையு முடைத்தான திருக்குழல்கள் தாழ்ந்த திருமுகத்தையுடையவன். ஊதுகின்ற குழலோசை வழியே. அவன் ஊதுகிற திருக்குழலோசை செவிப்பட்ட வழியே. மருண்டித்யாதி. மான் திரள்களானவை ஜாதிப்ரயுக்தமான மௌக்த்யம் தோன்றும்படி அறிவழிந்து, தனக்கு ஸ்வபாவமாக எப்போதும் செய்துபோரும் மேய்கையைத் தவிருகையன்றிக்கே, விஸ்மரித்து மேயக்கவ்வின புல்லும் இறக்குதல் உமிழ்தல் செய்யமாட்டாத பாரவச்யத்தாலே கடைவாய் வழியே நழுவிவிழ, இரண்டுபாடுமித்யாதி. முன்னும்பின்னுமான இரண்டருகும் அசையாதே பக்கங்களில் போகவும் மாட்டாதே சித்ரத்தில் எழுதினவைபோலே ஒரு வ்யாபாரமற்று நின்றன. ... ... ... ... ... ... ... ... கூ.

மூ.— கருங்கண்தோகை மயிற்பீலியணிந்து கட்டிநன்குடுத்த பீதகவாடை
அருங்கலவுருவி னாயர்பெருமா னவனொருவன் குழலூதினபோது
மரங்கள்நின்று மதுதாரைகள்பாயு மலர்கள்வீழும் வளர்கொம்புகள்தாழும்
இரங்குங்கூம்புந் திருமால்நின்ற நின்றபக்கநோக்கி யவைசெய்யுங்குணமே. ௰.

பதவுரை.

கரு— கறுத்த
கண்— கண்களையுடைத்தான
தோகை— இறகுகளையுடைய
மயில் பீலி— மயில் பீச்சங்களை
அணிந்து— திருமுடியில் சாத்திக்கொண்டு,
நன்கு— நன்றாக

கட்டி உடுத்த— அழுந்தச் சாத்தின
பீதகம் ஆடை— திருப்பீதாம்பரத்தையும்
அரு— பெறுதற்கரிய
கலம்— திரு ஆபரணங்களையு முடைய
உருவின்— திருமேனியை யுடையவனும்
ஆயர்— இடையர்க்கெல்லாம்

ளிப்போரும் ஸம்பாவனையர், இப்போது அவர்களைப்போலே அவனையநுபவிக்கவே ணுமென்னுமாசை விஞ்சி, அவ்வாசாநுரூபமாகக்கிட்டி யநுபவிக்கப்பெறாமையாலே தரமான தன்மையழிந்து ஒருவிலக்ஷணாவஸ்தையைப் ப்ராப்தராய், ஸ்வதசையை அந்யாபதேசத்தாலே பேசுகிறார். அதாவது - பருவம் நிரம்புவதற்குமுன்னே க்ருஷ்ணவிஷயத்திலே ப்ரவணையாகாநின்ற தன்மகளுடைய தசையைக்கண்ட திருத்தாயார், இவள்பருவத்தின் இளமையையும், இப்படியிருக்கச்செய்தே அவன்விஷயத்திலே ப்ரவணையாய் அவனோடே இவள் ஸஞ்சருகிறபடியையும், இதுக்கடி ஸஜாதீயைகளாய்த் தத்விஷயத்தில் ப்ரவணைகளாயிருக்கும் பரிசுகளோடேயுண்டான ஸம்ஸர்க்கம் என்னுமத்தையும், இவள் சீலஸ்வபாவத்திலே அகப்பட்டிலும் அவனுடைய சேஷ்டிதங்களொழிய வேறொன்றறியாதபடியையும், இவை எல்லாவற்றுக்கும் மூலமாகத் தோழிமார் இவளை வசீகரித்துக்கொண்டுபோய் அவன் பக்கலிலே அகப்படுத்தினபடியையும், இவள் தன்னுடைய ப்ரவண்ய ப்ரகாரங்களையும், இத்தைக்கண்ட பந்துவர்க்கமும் அயலாரும் சொல்லுகிற வார்த்தைகளையுமெல்லாம், ஸந்நிதி தனக்குவித்தும் தன்னிலேயும் பேசின ப்ரகாரங்களாலே அருளிச்செய்கிறார். ... ... *

மூ.—ஐயபுழுதி யுடம்பளைந் திவள்பேச்சு மலந்தலையாய்ச்
செய்யநூலின் சிற்றாடை செப்பனுடுக்கவும் வல்லளல்லள்
கையினிற் சிறுதூதையோ டிவள் முற்றிற்பிரிந்துமிலள்
பையரவணைப் பள்ளியானொடு கைவைத்திவள் வருமே. ௧.

பதவுரை.

இவள் — இளம்பருவத்தளான என் பெண்பிள்ளையானவள்
உடம்பு — தன் உடம்பெல்லாம்
ஐய புழுதி — அழகிய புழுதியாம்படி
அளைந்து — புழுதியளைந்து
(உடம்பெல்லாம் புழுதியாவானேன்? என்றால், விளையாடிப் புழுதி யளைந்தே னென்னமாட்டாமல், )
இவள் பேச்சும் — இவள் தன் சொல்லும்
அலந்தலையாய் — ஸங்கீர்ணமாய்
( அதுவுமன்றி, )
செய்ய — சிவந்த
நூலின் — நூலாலே சமைக்கப்பட்ட
சிறு ஆடை — சிற்றாடையை
செப்பன் — ஒழுங்குபட
உடுக்கவும் வல்லள் அல்லள் — உடுக்கவும் மாட்டாதவளாய்
கையினில் — கையிலிருக்கும்படியான
சிறு தூதையோடு — (மணற்சோறுக்கும்) சிறிய தூதையோடு
முற்றில் — சிறு சுளகையும்
பிரிந்தும் இலள் — விடுவதும் செய்திலள்;
( பின்னையென் செய்யுமென்னில்; )
இவள் — இப்படிப்பட்ட பருவத்தளான இவள்
பை — படத்தையுடைய
அரவு — திருவனந்தாழ்வானாகிற
அணை — அணையை
பள்ளியானொடு — திருப்படுக்கையாக உடையவனோடு
கை வைத்து வரும் — கை கலந்து வாரா நின்றாள்.

என்று ஒரு பிராட்டி தசையை ப்ராபித்த ஆழ்வார், தாயார் பாசுரத்தாலே பேசுகிறார்.

வ்யா, முதற்பாட்டு. ஐயபுழுதியுடம்பளைந்து. அழகியபுழுதியை யுடம்பெங்குமளைந்து. அதாவது - புழுதியிலேயிருந்து விளையாடுகையாலே சரீரமெல்லாம் புழுதியாலே

னென்கை. என்றென்று பார்த்திருமொழிவதே. இப்படி இத்தைப் பலகாலும் சொல்லி, இக்குடிக்குத் தீங்குவாப்பொருத லோகத்தில் அநுகூல ஜநமானது நின்று தருப்பிற்றென்கிறாள். ... ... ... ... ... ... ... ௭.

மூ.—பட்டங்கட்டிப் பொற்றோடுபெய்திவள் பாடகமுஞ் சிலம்பும்
இட்டமாகவளர்த் தெடுத்தேனுக் கென்னோ டிருக்கலுறாள்
பொட்டப்போய்ப் புறப்பட்டுநின் றிவள் பூவைப்பூவண்ணாவென்னும்
வட்டவார்குழன் மங்கைமீ ரிவண்மாலுறுகின்றாளே. க.

பதவுரை.

வட்டம்— சுருட்சியை யுடைத்தாய்
வார்— நீண்டிருக்கின்ற
குழல்— கூந்தலை யுடையவர்களாய்
மங்கைமீர்— பருவத்தால் வந்த இளமையையுடையவர்களான பெண்காள்!
பட்டம்— நெற்றிக்கணியான பட்டத்தை
கட்டி— கட்டியும்
பொன்தோடு— (காதுக்கணியான) பொன்னாற்செய்த தோட்டையும்
பாடகமும் சிலம்பும்— (காலணியான) பாடகத்தையும் சிலம்பையும்
பெய்து— இட்டும்
இவள் இட்டமாக— இவளிஷ்டப்படி
வளர்த்து— வளர்த்து
எடுத்தேனுக்கு— இடுப்பிலெடுத்துக் கொண்டு திரிந்த எனக்கு
இவள்— இப்படி அருமையாக வளர்க்கப் பட்ட இவள்
என்னோடு— இப்படி சீராட்டி வளர்த்த என்னோடே
இருக்கலுறாள்— என்னருகில் இருக்கவும் இசைகிறிலள்;
இவள்—;
பொட்ட— திடீரென்று
போய்— என்னைக் கைவிட்டுப் போய்
புறப்பட்டு நின்று— எல்லாரும் காணத் தெருவிலே புறப்பட்டு நின்று
பூவைப்பூ வண்ணா என்னும்— 'காயாம்பூப் போன்ற நிறத்தையுடையவனே!' என்று வாய்விட்டுக் கூப்பிடா நிற்கும்;
(இதனாலிந்த தென்னென்ன;)
மாலுறுகின்றாள்— பிச்சேறினாள் என்றிந்த்தை காணதிக்க தென்கிறாள்.

வ்யா. ஆரும்பாட்டு. பட்டமித்யாதி. லலாடபூஷணமான பட்டத்தைக்கட்டி, கர்ணபூஷணமான பொன்னின் தோட்டையிட்டு, பாதபூஷணமான பாடகத்தையும் சிலம்பையுமிட்டு, "பெய்து" என்கிறக்ரியை இரண்டும் அந்வயிக்கக்கடவது. இவைதான் ஸர்வாபரணங்களுக்கு முபலக்ஷணம். இட்டமாகவித்யாதி. நியமித்து வளர்க்கையன்றிக்கே இவளுடைய இஷ்டத்திலே வளர்த்து, நிலத்திலே நடக்கவிடாமல் ஒக்கலையிலே யெடுத்துக் கொண்டு திரிந்தவெனக்கு. இவள்-என்னோடிருக்கலுறாள். இப்படி நான் சீராட்டி வளர்க்கப்பெற்ற இவள், இப்படி வளர்த்தவளன்றோவென்று ஸ்நேஹித்து எனக்கு பவ்யையாய் நடக்கவேணுமிறே; அது செய்யாவிட்டால், நான் தன்னைக்கண்டு தரித்துக்கொண்டிருக்கும்படி நெஞ்சொழிபவும் என்னருகு இடமாயிருக்கலாமிறே; அதுவும் செய்கிறிலள். பொட்டப்போயித்யாதி. அவ்வளவுமன்றிக்கே, சடக்கென என்னைவிட்டுப்போய், எல்லாரும் காணும்படி தெருவிலே புறப்பட்டு நின்று, ஸ்த்ரீத்வத்தாலே வாய்திறவாதிருக்கக்

ன்மேனுமி நாட்டற்றவளாய். இத்தால்- எனக்கு சியாம்யமல்லாதவளென்கை. கேசவபென்றும். ப்ரசஸ்தகேசனானவனேயென்றும். கேடிலீயென்றும். உன்னாலல்லது செல்லாதவர்களைபொருநாளும் கைவிடாதவனேயென்றும். கிஞ்சுகவாய்மொழியாள். கிளிபோலே சிவந்த வாயிற் பழுப்பையும் பேச்சில் இளமையையுமுடையவள். தனக்கடங்காமல் வகைபழிந்து அவன்பேரைச் சொல்லிநின்று கூப்பிடுகிற தசையிலும், இவளுடைய அதரசோபையும் மதுரபாஷணமும் திருத்தாயாருக்கு ஆகர்ஷகமாயிருக்கிறது காணும். வாசவார்குழல்மங்கைமீர். பரிமளிதமாய் ஒழுகுநீண்டமயிர்முடியையும் பருவத்தாலொத்த இளமையையுமுடையவர்களே!, இவள்மாலுறுகின்றாளே. இப்படி யிவள் அவன் விஷயத்திலே பிச்சேறுகின்றாள். எ.

மூ.—காறைபூணுங் கண்ணாடிகாணுந் தன்கையில் வளைகுலுக்கும்
கூறையுடுக்கு மயர்க்குந் தன்கோவைச் செவ்வாய்திருத்தும்
தேறித்தேறிநின் றாயிரம்பேர்த் தேவன்றிறம் பிதற்றும்
மாறின்மாமணி வண்ணன்மேலிவள் மாலுறுகின்றாளே. அ.

பதவுரை.

காறை— பொன்னாற் செய்த காறையை
பூணும்— கழுத்திலே பூணுகின்றாள்;
கண்ணாடி— கண்ணாடிப் புறத்திலே
காணும்— (காறையும் கழுத்துமான அழகைக்) காணுகின்றாள்;
தன் கையில்— தன் கையிலிருக்கிற
வளை— வளையை
குலுக்கும்— அசைத்துப் பாராநின்றாள்;
கூறை— புடைவையை
உடுக்கும்— ஒழுங்குபட உடாநின்றாள்;
(அவன் வரவுக்கீடாக இவ்வளவு அலங்கரித்தவளாயிருக்கும், அவன் வரக்காணாமையாலே,)
அயர்க்கும்— தளராநின்றாள்;
(மீளவும் இதற்குமேலாக அலங்கரிக்கத் தொடங்கி,)
கோவை— கோவைக்கனிபோலே

செவ்— சிவந்திருக்கிற
தன் வாய்— தன்னுடைய அதரத்தை
திருத்தும்— மிகச் சிவக்கும்படி பண்ணாநின்றாள்;
தேறித் தேறி— மிகத் தெளிவுடையளாய்
நின்று— தரித்து நின்று
ஆயிரம் பேர்— ஸஹஸ்ரநாமங்களையுடைய
தேவன்— தேவனுடைய
திறம்— ப்ரகாரங்களை
பிதற்றும்— அடைவுகெடப் பேசாநின்றாள்;
(ஆகையால்,)
மாறு இல்— ஒப்பில்லாத
மா மணி— நீலமணி போன்ற
வண்ணன் மேல்— நிறத்தையுடைய கண்ணன் விஷயத்திலே
இவள் மால் உறுகின்றாள்— இவள் பிச்சேறுகின்றாள்.

வ்யா. எட்டாம்பாட்டு, காறைபூணும். தன்னுற்றாமையாலே "வசுதேவன்மகனைச் சேர்த்து காமனைப்பெறவேணும்" என்று நினைத்து, "அவனுக்கு ஆகர்ஷகமாம்படி நம்மை யலங்கரிக்கவே அவன்தானேவந்து மேல்விழும்" என்று தான் தன்னையலங்கரிக்கையிலே ப்ரவ்ருத்தையாய், ப்ரதமம், அவன் கண்டு ப்ரியப்பட்டுக் கட்டிக்கொள்ளும் கழுத்துக்கு அலங்காரமாகக் காறையைப்பூணும். இதுதான் உத்தமாங்கத்துக்கும் உடம்புக்கும் நடுவாய் நின்று ஒளிவிடுகிறதாகையாலே. கண்ணாடிகாணும். காறைபூண்டவிருத்தம் தன் கண்ணுக்கு விஷயமல்லாமையாலே, அவனுக்கும்படி வாய்த்ததோவில்லையோ என்று

பதவுரை.

( இவள் விஷயமாக, )
கைத்தலத்து உள்ள— கையிலுள்ள
¶ மாடு அழிய—செல்வமெல்லா மழியும்படி
கண்ணாலங்கள்— கல்யாணங்களை
செய்து— பண்ணி
இவளை— நமக்குச் சேர்ப்படியாக இவளை
வைத்து வைத்துக் கொள்ளு— நியமித்தும் காவலிட்டும் வைத்துக் கொண்டிருந்து
என்ன வாணியம் — என்னப்ரயோஜநமுண்டாம்;
நம்மை— நம் குடிக்கு
வடுப்படுத்தும்— பழியுண்டாக்க வற்கும்;
( என்று தாயார் சொல்ல;- இத்தைக் கேட்ட பந்துக்கள்- )
செய்த்தலை— கழனியிலே
எழு— வளருகிற
நாற்றுப்போல்— நாற்றையுடையவன் வேண்டினபடி அவற்றை விநியோகங்கொள்ளு மாப்போலே

இவளையும்;
அவன் — இவளாலே விரும்பப்படுகிற அவன்
செய்வன செய்துகொள்ள— வேண்டினபடி செய்து கொள்ளும்படியாக
மை— கறுத்ததாய்
தட— பெருத்திருக்கின்ற
முகில்— மேகம் போன்ற
வண்ணன் பக்கல்— வடிவையுடையவன் பக்கலிலே
வளர— இவள் வளரும்படியாக
விடுமின்கள்— விடுங்கோள்
என்றார்கள்.

---

¶ "மாடு - பொன், பசும், செல்வம்" என்று நிகண்டு.

வ்யா. ஒன்பதாம்பாட்டு. கைத்தலத்துள்ளவித்யாதி. பந்துவர்க்கத்துக்கிடாகவும் ஐச்வர்யத்துக்கிடாகவும், இதொரு பெண்ணுமன்றோ நமக்குள்ளது என்றும் ஸ்நேஹத்தாலே லோகமெல்லாம் கொண்டாடும்படி கையிலுள்ள தனமெல்லாமழிய இவள் விஷயமாக வுண்டான கல்யாணங்களை யெல்லாஞ்செய்து. இவளைமித்யாதி. "நம்முடையகூடுன்னாத பருவமான விவளைக் கடக்கலாமோ" என்று பார்த்து, நியமித்தும் காவலிட்டும் வைத்துக் கொண்டிருந்து என்ன ப்ரயோஜநமுண்டு. நமக்கு மிவளுக்கும் ஜாத்யுசிதமாகச் சொல்ல லாவதொரு ப்ரயோஜநமில்லையிறே. நம்மைவடுப்படுத்தும். இதுக்குமுன்பு ஒரு பழிப்பற் றப்போந்த நம்மை வடுப்படுத்தும்படி பண்ணும். அதாவது - "பந்துக்கள் உடன்பட இருக்கத்தானே புறப்பட்டுப்போனாள்" என்னும்படிபோய் நம்முடையகுடிக்கு அவத்யத்தை விளைக்குமென்கை. செய்த்தலையித்யாதி. செய்த்தலையிலே வளர்ந்த நாற்று உடையவன் வேண்டினபடி விநியோகங் கொள்ளுமாப்போலே இவளையும் அவன்வேண்டினபடி செய்து கொள்ள. மையித்யாதி. கழுத்தேதட்டினதாக நீரைப்பருகுகையாலே கறுத்துப் பெருத்திருந்துள்ள மேகம்போலே யிருக்கிற வடிவை யுடையவன்பக்கலிலே இவள்வளரும்படியாக நீங்களே சேர்த்துவிடுங்கோள், என்று இப்படி பந்துக்கள் சொன்னார்கள் என்கிறவித்தனையும் இவ்விடத்தில் அபிப்ரேதம். அதுக்கடி "தாயுரைசெய்ததனை" என்று-திருமொழி முழுதும், தாயார்வார்த்தையென்று நிகமிக்கையாலே. இது மேலிப்பாட்டுக்குமொக்கும். ௯.

மூ.—பெருப்பெருத்த கண்ணாலங்கள்செய்து பேணிநம்மில்லத்துள்ளே
இருத்துவா னென்றெண்ணியிருக்க இவளுமொன் றெண்ணுகின்றாள்
மருத்துவப்பதநீங்கினாளென்னும் வார்த்தைபடுவதன்முன்
ஒருப்படுத்திடுமினிவளை யுலகளந்தானிடைக்கே. ௰.

இவள்—;
மாலதாகி— மிக்க ஆசையை யுடையளாய்க் கொண்டு
மகிழ்ந்தனள் என்று — மகிழ்ந்தாளென்று
தாய்— திருத்தாயார்
உரை செய்ததனை— சொன்னதை
கோலம் ஆர்— அழகுமிக்கிருக்கின்ற
பொழில்— பொழில்களாலே
சூழ்— சூழப்பட்ட
புதுவையர்— ஸ்ரீவில்லிபுத்தூரிலுள்ளார்க்கு
கோன்— நிர்வாஹகரான
விட்டுசித்தன்— பெரியாழ்வார்
சொன்ன— அருளிச்செய்த
மாலை— சொல்மாலையான
பத்தும்— பத்துப்பாட்டையும்
வல்லவர்கட்கு— ஓதவல்லவர்களுக்கு
வரு— பகவதநுபவத்துக்கு விரோதியாய் வருவதொரு
துயர்— துக்கம்
இல்லை— உண்டாகாது.

வ்யா. ஞாலமித்யாதி. பூமிதொடக்கமான ஸகலலோகங்களை ப்ரளயத்தில் அழியாதபடி திருவயிற்றிலேவைத்து ஒருபவனாய் ஆலிலையிலே கண்வளர்ந்தருளின அகடிதகடநாஸாமர்த்யத்தை யுடையனாய் ஸர்வஸ்வாமியான நாராயணனுக்கு. இவள்மாலதாகி மகிழ்ந்தனளென்றித்யாதி. அதிபாலையானவிவள் அதிமாத்ரமான வ்யாமோஹத்தை யுடையளாய்த் தலைப்பெய்த மநோரதத்தாலே ப்ரீதையானாளென்று தாயாரானவள் சொன்னசொல்லை. கோலமித்யாதி. அழகுமிக்கிருக்கின்ற பொழில்களாலே சூழப்பட்ட ஸ்ரீவில்லிபுத்தூரிலுள்ளார்க்கு நிர்வாஹகரான பெரியாழ்வாரருளிச்செய்த ஸந்தர்ப்பமாய் ச்லாக்யமாயிருக்கின்ற பத்துப்பாட்டையும் ஸாபிப்ராயமாக அநுஸந்திக்க வல்லவர்களுக்கு. இல்லைவருதுயரே. பகவதநுபவாதிகளுக்கு விரோதியாய் வருவதொரு து:க்கமில்லை. ... ... கக.

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.

---

அடிவரவு.—ஐய வாயில் பொங் கேழை நாடு பட்டம் பேசு காறை கைத்தலப் பெரு ஞாலம் நல்லை.

---

ஆ. திருமொழி-உக-க்கு, பாட்டு-உஅச.

---

மூன்றாம்பத்து - எட்டாந்திருமொழி - நல்லதோர் தாமரை, ப்ரவேசம்.

அ.—கீழ்த்திருமொழியிலே - தன்பெண்பிள்ளைக்கு அவன்பக்கல் செல்லுகிற ப்ராவண்யத்தைக்கண்ட திருத்தாயார் "கோவிந்தனொடு இவளைச் சங்கையாகி" என்று அவனோடே இவளுக்குக் கலவியுண்டாய்த்ததென்று மூர்ச்சித்து, பின்பு பலஹேதுக்களாலும் லஜ்ஜையும் ப்ரவர்த்தமானமையைத் தானுமறிந்து, இவளுடைய ப்ராவண்யத்திலே ‡ முறுகுதலைக்கண்ட பந்துக்களும், "மருத்துவப்பதம் நீங்கினாளென்னும் வார்த்தைபடுவதன்முன் ஒருப்படுத்திடுமின் இவளை உலகளந்தானிடைக்கே" என்றுசொல்லி யிருக்கச்செய்தேயும், சடக்கெனவிசைந்து கொடாதொழிகையாலே, அவன் முற்பாடனுப்பவர்.¶ கள்வன் கொல்

‡ முறுகுதல் - முதிர்த்தி.

¶ "கள்வன்கொல் யானறியேன்" என்ற திருமொழியிற் சொன்ன போட்டி.

விற் பிராட்டியைக் கொண்டுபோனாற்போலே இவளை ‡ அத்தலைத்தலையாலே மறைத்துக் கொண்டு தன்னுடைய திவ்யநகரியான திருவாய்ப்பாடியிலே கொண்டுபோக, அந்நாங்கையைக் காத்துக்கொண்டிருந்த திருத்தாயார், படுக்கையில் பெண்பிள்ளையைக் காணாமையாலே "இவளையொழியக் கொண்டுபோனானில்லை" என்றும் "இவன் கொண்டுபோவது தன் திருவாய்ப்பாடியிலே" என்றும் அறுதியிட்டு; இவள்போனபோதே தன் திருமாளிகையெல்லாமழகழிந்து வெறிசோடிற்றென்றும்; இவன் இப்படி படவுகேடாகக் கொண்டு போனவிது இக்குடிக்கு ஏச்சாமோ குணமாமோவென்றும்; இவளுக்கு பாணிக்ரஹணார்த்தமான உத்ஸவம் இப்படி நடக்குமோவென்றும்; மாமியாரான யசோதைப்பிராட்டி இவளைக் கண்டுகந்து மணவாட்டுப் பெண்பிள்ளையென்று ஸத்கரிக்குமோவென்றும்; மாமனாரான ஸ்ரீநந்தகோபர் உகந்தணைத்துக் கொண்டு இவள் வைலக்ஷண்யத்தைக்கண்டு இவளைப்பெற்ற தாயார் இனி தரிக்கமாட்டாளென்பரோ வென்றும்; அவன்றன் பிறந்தகுலத்தி லன்னாரைப் போலே என்மகளைப் புணர்ந்து உடன்போனதற்கு தேறுதலாகக்கொண்டு குடிவாழுமோ, நாட்டாரறியும்படி நன்றாகக் கல்யாணஞ்செய்து கைப்பிடிக்குமோவென்றும்; தன்பெருமையாலே அவன் இவளுக்கு ரூபகுணாதிகளைச்சொல்லி வரிசையறுத்து ஆண்டிடுமோ, தனக்கு ஸத்ருசமான மஹிஷியாகப் பட்டங்கட்டி பூர்வ மஹிஷிகள் முன்னே வைபவம் தோற்ற வைக்குமோவென்றும்; இவள்தான் தயிர்கடைகை முதலான வன்தொழில்கள் செய்து குடிவாழ்க்கை வாழவல்லளோ வென்றும் இப்படி க்லேசித்தும் மநோரதித்தும் சென்ற ப்ரகாரத்தைச் சொல்லுகிறது - இத்திருமொழியில். ... ... ... *

மூ.—நல்லதோர் தாமரைப்பொய்கை நாண்மலர்மேல் பனிசோர
அல்லியுந் தாதுமுதிர்ந்திட் டழகழிந்தா லொத்ததாலோ
இல்லம்வெறியோடிற் றாலோ வென்மகளை யெங்குங்காணேன்
மல்லரை யட்டவன்பின்போய் மதுரைப்புறம் புக்காள்கொலோ. க.

பதவுரை.

நல்லது— அழகியதாய்
ஓர்— ஒப்பற்றிருக்கிற
தாமரைப் பொய்கை— தாமரைப் பொய்கையானது
நாள்— அப்போதலர்ந்த
மலர் மேல்— பூவின்மேல்
பனி— அதுக்கு விரோதியான பனியானது
சோர— விழ (அத்தாலே,)
அல்லியும்— உள் இதழும்
தாதும்— தாதுவும்
உதிர்ந்திட்டு— உதிர்ந்து
அழகு அழிந்தால் ஒத்தது— அழகழிந்தாற் போலே,
இல்லம்— அகமானது
‡ வெறிசோடிற்று— வெளியாய் விட்டது;
என் மகளை— என் பெண்பிள்ளையை
எங்கும்— எவ்விடத்திலும்
காணேன்— காண்கிறிலேன்;
மல்லரை— சாணூர, முஷ்டிகர்களை
அட்டவன் பின் போய்- கொன்றவன் பின்னே போய்
மதுரைப் புறம்- மதுரைக்கு அணித்தான ஆய்ப்பாடியிலே
புக்காள் கொல்லோ— புகுந்தாளோ!
என்று வைதெழிக்கிறாள்.
(ஆல் - ஓ - அசை.)

‡ 'வீடு வெறிச்சென்றிருக்கிறது' என்று உலகவழக்கத்துக்கேற்ப.

‡ அத்தலைத்தலை - முந்தானை.

வ்யா. முதற்பாட்டு. நல்லதோர்தாமரைப்பொய்கை. பரப்புமாறத் தாமரைபூத்துக் கிடக்கையாலே, அழகியதாய் அத்விதீயமான பொய்கையானது. நாண்மலர்மேற்பனி சோர. சிவப்பு, விகாஸம், குளிர்த்தி, பரிமளம், மார்த்தவம் இவற்றையுடைத்தான நாட்பூவின்மேலே, அதுக்கு விருத்தமான பனியானது சொரிய. அல்லியித்யாதி. அத்தாலே அல்லியும் தாதும் செவ்விகெட்டுத் தீர்ந்து அலங்காரமான பூ அழிகையாலே தானழகழிந்தாற்போலே பொலிகின்றது. வ்ருத்தாந்தர உபகாரகமாயிருக்கிறதேயாகிலும் தாமரைக்கு பாதகமாகை ஸ்வதஸ்ஸித்தமாயிறே பனிக்கு. அப்படி பனிபொருந்த தாமரைபோலே பொலிவழிந்து இத்திருமாளிகை கிடக்கிறது. ஆகவும், ஒரும்- விஷயாந்தரஸ்பர்சம் இல்லம் வெறியோடிற்றுவோ. க்ருஹமானது வெறிபாய்ந்துவிட்டது. ஒருஜநஸஞ்சாரமற்று வெறியாய்க்கிடவா நின்றதென்கை. இக் க்ருஹம்முழுக்க இப்பெண்பிள்ளை பொருந்தியும் போலே காணுமிருந்தாள்; எல்லாருமிருந்தாலும் இவளொருத்தியும் போகவே இருந்தவர்க்கு அப்படி தோற்றுமிறே. மீளவும் " ஆவோ " என்கிறாள் - விஷாதாதிசயத்தாலே. என்மகளைவெங்குங்காணேன். என்பெண்பிள்ளையை பேரிடத்திலும் காண்கிறிலேன். க்ருஹம்மாத்ரமன்றிக்கே, பண்டு இவளிருக்குமிடம் ஸஞ்சரிக்குமிடமெங்கும் தேடிக்காணாமையாலே சொல்லுகிறாள். மல்லரையித்யாதி. இக்காணாமையாலே " அவன் கொண்டு போனான் " என்று அறுதியிட்டு, மல்லநிரஸநம்பண்ணின வீரப்பாட்டையுடையவன் பின்னேபோய், மதுரைப்புறத்திலே புகுந்தாளோ வென்கிறாள். மதுரைப்புறமாவது - மதுரைக்கு அடுத்து அணித்தான திருவாய்ப்பாடி. " மதுரைப்புறம் புக்காள்கொலோ " என்றது - " அணியாலி புகுவர்கொலோ " என்றாற்போலே. அதாவது - ஒருவர்க்கொருவர் வைமத்யமாகையாலே கம்ஸநகரியான மதுரைதன்னிலே சென்று புகவும் கூடுமிறே; அது செய்யாதே, தனக்கு உத்தேச்யபூமியான திருவாய்ப்பாடியிலே போய்ப்புகுந்தாளோ வென்று வ்யஸனிக்கிறாள். ... ... ... ... ... க.

மூ.—ஒன்றுமறி வொன்றில்லாத வுருவறைக் கோபாலர்தங்கள்
கன்றுகால் மாறுமாபோலே கன்னியிருந்தாளைக்கொண்டு
நன்றுங்கிறிசெய்துபோனான் நாராயணன் செய்ததீமை
என்றுமெமர்கள்குடிக் கோரேச்சுக்கொ லாயிடுங்கொலோ. உ.

பதவுரை.

ஒன்று— பொருந்தின
அறிவு— ஞானம்
ஒன்றும்— அல்பமும்
இல்லாத— இல்லாதவர்களாய்
உரு அறை— ரூபஹீநர்களான
கோபாலர் தாங்கள்— இடையரானவர்கள்
கன்றுகால் மாறுமாபோலே— நல்லழிபோய்க் கன்றுக்கு என்றுமிருந்தவன்ன கன்றுகளை உடையவர்களறியாமல் கனவிலே கொண்டுபோமாப்போலே
கன்னி— கன்னிகையாய்
இருந்தாளை— எனக்கும் இப்படிக்கிருந்த என்மகளை
நன்றும்— மிகவும்
கிறி செய்து— உபாயம்பண்ணி
கொண்டு போனான்— கொண்டு போன வனுடைய
நாராயணன்— நாராயணனானவன்
செய்த— செய்த
தீமை— தீம்பானது
எமர்கள் குடிக்கு— எங்கள் குலத்துக்கு
என்றும்— எப்போதும்
ஓர் ஏச்சு ஆயிடுங் கொல் ஓ— ஒரு பழிப் பாமோ புகழாமோ?

என்கிறாள்.

| | |
|---|---|
| கூடிய கூட்டமே ஆக கொண்டு } ஆணும் பெண்ணும் நெஞ்சு பொருந்திக் கூடின கூட்டம்மாத்திரமே மணமாகக் கொண்டு | நாடும்— அவிவேகிகளும் |
| குடி வாழும் கொல் ஓ — குடிவாழ்க்கை வாழுமோ?; | நகரும் — விவேகிகளும் |
| சாடு— சகடத்தை | அறிய— அறியும்படியாக |
| இற— முறியும்படி | நல்லது— விலக்ஷணமாய் |
| பாய்ந்த— உதைத்த | ஓர்— ஒப்பற்றிருப்பதொரு |
| பெருமான்— ஸ்வாமியானவன் | கண்ணாலம் செய்து— கல்யாணம் செய்து |
| | தக்க ஆ— ஸ்வஜாத்யாசாரத்துக்குத் தக்கபடி |
| | கைப்பற்றும் கொல் ஓ— கையைப்பிடித்து மணம் கொள்ளுமோ என்று தாயார் வ்யஸநிக்கிறாள். |

வ்யா. ஆறாம்பாட்டு. வேடர்மறக்குலம்போலே. தன்னியமநரஹிதரான வேடரையும் மறக்குலத்திலுள்ளாரையும் போலே. "கள்வர், பள்ளிகள்" என்னுமாபோலே, வேடர் மறவர் என்கிறதும் தன்னியமநத்தில் அவாந்தரபேதம். வேண்டிற்றுச்செய்து. இரண்டு தலையிலுமுண்டான குடிப்பிறப்பைப் பாராதே, ஒரு சாஸ்த்ரமர்யாதையின்றிக்கே, தனக்கு வேண்டினபடி செய்து. என்மகளை. பழுதற்ற குலத்திலேயுள்ள என் வயிற்றிலே பிறந்த பெண்பிள்ளையை. கூடியகூட்டமேயாகக்கொண்டு. புணர்ந்துடன்போக்கில் இரண்டு தலையும் நெஞ்சு பொருந்திக்கூடின கூட்டமாத்ரமே மணமாகக்கொண்டு. குடிவாழுங்கொலோ. குடிவாழ்க்கைவாழுமோ. சாடிறப்பாய்ந்தபெருமான் - நாடும்நகருமறிய நல்லதோர் கண்ணாலம் செய்து - தக்கவா கைப்பற்றுங்கொலோ. அசுராவேசத்தாலே தனியிடத்திலே நலியவந்த சகடத்தை, முலைவரவு தாழ்த்தாச்சேறி மிளிர்த்த திருவடிகளாலே முறியவுதைத்துத் தன்னை நோக்கி, "தனியிடத்திலே பிள்ளையைவிட்டுவைத்துப் போனாயாலே தாழ்வுவந்தது" என்று தாயார்க்குத் தாழ்வுவாராதபடி நோக்கின குணாதிகனானவன், இரண்டு குடிக்கும் பழிவாராதபடி, திருவாய்ப்பாடி சூழ்ந்ததேசம் திருவாய்ப்பாடியாகிற நகரும் அறியும்படியாக "இதற்குமுன்பு இப்படியில்லை" என்னும்படி விலக்ஷணமாய் அத்விதீயமான கல்யாணத்தைச்செய்து, ஸ்வரூபோசிதமான தர்மத்துக்குத் தகுதியாக பாணிக்ரஹணஞ்செய்யுமோ. ... ௬.

மூ.—அண்டத்தமரர்பெருமா னாழியானின் றென்மகளைப்
பண்டப்பழிப்புக்கள் சொல்லிப்பரிசற வாண்டிடுங்கொலோ
கொண்டுகுடிவாழ்க்கைவாழ்ந்து கோவலப்பட்டம் கவித்துப்
பண்டைமணாட்டிமார்முன்னே பாதுகாவல்வைக்குங்கொலோ. ௭.

பதவுரை.

| | |
|---|---|
| அண்டத்து— பரமபதவாஸிகளான | இன்று— இப்போது |
| அமரர்— நித்யஸூரிகளுக்கு | ‡ பண்டம் பழிப்புக்கள் சொல்லி } பதார்த்த தோஷமும் சொல்லி |
| பெருமான்— தலைவனாய் | பரிசு அற— வரிசை கெட |
| ஆழியான்— சக்ரபாணியா யிருக்குமவன் | ஆண்டிடும் கொல் ஓ— ஆளுமோ?; |
| என்— என்னுடைய | |
| மகளை— பெண்பிள்ளையை | |

‡ ரூபத்திலேயாதல் குணத்திலேயாதல் சில குறைகளைச் சொல்லியென்கை.

| | |
|---|---|
| செய்— சிவந்த | பண்ணறையாப் பணிகொண்டு } இழி தொழில்களிலே ஏவிக்கொண்டு |
| கண்— கண்களையுடையனும் | பரிசு அற— பெருமைகெட |
| உலகு— எல்லா உலகங்களையும் | ஆண்டிடும் கொல்லோ— ஆளுவனோ; அறிகிறிலேன் என்கிறாள். |
| அளந்தான்— நீரேற்றளந்து கொண்டவன் | |
| என் மகளை— என் மகளை | |

வ்யா. தன்பதாம்பாட்டு. வெண்ணிறந்தோய் தயிர்தன்னை. செவ்விகுன்றுதபடி காய்ச்சித்தோய்க்கையாலே வெளுத்தநிறத்தையுடைத்தாய்ச் செறியத்தோய்ந்த தயிர்தன்னை. வெள்வரைப்பின் முன்னெழுந்து. ஆதித்யோதயத்துக்கு வாசகமான வெள்வரைப்புத் தோன்றுவதற்குமுன்னே யெழுந்திருந்து. வெள்வரைப்பு கிழக்குவெளுக்கை. ப்ராஹ்மமுஹூர்த்தமாக அருணோதயத்துக்கு முன்னே யெழுந்திருக்குமாபோலே யசோதை- இடைச்சிகளும் தயிர்கடைகைக்கு எழுந்திருக்கும்படி. கண்ணுறங்காதேயிருந்து. எழுந்திருந்தாலும் நித்ரைபண்ணாமே; அதின் வாயோதே விழித்திருந்து. கடையவும் தான்வல்லள் கொலோ. ஸுகுமாரியான தான் ஆயாஸித்துக்கடையவும் வல்லளோ. ஒண்ணிறமித்யாதி. அலர்ந்தபோதை அழகிய நிறத்தையுடைத்தான தாமரைபோலே சிவந்ததிருக் கண்களையுடையனும், லோகங்களையும் தன்திருவடிகளின்கீழே யாக்கிக்கொண்டவன். இத்தால்- தன் கண்ணழகாலே இவளை அநந்யார்ஹையாக்கித் தன்காற்கீழே யிட்டுக்கொண்டவனென்கை. என்மகளைப் பண்ணறையாப் பணிகொண்டு. என் ஸ்ரீ திருமகள்போல வளர்த்த வென் பெண்பிள்ளையை, பண்புகெடத்தாழ்ந்த பணிகளிலே யேவிக்கொண்டு. பரிசற ஆண்டிடுங்கொலோ. இவளுடைய பெருமைகெடஆளுமோ, பெருமைகெடாதபடி யாளுமோ, அறிகிறிலேனென்கிறாள். ... ... ... ... ... ௯.

அ. நிகமத்தில் இத்திருமொழிகற்றார்க்கு பலஞ்சொல்லித் தலைக்கட்டுகிறார்.

மூ.—மாயவன்பின் வழிசென்று வழியிடை மாற்றங்கள்கேட்டு
ஆயர்கள் சேரியிலும்புக் கந்துற்றமாற்றமு மெல்லாம்
தாயவள் சொல்லியசொல்லைத் தண்புதுவைப்பட்டன் சொன்ன
தூயதமிழ்ப்பத்தும்வல்லார் தூமணிவண்ணனுக்காளரே. ௰.

பதவுரை.

| | |
|---|---|
| மாயவன்— ஆச்சர்ய சேஷ்டிதங்களையுடைய ஸர்வேச்வரனுக்கு | அந்துற்றது— அங்குள்ளார்க்குத் தங்கபாடு செய்த |
| பின்வழி சென்று— பின்னேபோய் | மாற்றமும் எல்லாம்— தன் பெண்பிள்ளையின் சொலவுகளெல்லாவற்றையும் |
| வழியிடை மாற்றங்கள் கேட்டு } போம் வழியிடையிலே கண்ட அபூர்வ வஸ்துக்கள் விஷயமான வார்த்தைகளைக்கேட்டு | தாயவள்— தாயானவள் |
| ஆயர்கள் சேரியிலும்— திருவாய்ப்பாடியிலும் | சொல்லிய— அருகுநின்றவர்களைக் குறித்துச் சொன்ன |
| புக்கு— புகுந்து | சொல்லை— சொல்லை |
| | தண்— குளிர்ந்த [ வரான |
| | புதுவை— ஸ்ரீ வில்லிபுத்தூருக்குத் தலை |

யிருக்கிற பத்துப்பாட்டையும் ஸாபிப்ராயமாக அநுஸந்திக்கவல்லவர்கள், ஞானிவண்ணனு க்காளரே. பழிப்பற்ற நீலரத்னம்போன்ற வடிவழகையுடையவனுக்கு சேஷபூதராய் அடிமை செய்யப் பெறுவர். ... ... ... ... ... ... ௰.

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

அடிவரவு.—நல்ல தோன்று குமரி பொரு தன்மாமன் வேட
எண்டக் குடி வெள்ளை மாயவ னென்னாதன்.

ஆ திருமொழி-உஎ-க்கு, பாட்டு-உகச.

மூன்றும்பத்து - ஒன்பதாந்திருமொழி - என்னாதன், ப்ரவேசம்.

௧. க்ருஷ்ணாவதாரமாகப்ரவணராய், தத்குணசேஷ்டிதங்களையே யநுபவித்துக்கொண்டு போந்தார்-கீழ்; இப்போது, அந்தக்ருஷ்ணாவதாரகுணசேஷ்டிதங்களோடே, ததபூர்வ காலீனமான ராமாவதாரகுணசேஷ்டிதங்களையும் ஏககாலத்திலே யநுபவிக்கவேணுமென்னும் அபிநிவேசம்பிறந்து, அதுக்குடலாக இரண்டு ஸ்ரீகோபியாரவஸ்தையை ப்ராப்தராய், அதிலே ஒருத்தி க்ருஷ்ணாவதாரகுணசேஷ்டிதமும், ஒருத்தி ராமாவதாரகுணசேஷ்டிதமுமாகக்கொண்டு, ஒருவர்க்கொருவர் எதிரிடாய்க்கொண்டு சொல்லி, உத்திபரத்தப்ராஸ்தாவே உபயாவதாரகுணசேஷ்டிதங்களையும்பேசி யநுபவிக்கிறார்- இத்திருமொழியில். இரண்டு கோபிமாரவஸ்தையை ஏககாலத்திலே யடையக்கூடுமோவென்னில்; பகவத்ப்ராவண்யாதிசயத்தாலே ஜ்ஞானத்தில் தடைபற்றுவல் எல்லாம் சொல்லலாமிறே. "'மானமருமென்னோக்கி' என்கிற திருமொழியிலே, இரண்டு பிராட்டிமார்தசை ஏககாலத்திலே கூடும்படியென்?' என்று ஜீயர் பட்டரைக்கேட்க; 'தேவிசேஷத்தில் அநேக சரீரபரிக்ரஹம் ஏககாலத்திலே கூடுகிறபடி எங்ஙனே; அப்படியே இவரையும்பார்த்து அருளிச்செய்து கூடும்'' என்றருளிச்செய்தார் என்று ப்ரஸித்தமிறே. ... ... ... ... ௧.

மூ.—என்னாதன்றேவிக் கன்றின்பப்பூ வீயாதாள்
தன்னாதன்காணவே தண்பூமரத்தினை
வன்னாதப்புள்ளால் வலியப்பறித்திட்ட
என்னாதன்வன்மையைப் பாடிப்பற எம்பிரான் வன்மையைப்பாடிப்பற. ௧.

பதவுரை.

என்— எனக்கு
நாதன்— சேஷியான ஸர்வேச்வரனுடைய
தேவிக்கு — தேவியான ஸத்யபாமைப் பிராட்டிக்கு
அன்று— அவள் விரும்பினபோது
இன்பம்— மனோஹரமான
பூ— கற்பகப்பூவை [யுடைய
ஈயாதாள் தன்— கொடாத இந்த்ராணி

பதவுரை.

காளியன்— காளியநாகம் கிடக்கிற
பொய்கை— பொய்கையானது
கலங்க— கலங்கும்படி
பாய்ந்திட்டு— சென்று குதித்து
அவன்— அவனுடையதாய்
நீள்— ஆகாசத்தளவும் வளர்ந்திருக்கிற
முடி ஐந்திலும்— ஐந்து படங்களிலும்
நின்று— மாறிமாறி அடியிட்டு நின்று
நடம் செய்து— கூத்தாடி
மீள— (அவன் சரணம்புக்கவளவிலே) மறுபடியும்
அவனுக்கு— அந்த காளியனுக்கு
அருள் செய்த— திருவுள்ளமிரங்கின
வித்தகன்— விஸ்மயநீயனானவனுடைய
தோள் வலி— புஜபலத்தையும்
வீரம்— வீரப்பாட்டையும்
பாடிப்பற;
தூ— பழிப்பற்ற
மணி— நீலரத்னம்போன்ற
வண்ணனை— வடிவழகை யுடையவனை
பாடிப்பற.

வியா. எழாம்பாட்டு. காளியன்பொய்கை. வெறும்புறத்திலே "காளியன்பொய்கை" என்னவமையுங்காணும் அதின் க்ரௌர்யத்துக்கு "பாம்புப்பாழி" என்னுமாபோலே. அதுவொரு ஸ்தலத்தில் இங்கு மாத்திரமல்லாம் அழலாலேபட்டு விழும்படியிறே பொய்கையில் விஷத்தினுடைய க்ரௌர்யமிருப்பது. "ஆவிசேர் அச்சமுள் பொய்கை" என்னக் கடவதிறே. கலங்கப்பாய்ந்திட்டு. "காளியன் தடத்தைக்கலக்கி" என்கிறபடியே பொய்கை கலங்கும்படி ஓடிச்சென்று குதித்து. அவனீள்முடி. பொய்கையைக் கலக்கினவாறே அதுக்குள்ளேக் கிடக்கிறவன் அறிக்குரத்தனாய், தலையையெடுத்து ஆகாசத்திலே வளர்ந்து படங்களை விரித்துக்கொண்டு நிற்க, அப்படங்களின் மேலே ஏறி ஐந்துபடங்களிலும் மாறிமாறிநின்று ந்ருத்தஞ்செய்து. மீளவவனுக்கருள் செய்தவித்தகன். (க) "[illegible]" என்கிறபடியே தலைகளும் கழுத்தும்நெரிந்து வாய்களாலே ரத்தம்சொரியும்படி அவன் இளைத்து, தன்னுடைய ப்ராணன் பெறுகைக்காகச் சரணம்புகுந்தவாறே, முன்பு அவனைக் கொல்லநினைத்த கோபத்தைவிட்டு, அவன் ப்ராணன் பெறும்படி, மீண்டு அவனுக்கு ப்ராணதானம்பண்ணின விஸ்மயநீயனானவனுடைய. விஸ்மயநீயத்வமாவது-முன்பு,கோபத்துக்கு விஷயமாக்கி முடிக்கநினைத்த வன்றன்னையே ப்ரஸாதத்துக்கு விஷயமாக்கி ரக்ஷித்த ஆச்சர்யம். தோள்வலிவீரமே பாடிப்பற. இப்படியிருக்கிறவனுடைய, "பாம்பாலாப்புண்டு" என்கிறபடியே காளியன் தன்னுடலாலே நெருக்கிச் சுற்றிக் கட்டினவிடத்திலும் அதிலேபட்டதே உதறிப்போகட்டு வாலைப்பிடித்துத்தூக்கி மேலேநின்றாடின தோள்வலியையும் வீரப்பாட்டையும் பாடிப்பற. தூமணிவண்ணனை. காளியனுக்கு ப்ராணனைக்கொடுத்துத் துரத்தி போகட்டுவிட்டு, விஷஜலமான பொய்கையை அம்ருதஜலமாம்படி ப்ரகாசித்து, பசுக்களும் இடையரும் முன்புபோலே தண்ணீர்குடிக்கும்படி பண்ணுகையாலே, பழிப்பற்ற நீலரத்னம்போலே திருமேனியின் அழகுவிளங்கும்படி நின்றவனைப் பாடிப்பற. என்று ப்ரதிகோடியானவளைப்பார்த்து நியமிக்கிறாள். ... எ.

மூ.—தார்க்கிளந்தம்பிக் கரசீந்துதண்டக
நூற்றவள்சொற்கொண்டு போகிநுடங்கிடைச்
சூர்ப்பணகாவைச் செவியொடுமூக்கவள்
ஆர்க்கவரிந்தானைப் பாடிப்பற அயோத்திக்கரசனைப்பாடிப்பற. அ.

(க). "[illegible]"

தீர்க்கசாஸம் நடக்கும்படி, ஸ்லைக்கு அரசுசெத ஐச்வர்யத்தைக்கொடுத்த. ஆராவமுதனை. இக்குணத்தாலே ஒருகாலும் தப்பிபிறவாமல் மேன்மேலென த்ருஷ்ணையையிக்கும் அமர்தம்போலே, அநுபவிப்பார்க்கு நிரதிசயபோக்யனுனவனைப் பாடிப்பற. அயோத்தியர் வேந்தனை. ராவணவதாநந்தரம் மீண்டு எழுந்தருளி, திருவபிஷேகம்பண்ணியிருந்த அளவையிலே, திருவயோத்யைமிலுள்ளார்க்கு ராஜாவானவனை. பாடிப்பற. என்று ப்ரதிகோடியானவனை நியமிக்கிறுள். ... ... ... ... . ௧.

அ. நிகமத்தில், இத்திருமொழிகற்றார்க்கு பலஞ்சொல்லித் தலைக்கட்டுகிறுர்.

மூ.—நந்தன்மதலையைக் காகுத்தனைநவின்று
உந்திபறந்த வொளியிழையார்கள்சொல்
செந்தமிழ்த் தென்புதுவை விட்டுசித்தன்சொல்
ஐந்தினோடைந்தும் வல்லார்க் கல்லலில்லையே. கக.

பதவுரை.

நந்தன் மதலை— நந்தகோபன் குமாரனை கண்ணனையும்
காகுத்தனை— ககுத்ஸ்த சக்ரவர்த்தியின் வம்சத்தனுன சக்ரவர்த்தி திருமகனையும்
நவின்று— ஒருவர்க்கொருவர் எதிரியாய்க் கொண்டு சொல்லி
உந்தி பறந்த — ‡ உந்திபறக்கையாகிற விளையாடல் கொண்டாடின
ஒளி— அழகிய [ களுடைய
இழையார்கள்— ஆபரணமணிந்த பெண்
சொல்— சொல்லை
செம்— செவ்வையையுடைய
தமிழ்— தமிழ் பாஷையாலே
தென்— அழகிய [ நகரான
புதுவை— ஸ்ரீ வில்லிபுத்தூருக்கு நிர்வா
விட்டுசித்தன்— பெரியாழ்வார்
சொல்— அருளிச்செய்த
ஐந்தினோடு ஐந்தும்— க்ருஷ்ணவதார விஷயமான ஐந்தும், ராமாவதார விஷயமான ஐந்துமான இப்பத்தை
வல்லார்க்கு— ஓதவல்லவர்களுக்கு
அல்லல் இல்லை — யாதொரு துன்பமு மில்லை.

‡ "உந்தி- மகளிர் விளையாட்டினுன்று" என்று தமிழர்.

வ்யா. நந்தன்மதலையைக் காகுத்தனை நவின்று. ஸ்ரீநந்தகோபர் திருமகனையும், ககுத்ஸ்தகுலோத்பவனுன சக்ரவர்த்தி திருமகனையும், ஒருவர்க்கொருவர் எதிரியாய்க்கொண்டு சொல்லி. உந்திபறந்த ஒளியிழையார்கள்சொல். உந்திபறக்கையாகிற விளையாடல் கொண்டாடின அழகிய ஆபரணுலங்க்ருதைகளான பெண்களுடைய சொல்லை. செந்தமிழ்த்தென்புதுவை விட்டுசித்தன்சொல். ஆர்ஜவரூபமான த்ராவிடபாஷையாலே, அழகிய ஸ்ரீவில்லிபுத்தூர்க்கு நிர்வாஹகரான பெரியாழ்வாரருளிச்செய்த. ஐந்தினோடைந்தும்வல்லார்க்கு. க்ருஷ்ணவதார விஷயமானவைந்தும், ராமாவதாரவிஷயமான வைந்துமான இப்பத்தையும் ஸாபிப்ராயமாக வல்லவர்க்கு. அல்லலில்லையே. ஸாம்ஸாரிகதுக்கமொன்றுமில்லை. ... ... ... கக

பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.

அடிவரவு.—என்னுதன் என்வில் உருப்பிணி மாற்றுப் பஞ்சவர் முடி காளியன் தார் மாயக் காரார் நந்தன் செறிந்த.

௩௪ - திருமொழி, உ௮ - க்கு, பாட்டு - க0௬.

அலக்ஷணப்படி. இப்படியான மஹிமையையுடையனும், இவன் சொன்னதுக்கு மறுத்து ஒன்றும் சொல்லமாட்டாதிருக்க.

குலக்குமரா காடுறையப்போவென்று விடைகொடுப்ப. மறுக்கமாட்டாமையாலே ராஜாவானவன் சோகித்துக் கிடக்கச்செய்தே, பெருமாளையழைத்துக்கொண்டுவாவென்று ஸுமந்த்ரனைப் பார்த்துச் சொல்லுவதாக நினைத்து, சோகவேகத்தாலே அதுதானும் மாட்டாதொழிய, இவள் அருகேயிருந்து, "ராஜா ராத்ரியெல்லாம் உங்களை பார்க்காலே நித்ரையற்றிருக்கையாலே ச்ராந்தராய், சற்று உறங்குகிறார்; நீ கடுகப்போய்ப் பெருமாளையழைத்துக்கொண்டுவா" என்றுபோகவிடுகையாலே, அவன் போய், பெருமாளை யெழுந்தருளுவித்துக்கொண்டு வந்தவளவில், பிதாவானவன் சோகித்துக் கிடக்கிறபடியைக் கண்டு, "இதுக்கடியென்" என்று க்லேசப்பட்டுக் கேட்டவாறே "முன்பே எனக்கு இரண்டுவரம் தந்திருப்பர்; அவிரண்டும் எனக்கு இப்போது தரவேணும்; அதாவது - பதினாலுவருஷம் உம்மைக் காட்டிலே போகவிடவேணும்; பரதனை அபிஷேகம் செய்யவேணும் என்று நான் சொன்னேன்; * ஸத்யஸந்தராயிருக்கையாலே மறுக்கமாட்டாமல் அநுமதிசெய்து, உம்மைக் காட்டிலே போகவிடுவதாக அழைத்துவிட்டார்; உம்மைக்கண்டவாறே வாய்திறந்து சொல்லமாட்டாமல் கிடக்கிறார் காணும்" என்ன; "என்னை விபரிக்கும் போதைக்கும் இப்படி க்லேசிக்கவேணுமோ? யதேஷ்டமாக திருவுள்ளமானபடி செய்வேனே நான்" என்ன; "ஆனால், அவர்க்காக நான் சொல்லுகிறேன், இக்குலம் விளங்கவந்து பிறந்த குமாரரான நீர், உங்கள் பிதாவை ஸத்யப்ரதிஜ்ஞராக்கவேண்டியிருந்தீராகில், அவருடைய வசனபரிபாலனார்த்தமாகக் கொண்டு வனவாஸம் பண்ணும்படியாகப்போம்" என்று போக்கிலே ஒருப்படுத்த. இலக்குமணன் றன்னொடுமங்கேகியது ஓரடையாளம். (a) "ஸ்ரீமதேவ [illegible]" என்கிறபடியே - தாம் புறப்படுவதுக்கு முன்னே, கூடப்போவதாக மாதாவிசாத்தி ஒருப்பட்டு நிற்கிற இளையபெருமாளோடே கூட எழுந்தருளினது ஓரடையாளம். ஏகுதல் - போகை. ... ... ... ... ... ... உ.

மூ.—வாரணிந்தமுலைமடவாய் வைதேவீ விண்ணப்பம்
தேரணிந்தவயோத்தியர்கோன் பெருந்தேவீ கேட்டருளாய்
கூரணிந்தவேல்வலவன் குகனோடும் கங்கைதன்னில்
சீரணிந்ததோழமைக் கொண்டதுமோரடையாளம். ங.

பதவுரை.

வார் அணிந்த — கச்சை அணிந்த
முலை — முலையையுடையவளாய்
மடவாய் — மடப்பத்தையுடையவளாய்
வைதேவீ — விதேஹராஜன் திருமகளாய்
தேர் — தேர்களாலே
அணிந்த — அலங்கரிக்கப்பட்ட [ச்ரு
அயோத்தியர் — அயோத்யையிலுள்ளா
கோன் — ஸ்வாமியான பெருமாளுடைய

(a) "ப்ராகேவது மஹாபாகஸ் ஸௌமித்ரிர் மித்ரநந்தந: - பூர்வஜஸ்யாநுயாத்ரார்த்தே த்ருமசீரைரலங்க்ருத:"

| | |
|---|---|
| நின்— தேவரீருடைய [ வழியிலே நின்று | பின்னே— பிற்பாடு |
| அன்பின் வழி நின்று— ஆசையின் வழி | அங்கு— அங்கே |
| சிலை பிடித்து— வில்லை யெடுத்துக்கொண்டு | இலக்குமணன்— இளையபெருமாள் |
| எம்பிரான்— பெருமாள் | பிரிந்ததும்— பிரிந்துபோனதும் |
| ஏக — அத்தைப்பிடிப்பதாக எழுந்தருள | ஓர் அடையாளம். |

வ்யா. எழாம்பாட்டு. மின்னித்யாதி, மின்னோடொத்த நிருத்தன்ன நுண்ணிய இடையையுடையாய்!. இடையினுடைய அண்ணியமும், விரஹதசையில் சோவுபடாத்த வொண்ணுமைக்கு உடலாயிருக்குமிறே; அத்தைப்பற்றச் சொல்லுகிறான். மெய்யடியேன் விண்ணப்பம். புகைபற்ற சேஷபூதனான நான் விண்ணப்பஞ் செய்கிறத்தைத் திருவுள்ளம் பற்றியருளவேணும். மெய்யடியானையாவது - எதிர்த்தலையில் வம்ருத்தியே புருஷார்த்தமாயிருக்குமதொழிய, ஸ்வப்ரயோஜன பரனன்றிக்கேயிருக்கை. பொன்னொத்தமானித்யாதி. மாயாவியானமாரீசன் இருக்குமன்பு லோகத்தில் கண்டறியாததொரு வடிவையெடுத்துக் கொண்டுவந்த தாலேயாலே, பொன்போலிருக்கிற நிறத்தையும் ரத்நங்கள் போலிருக்கிற புள்ளியையும் மற்றுமநேகம் வைசித்ரியையு முடைத்தாயிருப்ப தொருமானானது, எழுந்தருளியிருக்கிற ஆச்ரமத்தின் முன்னேவந்து புகுந்து மநோஹரமாம்படி நின்று துள்ளி விளையாட. நின்னன்பின்வழிநின்று. "இத்தைப்பிடித்துத்தரவேணும்" என்று பெருமாளைப்பார்த்து தேவரீர் அருளிச்செய்தவிடத்தில், இளையபெருமாள் அருகேநின்று, "லோகத்தில் இப்படிப் பிறப்பதொரு மிருகமில்லை, மாரீசன் இவ்வேஷமெடுத்துக்கொண்டு திரியும் என்றுப்ரஸித்தம்; ஆகையால், இது மாயாம்ருகம்" என்றுவிண்ணப்பஞ்செய்தவும், தேவரீருடைய ஆசையின்வழியிலே நின்று. சிலைபிடித்தெம்பிரானேக. இளையபெருமாளை இக்குத்தைக்குக் காவலாக நிறுத்தியிருக்கையாலே, பிடித்துவில்லும் தாமுமாய்க்கொண்டு அத்தைப்பிடிப்பதாகப் பெருமாள் எழுந்தருளியெழுந்தருள. பின்பு தங்களையெல்லாரையும் விஷயீகரித்த உபகாரத்தைநினைத்து "எம்பிரான்" என்கிறான். பின்னேயித்யாதி. தூரம் பின்பற்றிப்போன விடத்திலும் பிடிகொடாமல் அதுதப்பித்திரிகையாலே "இது மாயாம்ருகம்" என்று திருவுள்ளம்பற்றி அதின்மேலே சரத்தைவிட, அதுபட்டுவிழுகிற போது "ஹா! ஸீதே!, ஹா! லக்ஷ்மணா!!" என்று பெருமாள் மிடற்றோசைபோலே கூப்பிட்டுக் கொண்டுவிழ, அத்தை தேவரீர்கேட்டருளி, பெருமாளுக்கேதேனும் அபாயம்வந்ததாக நினைத்து, "இத்தைச்சடக்கெனப்போய் அறியும்" என்று அருளிச்செய்யச் செய்தேயும் இக்குத்தைக்குக் காவலாக நிறுத்திப் போகையாலும், பெருமாளுடைய சௌர்யத்தையறிகையாலும் "அக்குத்தைக்கு ஒன்றும்வாராது, தேவரீர் பயப்படவேண்டா" என்று விண்ணப்பஞ்செய்து, தாம்போகமாட்டாமல் சுற்றிக்கொண்டிருக்க, அவர் நில்லாமல் போகவேண்டும்படி தேவரீர் நிலவருளிச்செய்கையாலே, பிற்பாடு அங்கே இளையபெருமாள் பிரிந்துபோனது மோரடையாளம் ... ... ... ... எ.

மூ.—மைத்தகுமாமலர்க்குழலாய் வைதேவி விண்ணப்பம்
ஒத்தபுகழ்வானரக்கோ னுடனிருந்து நினைத்தேட
அத்தகுசீரயோத்தியர் கோ னடையாளமிவை மொழிந்தான்
இத்தகையாலடையாள மீதவன்கைமோதிரமே. அ.

திறல்— சக்தியையுடைய
அநுமன்— திருவடி
தெரிந்து— ஆராய்ந்து
உரைத்த— விச்வஸிக்கும்படி சொன்ன
அடையாளம்— அடையாளங்களை
பார் ஆரும்— பூமியெங்கும் பரவின
புகழ்— கீர்த்தியை யுடையராய் [ரான
புதுவை— ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹக

பட்டர்பிரான்— பெரியாழ்வார் அருளிச் செய்த
பாடல்— பாடலான இவற்றை
வல்லார்— ஓதவல்லவர்கள்
ஏர் ஆரும்— எல்லா நன்மைகளும் சேர்ந்த
வைகுந்தத்து— ஸ்ரீவைகுண்டத்திலே
இமையவரோடு— நித்யஸூரிகளோடு
இருப்பார்— இருக்கப் பெறுவர்கள்.

வ்யா. பத்தாம்பாட்டு. வாராகுமித்யாதி. வாரோடுசேர்ந்திருக்கைக்கு யோக்யமா யிருக்கச்செய்தே, இப்போது வெறும்புறத்திலே பிராசிப்பதான முலையையுடையளாய், விர ஹத்தால்வந்த துவட்சியையுமுடையளாய், தேஹத்தில் உபேக்ஷையாலே விதேஹபுத்ரி யானமை தோற்றயிருக்கிற பிராட்டியைக்கண்டு. சீராரும்திறலநுமன். முதலிலேயெல்லாரு முண்டாயிருக்க "இவனேயிக்கார்யம் செய்யவல்லான்" என்று பெருமாள் திருவுள்ளம் பற்றி, அடையாளங்களும் சொல்லித் திருவாழிமோதிரமும் கொடுத்துவிடும்படி ஜ்ஞானாதி குணங்களால் பரிபூர்ணனாய், நினைத்தது முடிக்கவல்ல சக்தியனாயிருக்கிற திருவடி. தெரிந்துரைத்தவடையாளம். பெருமாளருளிச் செய்தபடிகளில் ஒன்றும் தப்பாமல் ஆராய்ந்து பிராட்டிக்கு விச்வாஸமாக விண்ணப்பம் செய்த அடையாளங்களை. பாராகுமித்யாதி. பூமியெங்கும் நிறைந்த புகழையுடையரான ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹகரான பெரியா ழ்வாரருளிச்செய்த பாடலான இவற்றை அபிப்ராயமாக வல்லவர்கள். ஏராகுமித்யாதி. எல்லாநன்மைகளும் சேர்ந்த பரமபதத்திலே, "அடியரோடிருந்தமை" என்கிறபடியே நிரந்தரபகவதநுபவபரரான நித்யஸூரிகளோடு ஒரு கோவையாயிருக்கப்பெறுவர். ௰.

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

அடிவரவு.—நெறி பல்லி கலக்கிய வாரணி மாற்
சித்திர மின் மைத்த திக்கு வாராகும் கதிர்.

ஆ. திருமொழி-௨௯-க்கு, பாட்டு-௩௨௰.

மூன்றாம்பத்து மூற்றிற்று.

(*)

## நாலாம்பத்து - முதற்றிருமொழி - கதிராயிரமிரவி ப்ரவேசம்.

அ.—க்ருஷ்ணாவதாரைகபரவசராய், திருவவதார மடைவேதொடங்கி அவ்வவதார ரஸமே அநுபவித்துக்கொண்டு போந்தவர், க்ருஷ்ணாவதார சேஷ்டிதங்களையும் ராமாவதார சேஷ்டிதங்களையும் ஏககாலத்திலே அநுபவிக்கவேணு மென்னும்படியா யிருப்பதொரு அபி நிவேசம் பிறந்து, அவைதன்னை ஏகாச்ரயத்திலிட்டு அநுபவிக்கப் போகாமையாலே இரண்டு வடிவுகொண்டு ஒன்றுக்கொன்று எதிரிடாகப்பேசி அநுபவித்த வனந்தரம், ராமாவதாரா நுகுணமாக வந்தவதரித்தருளின பிராட்டி, தன்னுடைய புருஷகாரத்வத்துக்கு ப்ரதானகுண மான க்ருபையை வெளியிடுகைக்காக "சரணம்புகுந்தான்" என்று ஒருவ்யாஜத்தாலே வன்மையிலே பெரும்கருணை, அவ்வவதாரத்தின் மெய்ப்பாட்டாலே பெருமாள் அவன்போன விடம் இன்னவிடமென்றறியாமல் தேடிக்கொண்டு திரியாநிற்க, மஹாராஜரோடே உறவு

வன் முடியும்படியாக. புணர்முலையாய் மடுக்கவல்லானை. அந்த வடிவைமறைத்து "பெற்ற தாய்போல்வந்த பேய்ச்சி" என்கிறபடியே யசோதைப்பிராட்டியோடொத்த வடிவைக்கொண்டு வருகையாலே தன்னில்தான் சேர்ந்திருந்துள்ள முலையிலே, அவள் முலைகொடாவிடில் தரியாதானாய்க்கொண்டு "முலைப்பாலுண்" என்று கொடுத்தாற்போலே, தானும் முலையுண்ணுவிடில் தரியாதானுய்க்கொண்டு பெரிய அபிநிவேசத்தோடே வாயைமடுத்து உண்ண வல்லவனை. "உள்ளத்தினுள்ளே அவளையுறநோக்கி" என்கிறபடியே வருகிறபோதே அவள் க்ருத்ரிமமெல்லாம் திருவுள்ளத்திலே யனுஸந்தித்திருக்கச்செய்தே, அவள் தாயாகவேயிருந்து முலைகொடுத்தாற்போலே, தானும் பிள்ளையாகவேயிருந்து முலையுண்டு அவளை முடித்த ஸாமர்த்யத்தைச் சொல்லுகிறது- வல்லானையென்று. மாமணிவண்ணனை. "விடப்பாலமுதாவமுதுசெய்திட்ட" என்கிறபடியே அவளுடைய விஷப்பாலை அம்ருதமாகவமுது செய்து அவளை முடித்து, ஜகத்துக்கு சேஷியானதன்னை நோக்கிக்கொடுக்கையாலே, நீலரத்னம்போலே உஜ்வலமான திருமேனியை யுடையனுயிருக்குமவனை. மருவுமிடம் நாடுதிரேல். திருவுள்ளம் பொருந்தி வர்த்திக்கிறஸ்தலம் தேடுகிறீர்களாகில்.

பல்லாயிரம் பெருந்தேவிமாரொடே. ஜாகவதாக்ஷரம் கொண்டுவந்து பாணிக்ரஹணம் பண்ணப்பட்டவர்களாய், ஒரொருத்தரே அத்யந்த விலக்ஷணைகளாயிருக்கும் பதினாறுயிரம் தேவிமாரோடே. ஆயிரமிரண்டாயிரமல்லாதிக்கே, பதினாறுயிரமுண்டாகையாலே- "பல்லாயிரம்" என்கிறது. பௌவமெறிதுவரை. சமுத்ரமாம்படி ஸமுத்ரத்தின் திவலைகள் வீசாநிற்கும் ஸ்ரீமத்த்வாரகையிலே. எல்லாருமித்யாதி. தேவிமாரெல்லாரும்சூழ விஜ்மாணத்திலே ஏகாந்தரானுமெழுந்தருளியிருக்குமவனை அவ்விருப்பிலே கண்டவர்களுவர். ... ... ௬,

மூ.—வெள்ளைவிளிசங்கு வெஞ்சுடர்திருச்சக்கர மேந்துகையன்
உள்ளவிடம் வினவிலுமக்கிறையம்பின் சுவுரைக்கேன்
வெள்ளைப்புரவிக் குரக்கு வெல்கொடித் தேர்மிசைமுன்புநின்று
கள்ளப்படைத்துணையாகிப் பாரதங்கைசெய்யக் கண்டாருளர். எ,

பதவுரை.

வெள்ளை— வெண்மைநிறமுடைத்தாய்
விளி— "அநுபவ கைங்கர்யங்களில் ருசியுடையார் வாருங்கோள்" என்று தன் த்வநியாலே அழையாநிற்கிற
சங்கு— ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும்
வெம்— வெவ்விதான
சுடர்— ஜ்யோதிஸ்ஸையுடைய
திரு சக்கரம்— திருவாழி யாழ்வானையும்
ஏந்து— தரித்துக்கொண்டிருக்கிற
கையன்— திருக்கைகளை யுடையவன்
உள்ள இடம்— இருக்குமிடத்தை
வினவில்— கேட்கிறீர்களாகில்
உமக்கு— உங்களுக்கு
இறை சுவடு— சிறிது அடையாளம்
உரைக்கேன்— சொல்லுகிறேன்;
வம்மின்— வாருங்கோள்;
வெள்ளை— வெளுத்த
புரவி— குதிரை பூண்டிருப்பதாய்
குரக்கு— வாநரமான [-தான
வெல் கொடி— வெற்றிக் கொடியையுடைத்
தேர் மிசை— (அர்ஜுநனுடைய) தேரின்மேலே
முன்பு நின்று— அவனுக்கு ஸாரதியாய் முன்னே நின்று
படை— ஸைந்யத்துக்கு
கள்ளம் துணை ஆகி— க்ருத்ரிமத்துணையாய்
பாரதம்— பாரதயுத்தத்தை
கைசெய்ய— கையுமணியும் வகுத்து நடத்த
கண்டார் உளர்,

வ்யா. ஏழாம்பாட்டு. வெள்ளைவிளிசங்கு. ச்யாமளமான திருமேனிக்கு ப்ரகாசமான வெண்மையையுடைத்தாய், அநுபவகைங்கர்யங்களில் ருசியுடையார் வாருங்கோள் என்று தன் த்வனியாலே அழைப்பாகிற்கும் ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும். வெஞ்சுடர் திருச்சக்கரம். ஆச்ரிதவிரோதிகள் விஷயத்தில், ஜ்வலிதாக்நி, ஈசாக்நி, 'தம்ஸீச்' என்னும்படி வெவ்வி தான சுடரையுடைய திருவாழியையும். ஏந்துகையன். அழகுக்கும் விரோதிநிரஸநத்துக்கு முடலாக ஸர்வகாலமும் பூவேந்தினாற்போலே தரித்துக்கொண்டிருக்கும் திருக்கைகளையுடையவன். உள்ளவிடம்வினவில். வர்த்திக்கிற ஸ்தலம் கேட்கிறீர்களாகில். உமக்கிறை வம்மின் சுவடுரைக்கேன். வாருங்கோள், உங்களுக்கு அவன் வர்த்திக்கிறவிடத்துக்கு அல்பமடையாளம் சொல்லுகிறேன்,

வெள்ளைப்புரவி. சாரதேரும் த்வேதமனா அர்ஜுநனுடைய, வெளுத்த புரவிபூண்டிருப்பதாய், வாநரமான வெற்றிக்கொடியையுமுடைத்தாயிருக்கிற தேரின்மேலே அவனுக்கு ஸாரதியாய் முன்னே நின்று. கள்ளப்படைத்துணையாகி. கர்த்ரிப்படைத்துணை. அதாவது படைத்துணையாயிறவிடத்தில் இரண்டுதலையு மறியும்படி செல்லவையிலன்றிக்கே, பகலையிரவாக்கியும், "ஆயுதமெடேன்" என்று ஆயுதமெடுத்தும், எதிரியுடைய உயிர்நிலையைக்காட்டிக்கொடுத்தும் செய்தலை. பாரதம்கைசெய்யக்கண்டாருளர். பாரத ஸமரத்தைத் கையுமணியும் வருத்தமாய்த்த அத்தசையிலேகண்டவர்களுளர். ... ... ௭.

மூ.—நாழிகை கூறிட்டுக் காத்துநின்ற வரசர்கடம்முகப்பே
நாழிகைபோகப் படைபொருதவன் றேவகிதன்சிறுவன்
ஆழிகொண்டன் றிரவிமறைப்பச் சயத்திரதன்றலையைப்
பாழிலுருளப் படைபொருதவன் பக்கமேகண்டாருளர். அ.

பதவுரை.

| | | | |
|---|---|---|---|
| நாழிகை— | நாழிகையை | ஆழிகொண்டு— | திருவாழியைக்கொண்டு |
| கூறிட்டு— | விபஜித்து | இரவி— | ஸூர்யனை |
| காத்து நின்ற— | காத்துக்கொண்டு நின்ற | மறைப்ப— | மறைக்க |
| அரசர்கள் தம் முகப்பே | ராஜாக்களுக்குமுன்னே | சயத்திரதன்— | ஜயத்ரதனுடைய |
| நாழிகை— | பகல் முப்பது நாழிகையும் | தலையை— | தலையை |
| போக— | போயிற்றென்று தோற்றும்படியாக | பாழில்— | பாழி பள்ளத்திலே |
| படை— | திருவாழியாழ்வானைக்கொண்டு | உருள— | உருளும்படி |
| பொருதவன்— | பொருதவனான | படை— | அம்பாலே |
| தேவகிதன்— | தேவகிப்பிராட்டியினுடைய | பொருதவன்— | பொருத அர்ஜுநனுடைய |
| சிறுவன்— | பிள்ளையாய் [வன்று | பக்கமே— | அருகே |
| அன்று— | அவர்கள் காத்துக்கொண்டு நின்ற | | கண்டார் உளர். |

வ்யா. எட்டாம்பாட்டு. நாழிகைகூறிட்டு. "ஜயத்ரதனை அஸ்தமிப்பதற்கு முன்னே கொல்லக்கடவேன்" என்று அர்ஜுநன் ப்ரதிஜ்ஞைபண்ண, அதுக்கிடமறும்படி. ஒரு புருஷப்ரமாணமன்றியே நிச்சலுன்னை ஒருபுருஷப்ரமாணமாகக் குழிக்குள்ளே. நிறுத்தி,

வாறுதும் அறுக்கிடான வ்யாபாரமில்லாதபோது அவர்களில் வ்யாவ்ருத்தனுமல்லனிறே. (அ) "விபீஷணஸ்து தர்மாத்மா நது ராக்ஷஸ சேஷ்டிதஃ" என்றார்களிறே அவர்கள் தாங்களே. (உ) "ஆகாஶமாகாத்ராணாம் ராக்ஷஸாநாம் பயாவஹம்" என்று இக்ஷ்வாகுவம்சத்துக்கு நிர்வாஹகனாய், பெருமாள் கைக்கொண்டருளினபோதே அந்தத்தர்மாத்மாக்களும் மாறிப்போய்த்திறே. ஆகையால், "குலம் பாழ்படுத்து" என்னக்குறையில்லை. குலவிளக்காய்நின்ற. ராவணன் இக்ஷ்வாகுவம்சத்தை நிர்வம்சமாக்குவதாக விரும்பி நாள் தொடங்கி ஒழிமுழுக்கிக்கிடக்க இக்ஷ்வாகு வம்சம், பெருமாள் திருவவதரித்து, ராவணனுடைய கிளையை முழுக்கெடுத்துப்பொகட்டபின்பாய்த்து ப்ரகாசிப்பது; ஆகையாலே, குலத்துக்கு ப்ரகாசக்ணுப் நின்றவனென்கிறது. "வெங்கதிரோன் குலத்துக்கோர்விளக்காய்த்தோன்றி" என்றாரிறே ஸ்ரீகுலசேகரப்பெருமாள். இவர்கள்தாம் உபேக்ஷிக்கப்படுமிடங்களே கண்டதிறே. கோன்மலை. ஸர்வஸ்வாமியானவன் நித்யவாஸம் பண்ணுகிற தேசம். "குலவிளக்காய் நின்றகோன்மலை" என்கையாலே இன்னம் அவ்வளவுக்கும் விரோதிகளை நிரஸித்து ஆச்ரிதரக்ஷணம் பண்ணுகைக்காக எழுந்தருளியிருக்கிற ஸ்தலமென்கிறது. ஆகையால், ஸர்வஸ்வாமித்வம் வீறுபெற்றது இங்கேயிறே.

சிலம்பார்க்கவந்த தெய்வமகளிர்களாலும். முன்பு தேவஸ்த்ரீகள் திருச்சிலம்பாற்றில் ஸ்நானம்பண்ணவரும்போது ராவணாதிகளுக்கு அஞ்சி சிலம்பொழித்தும் ‡ பஞ்சடையிட்டும் வருவார்களாய்த்து; இப்போது அங்ஙனன்றிக்கே, அரக்கரைக் குலம்பாழ்படுத்தகையாலே, சிலம்புகள் த்வநிக்கும்படி வந்து, தேவஸ்த்ரீகளானவர்கள் ஸ்நானம்பண்ணுகிறது. இவர்கள் எதுக்காக இப்படி ஸ்நானம்பண்ணுகிறதென்னில்; ஸ்வர்க்கத்திலிருப்புக்கு வாதமாக. சாலில் நீர்மண்டலத்தைப்போலே, முன்பு ஆர்ஜித்தபுண்யம்பலமாண்டால், தேடிக்கொள்ளும்தேசம் இது வாய்த்து. சீரியபாதி. இப்படியிருக்குமுன்ன கௌரவத்தையுடைய திருச்சிலம்பாறுடைய அதிச்சின்ன ஸ்ரோதோரூபேண ப்ரவஹிஷ்யதிபாதிற்கும். (௩) 'நூபுரகங்கேதி விக்யாதா' என்று தொடங்கி ஒருச்லோகத்தாலே திருச்சிலம்பாற்றினுடைய வைபவத்தைப் பணித்து அருளிச்செய்தாரிறே ஆழ்வான். தென்திருமாலிருஞ்சோலையே. தென் என்று அழகாதல்; தெற்குத்திக்கிலேயான வென்னுதல். "மால்" என்றும், "இருமை" என்றுமிரண்டும் பெருமைக்குவாசகமாய், சோலையினுடைய ஒக்கத்தையும் பரப்பையும் சொல்லுகிறது. இப்படி இருக்கிறசோலைகளையுடைத்தாகையாலே மாலிருஞ்சோலையென்று அத்தேசத்துக்கு நிருபகம் வாசியிறே. ... ... ... ... ... ... ... ௫.

மூ.—வல்லாளன்றேளும் வாளரக்கன் முடியுந்தங்கை
பொல்லாதமூக்கும் போக்குவித்தான் பொருந்துமலை
எல்லாவிடத்திலு மெங்கும்பரந்து பல்லாண்டொலி
செல்லாநிற்குஞ் சீர்த்தென்றிருமாலிருஞ்சோலையே. ௬.

பதவுரை:

| | |
|---|---|
| பல்லாண்டொலி—மங்களாசாஸநத்வநியானது | எங்கும்— திருமலையின் பரப்பெங்கும் |
| எல்லா இடத்திலும் — எல்லாவிடங்களிலும் | பரந்து — பரவி |

(அ) "விபீஷணஸ்து தர்மாத்மா நது ராக்ஷஸசேஷ்டிதஃ." (உ) "ஆகாஶமிமம் தந்த்வேஷ ராக்ஷஸானாம் பயாவஹம்." ‡ பஞ்சடையிட்டும் - சிலம்பு த்வநியாதபடி பஞ்சை அதிலே அடைத்துக்கொண்டுமென்றபடி. (௩) "க்வசித்க்வசித்காமபிநீ க்வசநமர்தமந்த்ரஸ்வரா"

வ்யா. சிந்தப்புடைத்து. சிறப்புடைத்து. ஆஸ்திகராய், த்பாஞ்சேபாபதேய விவேகமுடையராய், அழகராலும் திருமலையாழ்வாராலும் ப்ரேமமுடையராய் வர்த்திக்குமவர்களைக் கண்டால் அவர்கள் ஸந்நிதியில் நில்லாதே அஞ்சலிஹஸ்தாதிகளைப் பண்ணித் தந்தாமைக்கொண்டு மறைந்துவர்த்திக்கும், நாஸ்திகராய் த்பாஞ்சேபாபதேய விவேகருமாய், தேஹபோஷணாதிகளைப் பண்ணி ஸ்வைரஸஞ்சாரம்பண்ணித் திரியும் ப்ரதிகூலர்களை, தந்தாம் ஸஞ்சரிக்கிற தேசத்திலே காலத்திலே கண்டால், அவயவங்கள் சிதறவடித்துக் கொன்று பொகடாநிற்குமாய்த்து. செங்குருதிகொண்டு. தாந்தாம் அடித்துக்கொன்றவர்களுடைய தேஹத்தில்நின்றும், செவ்வியிலே சிவந்துபுறப்படுகிற ரக்தத்தைக்கொண்டு. பூதங்கள். பூதவேதாளபிருக்கச் செய்தேயும், வைஷ்ணவாசாரமுடையவர்களோடு கூடி, பகவத் பாகவத பக்தியுக்தர்களாய்க் கொண்டுதிரியும் பூதங்களானவை. அந்திப்பலிகொடுத்து. (௪) "நமமஸ்வதி௨வாணாஜ்ஜு" என்று ஸமர்ப்பித்த கண்டாகர்ணனைப்போலே, தங்களுடைய ஜாத்யுசிதமாக ஜீவிக்குமத்தை, ஸந்த்யாகாலங்களிலே ஆராதநரூபமாக ஸமர்ப்பித்து. ஆவத்தனம்செய். தங்களுக்கு ஆபத்துக்கு ரக்ஷகமான நமோநமவென்று ஸேவித்துக்கொண்டு போரும்படியிருக்கிற. அப்பன்மலை. ஸர்வகாரண பூதனானவன் நித்யவாஸம்பண்ணுமலை. " அப்பன் " என்றது - இவத்துக்கும் இப்படி இட்டுவர்த்திக்கலாம்படி யிருக்கிறது காரண பூதனுடைய கடாக்ஷமென்னுமிடம் தோற்ற.

இந்திரகோபங்கள். சிவந்தநிறத்தை யுடையவாய், " இந்த்ரகோபம் " என்கிற நாமத்தையுடைத்தாயிருக்கிற ஜந்துக்களானவை. எம்பெருமான்கனிவாயொப்பான். ஸர்வ ஸ்வாமியான அழகருடைய, கொவ்வைக்கனி போலேயிருக்கிற திருவதரத்துக்குப் போலியாம்படி. சிந்தும்புறவில். கண்டவிடமெங்கும் சிதறிப்பறக்கும் பர்யந்தத்தையுடைய. "சிந்தூரச்செம்பொடிப்போல் திருமாலிருஞ்சோலையெங்கும் இந்திரகோபங்களேயெழுந்தும் பரந்திட்டன" என்னுமிறே - இவர்திருமகளாரும். தென்திருமாலிருஞ்சோலையே. இப்படியிருக்கிற அழகையுடைத்தான திருமாலிருஞ்சோலையென்கை. ... ... ௫.

மூ.—எட்டுத்திசையு மெண்ணிறந்த பெருந்தேவிமார்
விட்டுவிளங்க வீற்றிருந்த விமலன்மலை
பட்டிப்பிடிகள் பகடுரிஞ்சிச்சென்று மாலைவாய்த்
தெட்டித்திளைக்குந் தென்திருமாலிருஞ்சோலையே. ௬.

பதவுரை.

| | |
|---|---|
| மாலைவாய்— ஸந்த்யாகாலத்திலே | திளைக்கும்— களியாநின்றுள்ள |
| பட்டி— ஸ்வைரமாகத் திரியாநின்றுள்ள | தென் திருமாலிருஞ் சோலை—; |
| பிடிகள்— பெண்யானைகளானவை | எண் இறந்த— கணக்கிட முடியாதவர்களாய் |
| பகடு— ஆண்யானைகளோடே | பெரு— ரூபகுணாதிகளால் வந்த பெருமையையுடையரான |
| உரிஞ்சி சென்று— உராய்ந்து சென்று | தேவிமார்— தேவிமார்கள் |
| தெட்டி— அப்புணர்ச்சியாலுண்டான ஆநந்தம்முற்றி | |

(௪) " நமம் நமதம் புண்யம். "

ரது. அவனையழித்தபின்பிறே உஷை அநிருத்தனுக்கு சேஷமாய்த்து. அத்தைப்பற்ற- “காவலைக்கட்டழித்த” என்கிறது. தனிக்காளை கருதுமலை. “காமனைப்பயந்தகாளை” என்னுமாபோலே, காமனைப்பெற்றபின்பும் அத்விதீயமான யௌவநத்தையுடையனாயிருந்த வன், “பரமபதத்திலுங்காட்டில் இதுவே நமக்குவாஸஸ்தாநம்” என்று கருதி நித்ய வாஸம்பண்ணுகிற மலை.

கோவலர்கோவிந்தனை. கோரக்ஷணம் பண்ணுகிற ஜாதியிலே பிறந்து அவர்களிலே ஒருவனும், கோவிந்தாபிஷேகம்பண்ணினவனை. குறமாதர்கள். குறப்பெண்களானவர்கள். பண்குறிஞ்சிப்பாவொலிபாடி நடம்பயில்மாலிருஞ்சோலையதே. குறிஞ்சிப்பண்ணோடே கூடின பாட்டுக்களாலே ஒலிபெறப்பாடி, அப்பாட்டுக்கநுரூபமான ந்ருத்தத்தைப் பண்ணுகின்ற வன்ன மாலிருஞ்சோலையாகிற வதுவே- தனிக்காளை கருதுமலை. ... ... ௪.

மூ.—பலபலநாழஞ்சொல்லிப் பழித்த சிசுபாலன்றன்னை
அலைவலைமைதவிர்த்த அழகனலங்காரன்மலை
குலமலைகோலமலை குளிர்மாமலை கொற்றமலை
நிலமலை நீண்டமலை திருமாலிருஞ்சோலையதே. ௫.

பதவுரை.

குலம் மலை — தொண்டக்குலத்துக்குத் தலைவனமலையாயும்
கோலம் மலை— அழகியமலையாயும்
குளிர்— குளிர்ந்ததாய்
மா— மேன்மையையுடையதான
மலை— மலையாயும்
கொற்றம்— வெற்றியையுடைய
மலை— மலையாயும்
நிலம்— மரம்முதலியவை முளைக்கத்தக்க மண்பாட்டையுடைய
மலை— மலையாயும்
நீண்ட— உயர்த்தியையுடைய
மலை— மலையாயுமிருக்குமன்ன
திருமாலிருஞ்சோலை அதே-;
பலபல நாழம்— பற்பலகுற்றங்களை
சொல்லி— வாயாரச்சொல்லி
பழித்த— தூஷித்த
சிசுபாலன் தன்னை— சிசுபாலனை
‡ அலைவலைமை தவிர்த்த— அலைவலைத்தனத்தைப்போக்கி † ரக்ஷித்த
அழகன்— அழகையுடையனும்
அலங்காரன்— அலங்காரத்தை யுடையனுமானவன் வர்த்திக்கிற
மலை— திருமலையாம்.

‡ அலைவலைமை - விஷயகளாவாதிகளைப் பாராமல் தன்னெஞ்சில் தோற்றிற்றைச் சொல்லுதல்.

† சமத்தசையிலே தன் அழகைக் காட்டித் தன்னளவில் த்வேஷத்தை மாற்றுகையாலே தான் என்றால் நிர்நிந்தக்கொள்ளுகிறியும் அலைவலைத்தனத்தைப் போக்கிக்காத்தவனென்றபடி.

வ்யா. இத்தரம்பாட்டு. பலபலவித்யாதி. பலபலகுற்றங்களைச் சொல்லி நிந்தித்த சிசுபாலன்றன்னை. இவன் சொல்லும் தோஷங்கள் அநுகூலர்வாக்கால் சொல்லத்தகாதன வாகையாலே “நாழ்” என்கிறது. நாழ் - குற்றம். அது தனக்கு ஒருவகைப் பின்னமையாலே “பலபல” என்கிறது. அதுதன்னை நெஞ்சாலநினைத்திருக்கு மளவன்றிக்கே, பிறரறியும்படி வாய்விட்டுச் சொல்லுமவனே! என்று “சொல்லி” என்கிறது. “கேட்பார்செவிசுடு கீழ்மை வசவுகளே வையும்” என்றாரிறே ஆழ்வார். அதாவது - பகவந்நிந்தைக்கு ஜீவநம்

புலன்கள் ஐந்து— ஐம்புலன்களானும்
பொறிகளால்— ஐம்பொறிகளாலும்
ஏதம் ஒன்றும் இலாத— குற்றமொன்றுமில் லாதவர்களுமாய்
வண் கையினார்கள்— உதாரர்களுமாயுள் ளவர்கள்
வாழ்— நித்யவாஸம் பண்ணுகிற
திருக்கோட்டியூர்— திருக்கோட்டியூர்க்கு
நாதனை— நாதனான சொக்கநாராயணனாயும்
நரசிங்கனை— நெக்காழ்வாராயு மெழுந்த ருளியிருக்கிறவனை
நவின்று— வாயாரச்சொல்லி
ஏத்துவார்கள்— ஸ்துதிக்குமவர்கள்
உழக்கிய— ஸஞ்சரிக்கிற
பாததூளி— திருவடித்தூள்கள்
படுதலால்— படுதலால்
இவ்வுலகம்— இந்தலோகமானது
பாக்கியம் செய்தது— நல்லபாக்யத்தைப் பண்ணிற்று.

வ்யா. பூதமைந்தொடு. இத்தால் - பஞ்சபூதாரப்தமான தேஹத்தைச் சொல்லுகிறது. * மண்ணும் நீரெரிகால் மஞ்சுலாவு மாகாசமுமாம் புண்ணாக்கையிறே. இத்தோடே வேள்வியைந்து. பஞ்சமஹாயஜ்ஞங்கள். புலன்களைந்து. சப்தாதிகளான விஷயங்களைந்து. "புலன்" என்று - புலப்படும் விஷயங்களைச் சொல்லுகிறது. "பொறிகள்" என்று - ச்ரோத்ராதிகளான இந்த்ரியங்களைந்தையும் சொல்லுகிறது. இவற்றை "பொறி" என்கிறது - இவை சப்தாதிகளிலே கொடுபோய் விழவிட்டு முடிக்குமதாகையாலே. "புலனைந்துமேயும் பொறியைந்து" என்னக்கடவதிறே. இவற்றால் ஏதமொன்றுமிலாத. இவற்றோடே கூடியிருக்கச்செய்தே தோஷமின்றிக்கே யிருக்கை. பூதமைந்து மேதமொன்றில்லாத. தேஹத்தைத்தனக்கு என்றிருக்கை-ஏதம்; ஈச்வரனுக்கு என்றிருக்கை - ஏதமின்றிக்கே யிருக்கை. ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு என்றிருக்கை — ஏதமொன்றுமின்றிக்கே யிருக்கையாவது. வேள்வியைந்துமேத மொன்றுமிலாத. ஸ்வர்க்காதி ஸாதநமாக அநுஷ்டிக்கை - ஏதம்; மோக்ஷஸாதநமாக வநுஷ்டிக்கை - ஏதமின்றிக்கே யிருக்கை; பகவத்ப்ரீதி என்றிருக்கை- ஏதமொன்று மின்றிக்கே யிருக்கையாவது. புலன்களைந்து மேதமொன்றுமிலாத. சப்தஸ்பர்சரூப ரஸகந்தங்களைத் தனக்கு என்றிருக்கை- ஏதம்; இவற்றை பகவத்விஷயத்துக் கென்றிருக்கை-ஏதமின்றிக்கேயிருக்கை; பாகவதவிஷயத்துக் கென்றிருக்கை- ஏதமொன்று மின்றிக்கே யிருக்கையாவது. பொறிகளைந்து மேதமொன்றுமிலாத. இந்த்ரியங்களை இதரவிஷயங்களில் மூட்டுகை- ஏதம்; பகவத்விஷயத்திலே மூட்டுகை- ஏதமின்றிக்கே யிருக்கை; பாகவதவிஷயத்துக் கென்றிருக்கை - ஏதமொன்று மின்றிக்கே யிருக்கையாவது. வண்கையினார்கள். அதாவது- ஔதார்யம். அதாவது- "பூமி பாரங்களுண்ணும் சோற்றினை வாங்கி" என்கிறபடியே அப்பதார்த்தங்கள் ஸமீபதபடியாக வாங்குகையும்; இவற்றை ஸ்ரீவைஷ்ணவர்களுக்குக் கொடுக்கையும். ஈச்வரனையு மூட்டப்பட பறித்திறே பகவதகைங்கர்யம் பண்ணிற்று-திருமங்கையாழ்வார்; அதுக்கு உபாயமாகவிறே ஈச்வரன் திருமந்த்ரத்தை யுபதேசித்தது. "தன்னுசகடத்தாற்புக்க பெருஞ்சோற்றை - நான்றுற்றிய தெற்றனவும்" என்று - ஸ்ரீவைஷ்ணவர்களுக்கிடாதே தானே யுண்டானென்கிறிறே ஆழ்வார் கர்ஹித்தது. "பொருவாக வுண்பதனைப் புக்குரியுண்டக்கால் சிதைபாவோ உன்னுடே" என்று ஸ்ரீபாஞ்சஜந்யாழ்வாரையு மூட்டப்பட்ட கர்ஹித்தாளிறே பெண்மகள்; அவ்வளவுமன்றிக்கே, "சாதுகோட்டி யுட்கொள்ளப்படுவாரே" என்கிறபடியே - தங்கள்நிர விக்கட்டதே * பாஞ்சசன்யத்தைப் பற்பநாபனோடே கூட்டிவிட்டது. அவதாரத்திலு ண்டானவிழவு நீரவிறே அர்ச்சாவதாரத்தில் அமுதுசெய்தாற்போலே குறையாமல் கொடுக்

எத்தனங்கள் செய்தார்கோலோ. "அருளார் திருச்சக்கரத்தால் அகல்விசும்பும் நில னும் இருளார் வினைகெடச்செங்கோல் நடாவுதிர் - இவற்றின் புறத்தாளென்றெண்ணேல்" என்கிறபடியே அவன் காவலுக்குள்ளே கிடக்கிறதுதானேயிறே தவமாவது. "நீர் இங்கே நின்ற தவமிதுகொல்" என்று பகவத்விஷயத்தைக் கிட்டுகைக்குத்தவம் ஒன்று; பாகவதவி ஷயத்தைக் கிட்டுகைக்கு அநேகம் தபஸ்ஸு வேணுமிறே. கெடலோ. பகவத்விஷயத்தைக் கிட்டுகைக்கு தபஸ்ஸு அறிவர்; பாகவதவிஷயத்தைக்கிட்டும் தபஸ்ஸுக்களிறே இவர்க்கு அறியப்போகாதிருப்பது. ... ... ... ... ... ... ... எ.

மூ.—நளிர்ந்தசீல நயாசல னபிமானதுங்கனை நாடொறும்
தெளிந்தசெல்வனைச் சேவகங்கொண்ட செங்கண்மால் திருக்கோட்டியூர்
குளிர்ந்துறைகின்ற கோவிந்தன் குணம்பாடுவாருள்ள நாட்டினில்
விளைந்ததானியமு மிராக்கதர் மீதுகொள்ளகிலார்களே. அ.

பதவுரை.

நளிர்ந்த சீலன் — குளிர்ந்த சீலத்தையுடையவராய்
நயாசலன்— நீதிநெறி தவறாதவராய்
அபிமானதுங்கனை— பகவதநுபவத்தால் வந்தசெருக்கில்
துங்கனை— உயர்ந்தவராய்
நாள்தொறும்— நாள்தோறும்
தெளிந்த— தெளிந்தவரா யிருந்த
செல்வனை— கைங்கர்ய ஸ்ரீயையுடையவரான செல்வநம்பியை
சேவகம் கொண்ட— அடிமைகொண்டவனும்
செம் கண்— சிவந்தகண்களையும்
மால்— பிராட்டிபக்கல் வ்யாமோஹத்தையுமுடையவனுமான எம்பெருமான் வர்த்திக்கிற

திருக்கோட்டியூரில்;
குளிர்ந்து— திருவுள்ளம் குளிர்ந்து
உறைகின்ற— நித்யவாஸம் பண்ணுகிற
கோவிந்தன் குணம் பாடுவார்— கோவிந்தனுடைய கல்யாணகுணங்களைப்பாடுமவர்கள்
உள்ள— எழுந்தருளியிருக்கிற
நாட்டினுள்— நாட்டிலே
விளைந்த— விளைந்த
தானியமும்— தாந்யத்தையுங்கூட
இராக்கதர்— ராக்ஷஸர்கள்
மீது கொள்ள கிலார்கள்— அபஹரிக்கமாட்டார்கள்,

வ்யா. எட்டாம்பாட்டு. நளிர்ந்தசீலன். குளிர்ந்த சீலத்தையுடைய செல்வநம்பி. ஸர்வாத்மசீலம் தொனித்திருக்கும். அதுக்கடி, "தான்கொள் சீர்மழுவாளிபுன்னுகத்தான்" என்றும், "ஆசாரத்திதாழுவாரு மயர்கள்" என்றும்- தர்மாநியான ருத்ரனும், சதுர முகனும் மருக்குநின்றும் தேவஜாதியுமிறே இவனுக்கடிமை செய்வது. "அக்கும்புலியி னதளுமுடையா ரவரொருவர்பக்கம்நிற்க நின்றபண்பநூர்" என்றும், "தாழ்சடையும் நீண் முடியும் ஒண்மழுவும் சக்கரமும் சூழரவும் பொன்னுணும் தோன்றுமால்" என்றும் - * இர ண்டுருவு மொன்றாயிசைந்து தோற்றுகையாலே, "ஏறுஞ ஏறையோனும் திசைமுகனும் திருமகளும் கூறுகொண் டிவிடம்பன்" என்று - இவனுடம்பு தேவதாந்தரமும் திருவிடை யாட்டமுமாயிறே யிருப்பது. இப்படியன்றியே, "காணிலுமுருப்பொலார் செவிக்கினாத கீர்த்தியார்" என்றிறே - இவனிருப்பது. நயாசலன். நயமென்று - நீதியைச் சொல்லு கிறது. அங்கும், "நீதியானவன்" என்னக்கடவதிறே. அசலன். நீதிக்குக் குலைதலில்

என்னப்பாருங்கோள். "கேடுமிடராயவெல்லாம் கேசவாவென்ன" என்று சொல்லக்கடவதிறே. புருடோத்தமா. ஞானதாச்யம் அதாவது- அநிஷ்ட நிவ்ருத்தியும் இஷ்டப்ராப்தியும் பண்ணுகை. கேழலாகியகேடிலீயென்றும். இவர்கள் கேடுபோனால் தம்கேடு போனதாக நினைத்திருக்கை. பேசுவாறுவெய்தும் பெருமை. அவர்களேற்றத்துக்குப் பாசுரமிடப் போகாது; "அவர்" என்னுமித்தனையிறே. அவர்கள் பெறும்பேற்றை நம்மால் பேசப் போகாது. பேசுவாண்புகில். பேசப்புக்கோமாகில். நம்பரமன்றே. நம்மால் பேசித்தலைக் கட்டப்போகாது. கொடுக்கிறவன்குணதியுமித்தனை. அதாவது- இதாலெங்கும் குலைப்பெறுவதாம்; சமகாலத்தில் அவர்களை அழைப்பாதொழியப் பெறுவதாம்; நம்முடைய பேர்களைச் சொல்லப்பெறுவதாம்; "இதென்னவேற்றம்! இதென்னவேற்றம்!" என்று இதின் ஏற்றமறிந்து ஈடுபேசுவானவனிறே. ... ... ... ... ... ௭.

௮. இரண்டாம்பாட்டு. திருநாமஞ்சொன்னவர்கள் போகத்தைப் பெறுவர்களென்கிறார்.

மூ.—சீயினாற்செறிந் தேறியபுண்மேற் செற்றலேறிக் குழம்பிருந்தெங்கும்
ஈயினாலரிப்புண்டு மயங்கி எல்லைவாய்ச்சென்று சேர்வதன்முன்னம்
வாயினால்நமோநாரணவென்று மத்தகத்திடைக் கைகளைக்கூப்பிப்
போயினாற்பின்னை யித்திசைக்கென்றும் பிணைக்கொடுக்கிலும் போகவொட்டாரே.

பதவுரை.

சீயினால்— சீயாலே
செறிந்து ஏறிய— மிகவும் நிறைந்த
புண் மேல்— புண்ணின் மேலே
செற்றல் ஏறி— ஈ இருந்து முட்டையிட்டு
குழம்பிருந்து — புழுத்துநீராய்ப் பாயுமதாய் [எங்கும்
எங்கும்— இடம்தப்பாமல்
ஈயினால்— ஈயாலே
அரிப்புண்டு— அரிக்கப்பட்டு [சித்து
மயங்கி— அது பொறுக்கமாட்டாமல் மூர்
எல்லைவாய்— சரமகாலத்தை
சென்று சேர்வதன் முன்னம் — சென்று கிட்டுவதற்கு முன்னே
வாயினால்— வாயாலே
நமோநாரண என்று— 'நமோநாராயணாய' என்று சொல்லிக்கொண்டு
மத்தகத்திடை— உச்சியிலே
கைகளை கூப்பி— கூப்பினவையாய்
போயினால்— போனால்
பின்னை— பிறகு
பிணைக்கொடுக்கிலும்— பிரமாணிக்கர்களை உத்தரவாதிகளாக்கினாலும்
இ திசைக்கு— இவ்வுலகத்திற்கு
என்றும்— எப்போதும்
போக ஒட்டார்— யமபடர்களான்னவர், இவர்களைச் செல்லவொட்டார்கள்.

வ்யா. சீயினாற்செறிந்தேறியபுண்மேல். சீயானது விஞ்சியுடைபட்ட புண்ணின்மேலே. செற்றலேறி. ஈயிருந்து முட்டையிட்டு. குழம்பிருந்து. அவைபுழுத்து நீராய்ப்பாயுமளவிலே. ஈயினாலரிப்புண்டு மயங்கி. ஈயினாலே அரிப்புண்டு, அதுபொறுக்கமாட்டாமல் மூர்ச்சித்து. எல்லைவாய்ச்சென்று சேர்வதன்முன்னம். சரமகாலத்தைச்சென்று கிட்டுவதுக்குமுன்னே.

வாயினால் நமோநாரணவென்று. வாய்படைத்த ப்ரயோஜனம் பெறும்படி. "எனக்கு நானுமிலேனல்லேன், உனக்குரியேன்" என்று சொல்லுகையிறே வாய்படைத்ததுக்குப்ரயோ

ஜாம் மத்தகத்திலேக் கைகொக்கப்பி. தலைபடைத்த ப்ரயோஜநம் பெற்று. போயிறுல். இப்படி செய்துபோருல். போயிறுலென்றது- வழிப்போக்குத்தரனே ப்ரயோஜநமென்கை. இவன் ஒருகால்தொழுதால், இதுக்கு பலம்- வழிப்போக்கில், "மற்றெல்லாம் கைதொழுப் போம்" என்றும், "தொழுதனருவர்கள்" என்றும் சொல்லுகிறபடியே இவன் பார்த்த பார்த்தவிடமெல்லாம் அஞ்ஜலிக்காடாயிறே இருப்பது. அங்கு புக்காலும் (க) "வைஜாஞ்ஜலிபுடாஜ்யாஞ்ஜலி" என்றதிறே பலம். இவன் ஒருக்கால் ஆத்மஸமர்ப்பணம் பண்ண, "ஆண்மின்கள் வானகமாழியான்றமர்" என்று த்ரிபாத்விபூதியாக ஸமர்ப்பிப்பர்கள். ஒருக்கால் "நம:" என்ன, காலதத்வமுள்ளதனையும் "நமோநாராயணா"வென்று சூழ்ந்திருந்தேத்துகையிறே பலம். பின்னைத்திசைக்கென்றும் பிணக்கொடுக்கிலும் போகவொட்டாரே. நித்யமுக்தரைப் பிணைபிடிலும் போகவொட்டார்கள். அதுக்கடி- "வீன்றுனார் பெருமாற்கடிமை செய்வாரையும் செறும்ஜேதமாகையாலே. அவன்றுனும் "ஏற்றிவைத்தேணிவாங்குமவனிறே. இத்தால்- கர்மமடியாக மீட்சியில்லையென்றபடி. ... ... ... ௨.

அ. மூன்றும்பாட்டு. ஆத்மஸமர்ப்பணம் பண்ணினார்க்கு யமவச்யதை யில்லையென்கிறார்.

மூ.—சொல்லினும்பொருள் வைத்ததுண்டாகில் சொல்லு சொல்லென்று சுற்றமிருந்து
ஆர்வினவிலும் வாய்திறவாதே யந்தகால மடைவதன்முன்னம்
மல்லவென்பதோர் கோயிலமைத்து மாதவனென்னுந் தெய்வத்தைநாட்டி
ஆர்வமென்பதோர் பூவிட வல்லார்க் கரவதண்டத்தி லுய்யலுமாமே. ௩

பதவுரை.

சொல்லினும்— புத்திமறதியாலே
பொருள்— பொருள்களை
வைத்தது உண்டாகில்— புதைத்து வைத்ததுண்டானால்
சொல்லு சொல் என்று— 'அதிருக்குமிடத்தைச் சொல் சொல்' என்று
சுற்றம்— சுற்றத்தினும்
இருந்து— சூழவிருந்து
வினவிலும்— சுற்றத்தார் கேட்டாலும்
ஆர் (வினவிலும்) — அருமைப்பட்டுத் தேடி சுற்றத்தார் முதலானோர்க்கும் கொடாமல் மறைத்து வைத்த பொருள்கொடுத்து வேட்ட இனியாள் கேட்டாலும்,
வாய் திறவாதே— வாயைத் திறவாதபடி
அந்த காலம்— முடிவுகாலம்
அடைவதன் முன்னம்—வருவதற்குமுன்னே
மால்வம் என்பது— 'மனஸ்ஸு' என்று சொல்லப்படுவதாய்
ஓர்— அத்விதீயமான
கோ இல்— பகவத்ஸந்நிதியை
அமைத்து— உண்டாக்கி
மாதவன் என்னும்— 'ஸ்ரீயப்பதி' என்று ப்ரஸித்தமான
தெய்வத்தை— அத்விதீயவஸ்துவை
நாட்டி— நிலை நிறுத்தி
ஆர்வம் என்பது— அன்பாகிற
ஓர் பூ— ஒரு புஷ்பத்தை
இட வல்லார்க்கு— ஸமர்ப்பிக்க வல்லவர்களுக்கு
அரவர்— யமபடர்களுடைய
தண்டத்தில்— தண்டனையினின்றும்
உய்யலும் ஆம்— பிழைக்கலுமாம்.

(க) "பத்தாஞ்ஜலிபுடாஹ்ருஷ்டா:."

மனையே சேர்க்கும்" என்கிற தேசத்தேறப் போகப்பெறுவர்களென்கிறார். "ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்பக்கண்டசதிர்" என்னக்கடவதிறே. ... ... அ.

அ. ஒன்பதாம்பாட்டு. வலித்பாதி. இப்பாட்டில் ஸர்வவித பந்துவாக அவனைப்பற்றினால், பின்னை யமவச்யதை இல்லையென்கிறார்.

மூ.—வாயொருபக்கம் வாங்கிவலிப்ப வார்ந்தநீர்க்குழிக்கண்கள் மிழற்றத்
தாயொருபக்கந் தந்தையொருபக்கந் தாரமுமொருபக்க மலற்றத்
தீயொருபக்கஞ் சேர்வதன்முன்னஞ் செங்கண்மாலொடுஞ் சிக்கெனச்சுற்ற
மாயொருபக்க நிற்கவல்லார்க் கரவதண்டத்தி லுய்யலுமாமே. ௯.

பதவுரை.

வாய்— வாயானது
ஒரு பக்கம் வாங்கி வலிப்ப— வாதவிகாரத்தாலே ஒருக்கடுத்து வலிக்கவும்
வார்ந்த— பெருகின
நீர்— நீரையுடைத்தாய்
குழி— உள்ளே இடிய இழிந்த
கண்கள்— கண்களானவை
மிழற்ற— அலமர்ந்து நிற்கவும்
ஒரு பக்கம்— ஒருபக்கத்திலே
தாய்— தாயாரும்
ஒருபக்கம்— மற்றொருபக்கத்திலே
தந்தை— தமப்பனாரும்
ஒருபக்கம்— இன்னொருபக்கத்திலே
தாரமும்— மனைவியும்
அலற்ற— கதற
தீ— நெருப்பை
ஒருபக்கம்— ஒருபக்கத்தில்
சேர்வதன் முன்னம்— இடுவதற்கு முன்னே
செம்— சிவந்த
கண்— திருக்கண்களை யுடையவனான
மாலொடும் } ஸர்வேச்வரனை
சிக்கென } —திருபாதிகமான
சுற்றம் ஆய் } பந்துவாகக் கொண்டு
ஒருபக்கம் — அம்மாநிகளோடென்ன உறவைக் கலசாதே என்னமவனேயாக
நிற்க வல்லார்க்கு— பற்றி நிற்கவல்லவர்கட்கு
அரவதண்டத்தில் — யமபடர்களுடைய க்ரூரமான தண்டனையில் நின்றும்
உய்யலும் ஆம்— உஜ்ஜீவித்துப் போகலாம்.

வ்யா. வாயொருபக்கம் வாங்கிவலிப்ப. வாதவிகாரத்தாலே வாயானது ஒருக்கடுத்து வலிக்க. வார்ந்த நீர்க்குழிக்கண்கள் மிழற்ற. "பக்குக்களிசிட்டுப் பேசிறேன்" என்று இவர்கள் பக்கல் வைக்கதாலே அழுகிற வளவிலே, யமபடரைக்கண்டவாறே பயத்தின் கனத்தாலே கண் உள்ளே இடிய இழிந்து அலமாரிற்கும். தாயொருபக்க மித்யாதி. தன்னை உண்டாக்கினரும், தானுண்டாக்கினவர்களும், ஓரோருசேரிருந்து கதற. அனந்தரம், தீயொருபக்கம் சேர்வதன் முன்னம். ஸம்ஸ்கரிப்பதற்கு முன்னே. செங்கண்மாலொடும். வாத்ஸல்யத்தையும் வ்யாமோஹத்தையு முடைய ஸர்வேச்வரனை. சிக்கெனச்சுற்றமாய். நிருபாதிக ஸர்வவித பந்துவுமாகப் பற்ற வல்லருமாய். ஒருபக்கம் நிற்கவல்லார்க்கு. ஸம்ஸாரிகளோடென்ன உறவைக் கலசாதே அவனேயாகப் பற்றி நிற்கவல்லார்க்கு. அரவதண்டத்தி லுய்யலுமாமே. யமபடரையும் அவர்கள் க்ரூரமான தண்டனைகளையும் தப்பி உஜ்ஜீவித்துப் போகலாம். "மாதவனேப் பிதற்றித்திருமாலை வணங்குவன்" என்றும் "சேலேய் கண்ணியரும் பெருஞ் செல்வமும் நன்மக்களும், மேலாத்தாய்தந்தையுமவரே" என்றும் பற்றுவார்க்கு உஜ்ஜீவித்துப்போகலா மென்கிறார். ... ... ... ௯.

செங்கணெடுமால் சிரீதராவென்றழைத்தக்கால்
நங்கைகாள் நாரணன்றம்மன்னை நரகம்புகாள். ௨.

பதவுரை.

அங்கு— செல்வர்களிடத்து
ஒரு கூறை— ஒரு புடவையைப்பெற்று
அரைக்கு உடுப்ப தன் ஆசையால் — அரைக்கு உடுக்கவேணுமென்னு மாசையாலே
மங்கிய— அழிந்துகிடக்கிற
மானிடசாதி— மனுஷ்யஜாதியுடைய
பேர் இடும்— பேரை இடுகிற
ஆதர்காள்— குருடர்களே!
நங்கைகாள்— சொல்லிற்றை அறியவல்ல மதியையுடையவர்களே!
செம்— சிவந்திருக்கிற
கண்— திருக்கண்களையும்
நெடுமால் என்று— மிக்கவ்யாமோஹத்தையு முடையவனே! என்றும்
சிரீதரா என்று— ஸ்ரீதரனே! என்றும் (பேரிட்டு)
அழைத்தக்கால்— அழைத்தால்
நாரணன்— நாராயணனென்னும் பேயரையுடைய அந்தப் பிள்ளையின் தம் அன்னை நரகம்புகாள்.

வ்யா. இரண்டாம்பாட்டு. அங்கொருகூறை யரைக்குடுப்பதனாசையால். அங்கே பெற்று ஒருபுடவை அரைக்கு உடுக்கவேணுமென்னும் ஆசையாலே. இவ்விடத்திலும் "அங்கு" என்று உபகாரவிஷயத்தினுடைய கர்ஹத்வத்தைச் சொல்லுகிறது. "ஒரு கூறை" என்றும், "அரைக்குடுப்பது" என்றும் சொல்லுகையாலே, உடுக்கும் சேலைக்கு இனைச்சேலை வேறே தேடவேணுமென்கை. "ஆசையால்" என்கையாலே - அதுதானும் உக்கண்டையேயுள்ளது, கிடைக்கிலுமாம், கிடையாதொழியிலுமாமென்கை. மங்கியமானிடசாதிப்பேரிடு மாதர்காள். "அஸந்நேவ" என்கிறபடியே அழிந்துகிடக்கிற மநுஷ்யஜாதியுடைய பேரையிடாநிற்கும் அறிவுகேடர்காள், "ஆவிடை பேழ்ந்தடர்த்தாற் காணாறு ஈவவ்ராதர் மானிடவரல்லர்" என்னும்படியானவர்கள் பேரையிறே யிடுகிறது. த்ருஷ்டத்துக்கும் அத்ருஷ்டத்துக்கும் உறுப்பன்றிக்கே யிருக்கிறவர்கள்பேரை யிடுகிறது உங்களுதி வுகேடிறே. செங்கணெடுமால் சிரீதராவென்றழைத்தக்கால். வகுத்த சேஷியானவனுடைய திருநாமத்தையிட்டு, 'செங்கணெடுமாலே!' 'ஸ்ரீதரனே!'யென்று அழைத்தால். "செங்கணெடுமால்" என்றது - வாத்ஸல்யப்ரகாசகமான திருக்கண்களையும், ஆச்ரிதவிஷயத்தில் மிக்க வ்யாமோஹத்தையு முடையவனென்கை. அன்றிக்கே, "மால்" என்றது - பெரியோனென்றபடியாய், ஸர்வேச்வரத்வம் சொல்லுகிறதாகவுமாம். அப்போதைக்கு, "செங்கண்" என்றது - ஐச்வர்யஸூசகம். "சிரீதரா" என்றது - கீழ்ச்சொன்ன இரண்டு போலுமைக்கும் பொது. சீர்மைக்கும் மேன்மைக்கு முடலாயிறே லக்ஷ்மீஸம்பந்தந்தானிருப்பது. நங்கைகாள். சொன்னதை யறியத்தக்க பூர்த்தியை யுடையவர்களே. நாரணன்றம்மன்னை நரகம்புகாள். பூர்வவத். ... ... ... ... ... ... ௨.

முடைச்சியி லெண்ணெயுஞ் சுட்டியும் விளையுமுகந்து
எச்சம் பொலிந்தீர்கா ளென்செய்வான் பிறர்பேரிட்டீர்
பிச்சைபுக்காகிலு மெம்பிரான் றிருநாமமே
நச்சுமின்நாரணன் றம்மன்னை நரகம்புகாள். ௩.

தாமோதரா என்று— 'தாமோதரனே!' என்றும்
நாமம் இன்— வாழ்த்திக்கொண்டு திரியுங்கள்;

(இங்ஙன் செய்தால்,)
நாரணன் தம் அன்னை நரகம்புகாள்.

வ்யா. ஆறும்பாட்டு. நாடித்யாதி. நாட்டிலுள்ளாரோடு நகரத்திலுள்ளாரோடு வாசியற எல்லாரும் "இவன் அனாதாரணன்" என்று அறியும்படி க்ஷுத்ரமநுஷ்யர்பேரை யிட்டு, அவர்களோடேகூடி அவர்கள் பக்கலிலே கால்தாழ்ந்து அவர்கள் விழுந்த குழியிலே விழுந்து தவற வர்த்தியாதே. சாடிறவித்யாதி. ஸர்வேச்வரனுடைய திருநாமத்தையிட்டு, சகடாஸுரனைமுறியப் பாய்ந்த நம்பியே! தாமோதரனே! என்று வாயாரவாழ்த்திக்கொண்டு திரியுங்கோள். நாரணன்தம்மன்னை. நாராயணனுடைய மாதாவானவள் நரகம் புகாள். ... ... ... ... ... ... ... ... ... ... சு'

ரு.—மண்ணிற்பிறந்து மண்ணாகுமானிட ப்பேரிட்டங்
கெண்ணமொன்றின்றி யிருக்குமேழை மனிசர்காள்
கண்ணுக்கினிய கருமுகில்வண்ணன் நாமமே
நண்ணுமின் நாரணன்றம்மன்னை நரகம்புகாள். எ.

பதவுரை.

மண்ணில் பிறந்து— மண்ணிலேயுண்டாய்
மண் ஆகும்— மண்ணாய்விடுகிற
மானிடர் பேர் இட்டு—மநுஷ்யருடையபேரை இட்டுக்கொண்டு
அங்கு— அந்த்ஷ்டபலத்திலே
எண்ணம் ஒன்று இன்றி இருக்கும்—ஒரு விசாரமற்றிருக்கிற
ஏழை— அறிவிலிகளான

மனிசர்காள்— மநுஷ்யர்களே!
கண்ணுக்கு— கண்ணுக்கு
இனிய— இனிதாயிருக்குமுள்ள
கரு— கறுத்த
முகில்— மேகம்போன்ற
வண்ணன்— வடிவையுடையவனுடைய
நாமம்— திருநாமத்தை
நண்ணுமின்— கண்ணுங்கோள்
நாரணன் தம் அன்னை நரகம்புகாள்—.

வ்யா. ஏழாம்பாட்டு. மண்ணிற்பிறந்து. "மண்ணும் நீரெரிகால் மஞ்சுலாவுமாகா சமுமாம் புண்ணாக்கை". என்கிறபடியேதேஹோபாதாநம் பூதபஞ்சகமேயாகிலும்ப்ராசுர்ய ன்யாயப்ருதிவீத்ரவ்யமகையாலே அதில் நின்றும் தேஹத்துக்கு உத்பத்தியாக அருளிச் செய்கிறார். மண்ணாகும். தேஹத்தாள் உருக்குலைந்தால், கார்யத்துக்குக்காரணத்திலே லய மாகையாலே, மீளவும் மண்ணாய்ப்போகக் கடவதிறே; அத்தைப்பற்ற அருளிச்செய்கிறார். மானிடப்பேரிட்டு. ஆக இப்படி மண்ணிலே பிறந்து மண்ணாய்ப்போகாநிற்கும் க்ஷுத்ரமநு ஷ்யருடைய பேரையிட்டு. இத்தால் அவர்கள் பரிக்ரஹித்திருக்கிற சரீரத்தினுடையபொல்லா ங்கையும் அஸ்திரதையையும் க்ஷுத்ரதையையும் சொல்லி, இப்படியிருக்கிறவர்கள் பேரை யிடலாகாதே! என்கிறார். அங்கெண்ணமொன்றின்றி யிருக்குமேழைமனிசர்காள். அவ்விஷயத் திலே ஒரு விசாரமற்றிருக்கிற அறிவிலி மநுஷ்யர்காள். அதாவது - முன்பு அப்படிசெய் தால், பின்பு தத்விஷயமாக ஒரு விசாரமுண்டாய் "என்னகார்யம் செய்தோம்" என்று அநுதபிக்கவேணுமிறே. அதின்றிக்கே யிருப்பாராயிருக்கிறது உங்களறிவுகேடிறே யென்கை. கண்ணுக்கினியத்யாதி. வைத்தகண் வாங்காதே கண்டுகொண்டிருக்கும்படி த்ர்ஷ்டிப்ரியமான

காளமேகம்போன்ற வடிவையுடையரு யிருக்கிறவனுடைய திருநாமத்தை சன்னுங்கோள். அதாவது - அவன் திருநாமத்தை உங்கள் பிள்ளைக்கு இட்டு அழையாநின்று கொண்டு, அத் திருநாமத்தில் செறிவுடையராய்ப்போருங்கோளென்கை. அந்தநாரணன் தம்மன்னை நரகம் புகாள். ... ... ... ... ... ... ... ... ... ...௧.

அ. எட்டாம்பாட்டு. நம்பிபித்யாதி. லோகத்தில் இன்னநம்பி இன்னநம்பியென்று ஒரு க்ராமத்துக்கும் ஜநபதத்துக்கும் ப்ரதாநராய் ப்ரஸித்தராயிருக்குமவர்களுடைய நாமங்களை, த்ரவ்யப்ரயோஜநங்களை நச்சி, பிள்ளைகளுக்கு இட்டுத்திரியு மவர்களைப்பார்த் தருளிச் செய்கிறார்.

மூ.—நம்பிபிம்பியென்று நாட்டுமானிடப்பேரிட்டால்
நம்பும்பிம்புமெல்லா நாலுநாளி லழுங்கிப்போம்
செம்பெருந்தாமரைக்கண்ணன் பேரிட்டழைத்தக்கால்
நம்பிகாள்நாரணன்றம்மன்னை நரகம்புகாள். ௨

பதவுரை.

| | |
|---|---|
| நம்பி பிம்பி என்று — 'நம்பி' என்றும் 'பிம்பி' என்றும் | அழுங்கி போம்— நசித்துப்போம்; |
| நாடு— நாட்டிலுண்டான | நம்பிகாள்— பூர்ணர்களே! |
| மானிடர்— மநுஷ்யருடைய | செம்— சிவந்து |
| பேர் இட்டால்— பெயரை இட்டால் | பெரு— பெருத்த |
| நம்பும் பிம்பும் எல்லாம்— 'நம்பி' 'பிம்பி' என்கிற பேருக்கடியான முதன்மை யெல்லாம் | தாமரை— தாமரை மலர்போன்ற |
| நாலு நாளில்— நாலுபோதில் | கண்ணன்— திருக்கண்களையுடையவனுடைய |
| | பேர் இட்டு — திருநாமத்தை இட்டு |
| | அழைத்தக்கால்— அழைத்தால் |
| | நாரணன் இத்யாதி. |

வ்யா. நம்பிபிம்பியென்று நாட்டுமானிடப்பேரிட்டால். பிம்பிக்கு ஒரு பொருளுண்டா யிலைத்து- நீங்கள் சொல்லுகிற நம்பிக்கும் ஒருபொருளுண்டாவது ! என்று கேடித்து, நம்பிக்கு எதிர்த்தட்டாக ஒருபிம்பியையருளிச்செய்கிறார். இப்படி நாட்டிலுண்டானவ-ர்மநுஷ்யருடைய பேரையிட்டால். நம்பும் பிம்புமெல்லாம் நாலுநாளிலழுங்கிப்போம். 'நம்பி, பிம்பி' என்கிற பேருக்கடியான முதன்மையெல்லாம் நாலுபோதில் நசித்துப்போம். அதா வது கர்மநிபந்தமாக வந்ததாகையாலே, " வாழ்ந்தார்கள் வாழ்ந்தேயிருப்ப ரென்பதில்லை " என்றபடியே அழிந்துபோம். பின்னை யார்பக்கலிலே நாங்கள் ஜீவநம் பெற்று ஜீவிப்ப தென்ன; செம்பெருமித்யாதி. சிவந்து பெருத்த தாமரைபோலே யிருக்கிற திருக்கண்களை யுடையவனுடைய திருநாமத்தை யிட்டு அழைத்தக்கால், அதாவது திருநாமம் சொன்ன வர்களுக்கு வைலக்ஷண்யத்துக்கு முண்டாம்படி கடாக்ஷிக்கும் திருக்கண்களையுடையவன் திரு நாமத்தை உங்கள் பிள்ளைக்கிட்டு ஆதரம் தோற்ற அழைத்தக்காலென்கை. நம்பிகாள்.*அறி விலும் குறைவில்லாத பூர்ணர்கள். நாரணன் தம்மன்னை நரகம்புகாள். ... அ.

மூ.—உச்சைதக்குறிபி லமுதம்பாய்வது போலுங்கள்
மூத்திரப்பிள்ளையை யென்முகில்வண்ணன் பேரிட்டுக்

ஓராணிபோலவுடமிழொன்பதோ டொன்றும் வல்லவர்
பேராணி வைகுந்தத்தென்றும் பேணியிருப்பரே. ௫.

பதவுரை.

சீர்— கல்யாண குணங்களை
அணி— ஆபரணமாகவுடையனும்
மால்— ஆச்ரித வ்யாமோஹத்தை யுடைய
திரு நாமமே— திருநாமங்களையே
இடம்—தந்தாம் பிள்ளைகளுக்கு இடும்படியாக
தேற்றிய - தெளிவித்த
வீரம்— இந்த்ரியங்களை வெல்லுகையாகிற வீரப்பாட்டை
அணி— ஆபரணமாகவுடையராய்
தொல்— அநாதிஸித்தமான
புகழ்— கீர்த்தியையுடையரான
விட்டுசித்தன்— பெரியாழ்வார்
விரித்த— விஸ்தரித்துச் சொன்னதாய்
(அப்யஸித்தவர்களுக்கு,)
ஓர்— ஒப்பற்ற
அணி— ஆபரணமாய்
ஒண்— தன் பொருளை விளக்குமதாய்
தமிழ்— தமிழ்பாஷையான
ஒன்பதோடு ஒன்றும்—பத்துப்பாட்டையும்
வல்லவர்— ஓதவல்லவர்
பேர்— பெரிய
அணி— அழகையுடைய
வைகுந்தத்து— ஸ்ரீவைகுண்டத்திலே
என்றும்— எப்போதும்
பேணி இருப்பர் — ஆதரத்தோடே வர்த்திக்கப் பெறுவர்கள்.

வ்யா. சீரணிமால். குணங்களை ஆபரணமாக வுடையனும் ஆச்ரித வ்யாமோஹத்தை யுடைய, "சீரணி" என்றது - குணங்களினுடைய நிறை யுடையவனென்றும், அக்குணங்கள் புறம்பொரு வ்யக்தியில் இடமையாலே, கல்யாணகுணங்களுக்கெல்லாம் ஆச்ரயமானவ னென்னவுமாம். (க) "யோ தீ நாகிய ஒஷெ ஐஸீ மாணாதா கேவரோ நாமாகூ" என்னக்கடவதிறே. மால் - பெரியவன்; ஸர்வேச்வர னென்னவுமாம். திருநாமமேயிடத்தேற்றிய. இதாநாமங்களை மாற்றி ஈசுவரன்றன் நாமங்களை தாந்தாம் பெற்ற பிள்ளைகளுக்குச் சாத்தும்படியாகப் பரிஹேநுக்களாலும் தெளிவித்து. வீரணிதொல்புகழ் விட்டுசித்தன் விரித்த. ஜிதேந்த்ரியத்வமாகிற வீரப்பாட்டை ஆபரணமாக வுடையராய், ஸூரிகளைப்போலே அநாதிஸித்த மங்களாசாஸநப்புகழை யுடையரான பெரியாழ்வார் பரப்பின. ஓரணியொண்டமிழ். அப்யஸித்தார்க்கு அத்விதீயமான ஆபரணமாய், அர்த்தப்ரகாசகமாய், ஸர்வாதிகாரமான த்ராவிடரூபமாயிருக்கின்ற இப்பத்துப்பாட்டையும் ஸாபிப்ராயமாக வல்லவர்கள். பேராணி வைகுந்தத்து. பெரிய அழகையுடைய ஸ்ரீவைகுண்டத்திலே. அதாவது-பகவதநுபவ கைங்கர்யங்களுக்கு அநுரூபமாகையாலே மிகவும் விலக்ஷணமான தேசத்திலே யென்கை. என்றும் பேணியிருப்பரே. ஸர்வகாலமும் ஆதரத்தோடே வர்த்திக்கப்பெறுவர். அதவா, பேணுகையாவது- ஈச்வரனைப்பேணுகையாய், மங்களாசாஸநபரராய் வர்த்திக்கப் பெறுவரென்னவுமாம். ... ... ... ... ... ௫.

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

---

அடிவரவு—காசு மங்கோரு வுச்சியில் மாணிட மலமுடை நாடு
மன்னனில் நம்பி வுந்தை சீரணி தங்கையை.

ஆ. திருமொழி-௩-க்கு, பாட்டு-௩௭௬

---

(க) "நாதாநாமிவ ஸைவேந்த்ரோ குணாநாமகரோ மஹாந்."

| | |
|---|---|
| நமபுரம்— யமபுரத்தை | விதி— விசாரின் துன்ன |
| உறுக— இட்டேம்படியாக | நம்— நம்முடைய |
| நாந்தகம்— நந்தகவாளை | புருடோத்தமன்— புருஷோத்தமனுக்கு |
| | நகர்— வாஸஸ்தாநமாம். |

வ்யா. நான்காம்பாட்டு. இமையவ ரிறுமாந்திருந்தகாலை. இந்த்ராதி தேவர்கள் ப்ரதிபக்ஷபயமற்று மார்விட்டு ஸர்வஜ்ஞர்களும் பார்த்து கர்வோத்தராயிருந்து ராஜ்யம் பண்ணும்படியாக. எற்ுவந்திதப்ராதி. அவர்கள் ஜீவிக்கிறதுகண்டு பொறுக்கமாட்டாமல் அழியச் செய்வதாக ஏன்றுகொண்டுவந்து, அவர்கள் மேலும் அவர்களுக்கு ரக்ஷகனானவன் மேலும் எதிர்த்து பொருகிற அஸுராக்ஷஸ வேளையானது. நமபுரம்ஹுக நாந்தகம் விசிறும். யமபுரத்தை ப்ராபிக்கும்படியாக ஸ்ரீநந்தகமென்கிற திருவாளத்தை யுடைத்தான் * சொற்ற வொள்வாளினிசும். நம்புருடோத்தமன் நகர்தான். இப்படி ஆச்ரிதரக்ஷணம் பண்ணும்ஸ்வபாவனான நம்முடைய புருஷோத்தமனுடைய நகர்தான்.

இமவந்தமித்யாதி. ஹிமவானுடைய உச்சிதொடங்கி பெரிய கடலளவும், இரண்டு கரையிலுள்ள லோகத்தாரும் ஆஸ்ரித்துக்கொண்டு தீர்த்தமாட, கலையுடைப் பெருமைக் கங்கையின் கரைமேல். க்ஷமாவத்தையால் வந்த பெருமையையுடைத்தான கங்காதீரத்தில், அதாவது- ஸர்வலோகரும் பாபக்ஷயார்த்தமாக வந்து தன்னுடைய ஜலத்திலே அவகாஹித்தால் அவையெல்லாவற்றையும் பொறுத்து அவர்களைப் பரிசுத்தராக்கிவிடும் பெருமையைச் சொல்லுகிறது. கண்டமென்னும் கடிநகரே. ... ... ... ச

மூ.—உழுவதோர்படையு முலக்கையும்வில்லு மொண்சுடராழியுஞ் சங்கும்
மழுவொடுவாளும் படைக்கலமுடைய மால்புருடோத்தமன் வாழ்வு
எழுமையுங்கூடி யீண்டியபாவ மிறைப்பொழு தளவினிலெல்லாங்
கழுவிடும்பெருமைக் கங்கையின் கரைமேற்கண்டமென்னும் கடிநகரே. ரு.

பதவுரை.

| | |
|---|---|
| எழுமையும்— ஏழுஜன்மங்களிலும் | ஒண்— அழகிய |
| கூடி— கூடி | சுடர்— தேஜஸ்ஸை உடைத்தான |
| ஈண்டிய— திரண்ட | ஆழியும்— திருவாழியையும் |
| பாவம் எல்லாம்— பாவங்களை யெல்லாம் | சங்கும்— ஸ்ரீபாஞ்சஜன்யத்தையும் |
| இறைப்பொழுதளவினில்- க்ஷணகாலத்திலே | மழுவொடு வாளும்—கோடாரியையும் ஸ்ரீநந்தகவாளையும் |
| கழுவிடும்— கழுவிவிடாநிற்கிற | படைக்கலம் உடைய- ஆயுதமாகவுடையனும் |
| பெருமை—பெருமையையுடைய [கங்-; கங்கையின்கரைமேல் கண்டம் என்னும்கடி- | மால்— ஸர்வேச்வரனை |
| உழுவதோர் படையும்— கலப்பையையும் | புருடோத்தமன்— புருஷோத்தமனுக்கு |
| உலக்கையும்— உலக்கையையும் | வாழ்வு— வாஸஸ்தாநமாம். |
| வில்லும்— ஸ்ரீசார்ங்கத்தையும் | |

வ்யா. ஐந்தாம்பாட்டு. உழுவதோர்படையும். கலப்பையும். உலக்கையும். முஸலமும். வில்லும். ஸ்ரீசார்ங்கமும். ஒண்சுடராழியும். அழகிய தேஜஸ்ஸையுடைத்தான திருவாழியும். சங்கும். ஸ்ரீபாஞ்சஜன்யமும். மழுவொடுவாளும். பரசுவும், நந்தகமும். படைக்கல

முடைய. இவற்றை ஆயுதமாகவுடைய. மால்புருடோத்தமன் வாழ்வு ஆச்ரிதவிரோதிநிர ஸநஸாதநங்களான இவற்றையுடையனுன தானே தனக்குப் பெருமையாயிருக்கும் புருஷோத்தமனுக்கு ப்ராப்யமான ஸ்த்தலம்.

எழுமையுங்கூடி யீண்டியபாவம்-எல்லாம். அநேகஜந்மங்கூடித்திரண்ட பாபங்களெல்லாவற்றையும். இறைப்பொழுதளவினில் கழுவிடும்பெருமைக் கங்கையின் கரைமேல். தன்னுடைய ஜலத்திலே அவகாஹித்தவர்களுக்கு க்ஷணகாலமாத்ரத்திலே கழுவி விடாநிற்கும் பெருமையையுடைத்தான கங்கையினுடைய கரையின்மேல். கண்டமென்னும் கடிநகரே. ... ௬.

ரு.—தலைப்பெய்துகுமுறிச் சலம்பொதிமேகஞ் சலசலபொழிந்திடக் கண்டு
மலைப்பெருங் குடையால் மறைத்தவன் மதுரைமால்புருடோத்தமன்வாழ்வு
அலைப்புடைத்திரைவா யருந்தவமுனிவ ரவபிரதங்குடைந்தாடக்
கலப்பைகள் கொழிக்கும் கங்கையின்கரைமேற் கண்டமென்னுங் கடிநகரே. ௭.

பதவுரை.

அலைப்பு உடை— கரைபெயரா நின்றுள்ள
திரைவாய்— அலையினிடத்திலே
அரு— அரிய
தவம்— தபஸ்ஸுக்களை யுடையருய்
முனிவர்— மநநசீலராயிருக்குமவர்கள்
அவபிரதம் குடைந்தாட— அவப்ருதஸ்நாநம்பண்ண
(அத்தாலே,)
கலப்பைகள்— யாகபூமியிலுள்ள கலப்பை முதலிய கருவிகளெல்லாம்
கொழிக்கும்- தள்ளிக்கொண்டுபோகாநிற்கிற
கங்கையின் கரைமேல் கண்டம்
என்னும் கடிநகர்-;
சலம்— ஜலத்தை
பொதி— பொதிந்துகொண்டிராநின்ற
மேகம்— மேகங்களானவை [விட்டு
தலைப்பெய்து- (திருவாய்ப்பாடியிலே)வந்து
குமுறி— இடித்து முழக்கி
சல சல— சளசளவென்று
பொழிந்திட— வர்ஷிக்க
கண்டு— கண்டு
மலை— கோவர்த்தநகிரியாகிற
பெரு— பெரிய
குடையால்— குடையாலே
மறைத்தவன்—ஒருவன்மேல் ஒருதுளிவிழாதபடி மறைத்தவனும்
மதுரை— ஸ்ரீமதுரையில்
மால்— வ்யாமுக்தனுன
புருடோத்தமன்— புருஷோத்தமனுக்கு
வாழ்வு— வாஸஸ்தாநமாம்.

வ்யா. ஆரம்பாட்டு, தலைப்பெய்திற்யாதி. சலம்பொதிமேகம்-தலைப்பெய்து குமுறி. இந்த்ரன் ஏவற்படியே ஸமுத்ரம் தரைபரம்படி ஜலத்தையெல்லாம் தன்பக்கலிலே பொதிந்துகொண்ட மேகங்களானவை திருவாய்ப்பாடியிலே வந்து விட்டு, கேட்டவர்கள் குடல் குழம்பும்படி இடித்து முழக்கி. தலைப்பெய்கை - விட்டுகை. சலசலபொழிந்திட. சளசளவென, குடமிட்டுச்சொரிந்தாற்போலே வர்ஷிக்க. சளசளவென்கிறது - அநுகாரத்வனி. கண்டு. மேகங்களினுடைய பகைப்பையும், திருவாய்ப்பாடியிலுள்ளார் எளிமையையுங்கண்டு. மலைப்பெருங்குடையால் மறைத்தவன். மலையாகிற பெரிய குடையாலே, ஒருதுளி ஒருகல் ஒரு இடி என்கிற இவை ஒருவர்மேலேவிழாதபடி மறைத்தவன். மதுரைமால், விரோதியான கம்ஸனை யழியச்செய்து மாதாபிதாக்கள்விலங்கையும்விடுத்து உக்ரஸேநனை அபிஷேகம்பண்ணி அங்குள்ளார்த்தமாயுள்ளவர்களெல்லாரையும்வாழ்வித்து நோக்கிக்கொண்டு போரும்படி திரு

திலே நின்று தன்மேலே படர்ந்துவந்த மத்தகஜமான குவலயாபீடத்தை ச்ருங்கபங்கம் பண்ணி. மேலிருந்தவன்தலைசாடி. கொம்புமுறிந்து தளர்ந்து விழுந்ததை கௌரபலத்தாலே எழுப்பி அதின்மேலேயிருந்து நடத்திக்கொண்டுவந்த பாகனுடைய தலையை அந்த ஆனைக் கொம்பாலே சிதறவடித்து. மற்போருக்கு ஆனையின் கொம்பையும் கையிலே கொண்டு உள்ளே புகுந்தவளவிலே அந்த செருக்குப் போரும் வந்தெதிர்ந்த சாணூரமுஷ்டிகரான மல்லர் குடல்கள் சொரிந்துவிழும்படியாக அவர்களோடே பொருது. எழுப்பாய்ந்தரைப்பினொயுதைத்த. அனந்தரம், கம்ஸனிருக்கிற மஞ்சத்தின் முற்றவெளியிலேசென்று (க) '[illegible]' என்கிறபடியே உயர்ந்தமஞ்சத்திலே யிருக்கிறவனைக்கண்டு அவனிருக்கிறவிடத்திலே சென்றுகுதித்து, ராஜாவாய்க்கொண்டு அபிஷேகமும் தானுமாயிருக்கிறவனை, (உ) "[illegible]" என்கிறபடியே அபிஷேகத்தைத்தட்டிப் போகட்டு மயிரைப்பிடித்திழுத்து மஞ்சத்துக்குக் கீழே தள்ளி அவன்மேலே குதித்துத் திருவடிகளாலே உதைத்த. மால்புருடோத்தமன்வாழ்வு, இப்படி ஆச்சர்யமான கம்ஸனை நிரஸித்த பெருமையையுடையனான புருஷோத்தமனுக்கு அபிமதமான தேசம்.

அற்புதமுடைய ஐராவதமதமும். ஆச்சர்யமான ரூபசேஷ்டிதாதிகளையுடைய ஐராவதத்தினுடைய மதஜலமும். அவரிளம்படியரொண்சாந்தும். ஸ்வர்க்கவாஸிகளான தேவர்களுக்கு அபிமதைகளாய், அந்தப்படியுள்ளவளவும் யௌவநம் குலையாத வடிவையுடையரான தேவஸ்த்ரீகள் தங்களுக்கு அலங்காரமாகவணிந்த சாந்தும். கற்பகமலரும். அவர்கள் குழலில் சொருகின கற்பகப் பூக்களும். கலந்திழிகங்கை. இவற்றை வெள்ளம் சேர்த்துக் கொண்டு இழியாநிற்கிற கங்கையினுடைய கரைமேல். கண்டமென்னும் கடிநகரே. ... ௭.

மூ.—திரைபொருகடல்சூழ் திண்மதிட்டுவரைவேந்து தன்மைத்துனன்மார்க்காய்
அரசினையவிய வரசினையருளு மரிபுருடோத்தமனமர்வு
நிரைநிரையாக நெடியனயூபம் நிரந்தரமொழுக்குவிட்டிரண்டு
கரைபுரைவேள்விப் புகைகமழ்கங்கைக் கண்டமென்னும் கடிநகரே. ௮.

பதவுரை.

நிரை நிரை ஆக— ஓரோரொழுங்காய்
நெடியன— நெடியவையாயிருந்துள்ள
(பசுக்கள் கட்டப்படுகிற)
யூபம்— யூபஸ்தம்பங்களானவை
நிரந்தரம்— இடைவிடாமல்
ஒழுக்குவிட்டு— நெடுகச்சென்றிருப்பதாய்
வேள்வி புகை— யாகதூமமானது
இரண்டுகரைபுரை— இரண்டு கரையு மொத்து
கமழ்— கந்தியாநின்றுள்ள
கங்கை— கங்கைக்கரையில்
கண்டமென்னும் கடிநகர்—;
திரைபொரு— அலைமோதாநின்றுள்ள
கடல்— கடலாலே
சூழ்— சூழப்பட்ட
திண்— திண்ணிதான
மதிள்— மதிளையுடைத்தாயிருக்கிற
துவரை— ஸ்ரீத்வாரகைக்கு
வேந்து— அரசனான கண்ணன்

(க) "துங்கமஞ்சஸ்தமஸ்திதம்." (உ) "கேசேஷ்வாக்ருஷ்யவிகளத்கிரீடமவநீதலே- ஸகம்ஸம்பாதயாமாஸ தஸ்யோபரிபபாதச"

இடிய— இடிந்துவிழவும்
தலைப்பற்றி — பாறைகளினுடைய தலையளவும் செல்லக்கிளம்பி
கரை — கரையில் நிற்கிற
மரம் — மரங்களை
சாடி — மோதி முறித்தும்
கடல்— ஒன்றுமும் கலங்காத கடலுங்கூட
கலங்க— கலங்கும்படி
கடுத்து— வேகமாய்க்கொண்டு
இழி— இழியாநின்றுள்ள
கங்கை— கங்காதீரத்தில்
கண்டம் என்னும் கடிநகர்—;
வட திசை— உத்தரதிக்கிலுள்ள
மதுரை— ஸ்ரீமதுரையும்
சாளக்கிராமம்— ஸ்ரீஸாளக்ராமமும்
வைகுந்தம்— ஸ்ரீவைகுண்டமும்
துவரை— ஸ்ரீத்வாரகையும்
அயோத்தி— திருவயோத்யையும்
இடம் உடை— இடமுடைத்தாயிருந்துள்ள
வதரி— ஸ்ரீபதரிகாச்ரமமுமாகிற இவற்றை
இடம் ஆக உடைய— வாஸஸ்தானமாக வுடையவனும்
எம்— எமக்கு ஸ்வாமியான
புருடோத்தமன் — புருஷோத்தமனுடைய
இருக்கை— இருப்பிடமாம்.

வியா. ஒன்பதாம்பாட்டு. வடதிசைமதுரை. வடக்குதிக்கில் மதுரை. தென்திசை மதுரை உண்டாகையாலே விசேஷிக்கிறது. சாளக்கிராமம். புண்யக்ஷேத்ரங்களில் ப்ரதானமாக எண்ணப்படும் ஸ்ரீஸாளக்ராமம். வைகுந்தம். அப்ராக்ருதமாய் நித்யவாஸஸ்தலமான ஸ்ரீமத்வைகுண்டம். துவரை. * பதினாறாயிரவர் தேவிமார்பணிசெய்ய மணவாளராய் வீற்றிருந்த ஸ்ரீமத்த்வாரகை. அயோத்தி. "அயோத்தியர்க்கதிபதி" என்கிறபடியே ராமாவதாரஸ்தலமாய் அத்யந்தாபிமதமாயிருந்துள்ள திரு அயோத்யை. இடமுடைவதரி. நர நாராயணரூபியாய்க்கொண்டு திருமந்த்ரத்தை வெளியிட்டருளி உகப்புடனே யெழுந்தருளியிருக்கும் ஸ்தலமாய், இடமுடைத்தாயிருந்துள்ள ஸ்ரீபதரி. இடமுடைய. இவற்றை வாஸஸ்தானமாக வுடையவனை. எம்புருடோத்தமனிருக்கை. ஆச்ரிதரான நமக்கு இனியவனான புருஷோத்தமனுடைய இருப்பிடம்.

தடவரையிற்பாறி. பகீரதன் தபோபலத்தாலே இறக்கிக்கொண்டுவருகிறபோது வந்திழிகிற வேகத்தைச் சொல்லுகிறது.

தடவரையதிர. உயர்ந்த சிகரத்தில் நின்றும் வந்திழிகிற வேகத்தாலே மந்தராதிகளான பெரிய மலைகள் சலிக்கும்படியாக. தரணிவிண்டிடிய. பர்வதத்தில் நின்றும் பூமியிலே குதிக்கிறவளவில் பூமி விண்டு இடிந்துவிழ. தலைப்பற்றிக்கரைமரஞ்சாடி. வ்ருக்ஷங்களினுடைய தலையளவும் செல்லக் கிளம்பி, கரையில்நிற்கிற மரங்களை மோதிமுறித்து. கடலினைக் கலங்கக்கடுத்திழி கங்கைக்கண்டமென்னும் கடிநகரே. ஒன்றுமும் கலங்காத கடலும் கலங்கும்படி வேகித்துக்கொண்டு இழியாநின்ற கங்கையினுடைய கரைமேலே, கண்டமென்னும் கடிநகரே. ... ... ... ... ... ௮.

மூ.—மூன்றெழுத்ததனை மூன்றெழுத்ததனால் மூன்றெழுத்தாக்கி மூன்றெழுத்தை
ஏன்றுகொண்டிருப்பார்க் கிரக்கநன்குடைய வெம்புருடோத்தமனிருக்கை
மூன்றடிநிமிர்த்து மூன்றினிற்றோன்றி மூன்றினில் மூன்றுருவானான்
கான்தடம்பொழில்சூழ் கங்கையின் கரைமேல் கண்டமென்னும் கடிநகரே. ௯.

பதவுரை.

கான்— நன்றாற்றம் கமழாநின்றுள்ள
தடம்— பெரிய
பொழில்— பொழில்களாலே
சூழ்— சூழப்பட்டிருப்பதாய்

அவதாரணமாகவமாய்க்கொண்டு அந்த சேஷித்வத்தினுடைய அனந்யார்ஹதையை ப்ரதிபாதிக்கையாலும், மகாரமானது (க) "ம-த்ருதோ" என்கிற தாதுவிலே நிஷ்பந்நமாய்க்கொண்டு ஜ்ஞாநவாசியுமாய், அனந்யார்ஹ சேஷத்வத்துக்கு ஆச்ரயமான ஆத்மாவினுடைய தேஹாதிரிக்தாதிவிஷ ப்ரதிபாதிக்கையாலும், அதநாத்யபரும் நமக்குத் தஞ்சமான அர்த்தத்தையே சொல்லுகிறதென்று தங்கள் நெஞ்சில் எப்போதும் அநுஸந்தித்திருக்கை. இரக்கம் ஸர்வுடையவெம்புருடோத்தமனிருக்கை. இவர்களளவிலே தன்பேறாக க்ருபை பண்ணுமவனும் எனக்கு ஸ்வாமியான புருஷோத்தமனுடைய வாஸஸ்தானம்.

மூன்றடி நிமிர்த்து. இந்தப்ரணவத்தான் (உ) "ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்ம" என்கிறபடியே பதத்ரயாத்மகமான திருமந்த்ரத்தில் ப்ரதமபதமாகையாலே இத்தோடே கூட மேலிரண்டு பதத்தையும் கூட்டி மூன்று பதமாக வளர்த்து. மூன்றினிற்றோன்றி. அந்த மூன்று பதத்திலும் ஆத்மாவினுடைய அனந்யார்ஹசேஷத்வம் அனந்யசரணத்வம் அனந்யபோக்யத்வமாகிற ஆகாரத்ரயத்தையும் தோன்றுவித்து. "தோன்றி" என்றது - தோன்றுவித்து என்றபடி. மூன்றினில் மூன்றுருவானான். பதத்ரய ப்ரதிபாத்யமான சேதநனுடைய ஆகாரத்ரயமும் விஷயமாக தத்ப்ரதிஸம்பந்தியாய், தானும் சேஷித்வ சரண்யத்வ ப்ராப்யத்வங்களாகிற ஆகாரத்ரயத்தையு முடையனானவன். இம்மந்த்ரத்தை பதத்ரயாத்மகமாய் சேதநனுடைய ஆகாரத்ரயத்தையும் தன்னுடைய ஆகாரத்ரயத்தையும் ப்ரதிபாதிக்கும்படி அவன் ¶ அடியிலே உண்டாக்கி வைத்தான். ஸர்வஜ்ஞனையாலே இவை யெல்லாவற்றையும் அவன் செய்யாக வருளிச் செய்கிறார். கான் தடம்பொழில்சூழ் கங்கையின் கரைமேல். "கான்" என்று நாற்றம். தடம்பொழில் - பெருமை. நறுநாற்றத்தை யுடைய பெரிய பொழில்களாலே சூழப்பட்டிருப்பதாய், கங்கையினுடைய கரையிலேயான. கண்டமென்னுங்கடிநகரே....௧௦.

அ. நிகமத்தில், இத்திருமொழி கற்றார்க்கு பலஞ்சொல்லித் தலைக்கட்டுகிறார். *

மூ.—பொங்கொலி கங்கைக்கரைமலி கண்டத்துறை புருடோத்தமனடிமேல்
வெங்கலிநலியா வில்லிபுத்தூர்க்கோன் விட்டுசித்தன் விருப்புற்றுத்
தங்கியவன்பாற் செய் தமிழ்மாலை தங்கிய நாவுடையார்க்குக்
கங்கையிற்றிருமால் கழலிணைக்கீழே குளித்திருந்த கணக்காமே. ௧௧.

பதவுரை.

| | |
|---|---|
| பொங்கு—ஜலத்தின் கொழிப்பாலுக்கதிளர்த்தியை யுடைத்தாய் | புருடோத்தமன் – புருஷோத்தமனுடைய |
| ஒலி— கோஷத்தையுடைத்தான | அடிமேல்— திருவடிகளிலே |
| கங்கை கரை – கங்கையின்கரையிலேயாய் | வெம்— கொடிய |
| மலி— எல்லாப்படியாலுமுண்டான ஏற்றத்தையுடைத்தாயிருக்கிற | கலி— கலியால்வந்த |
| கண்டத்து — திருக்கண்டங்கடிநகரிலே | நலியா— நலிவொன்றில்லாத |
| உறை— நித்யவாஸம் பண்ணுகிற | வில்லிபுத்தூர் கோன் } ஸ்ரீவில்லிபுத்தூருக்கு நிர்வாஹகரான |
| | விட்டுசித்தன்– பெரியாழ்வார் |

(க) "மா - ஜ்ஞாநே" (உ) "ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்ம" ¶ கஎ-ம.

க்ருஷ்ணாவதார குணசேஷ்டிதங்களையும் அவதாராந்தர குணசேஷ்டிதங்களையும் கலப்பிலே அநுபவித்தவர்தாம் இவ்வவதாரகுணசேஷ்டிதங்களெல்லாம் ப்ரகாசிக்கும்படி உகந்தருளின நிலங்களிலே எழுந்தருளிநிற்கிற நிலைகளை யநுபவிக்கவேணுமென்று மாசை பிறந்து. ப்ரதமம், ஸமஸ்தக்ருஷ்ணாவதாரகுண சேஷ்டிதங்களெல்லாம் ப்ரகாசிக்கும்படி திருமலையிலே யெழுந்தருளிநிற்கிற அழகரையும், அவரிருங்காட்டில் ப்ராப்யத்தில் ஸமாநதியான திருமலை யாழ்வாரையு மநுபவித்து, பின்பு திருக்கோட்டியூரிலே நிற்கிற நிலையையும் அநுபவிக்கையிலே ப்ரவ்ருத்தரானவர்; அங்கேயெழுந்தருளி நிற்கிற நிலையில் தங்களுக்கு ஆதரணீயமன்றிக்கே அப்யாஸத்திலிற வம்மாரிகளை நிந்தித்தும், அந்நிலையின் வாஸிபதிந்து ப்ரவணராயநுபவிக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களை ச்லாகித்தும், இப்படி யிருந்தன்ன சேருக்கோடே கூடியநுபவித்து, தாம்நிந்தித்தவர்களையும் விடமாட்டாத பரமகர்ணையாலே அவர்களைக்குறித்து இரண்டு திருமொழியாலே பரோபதேசத்தைப்பண்ணி, மீளவும் உகந்தருளின நிலங்களிலே நிற்கிற நிலைய யநுபவிக்கையிலுள்ள வாசையாலே "வடதிசை மதுரை" இத்யாதிப்படியே அநேக தேசத்திலுண்டான விருப்பத்தையெல்லாம் பண்ணிக்கொண்டு திருக்கண்டங்கடிநகரிலே அவதாரகுண சேஷ்டிதங்கள் எல்லாம் ப்ரகாசிக்கும்படி எழுந்தருளிநிற்கிறபடியையும், அத்தேசவைலக்ஷண்யத்தையும் அநுபவித்து இனியராய் நின்றார்- இதில்; அவையெல்லாம்போலன்றிக்கே, "வடிவுடை வானோர் தலைவனே" என்றும், "கடலிடங்கொண்ட கடல்வண்ணா" என்றும், "கட்கிலீ" என்றும், "காருத்தா கண்ணனே" என்றும் சொல்லுகிறபடியே- பரத்வ நிலையிலுண்டான குணங்களெல்லாம் ப்ரகாசிக்கும்படி வர்த்திக்கிற ஸ்தலமாய், "பொங்கோதஞ் சூழ்ந்தபுவனியும்" இத்யாதிப்படியே உபயவிபூதியையும் தனிக்கோல் செலுத்துகிறதும் இங்கேயிருந்தே என்று தோற்றும்படி யிருப்பதாய் "மாலிருஞ்சோலை மணாளர் பள்ளிகொள்ளுமிடம்" என்றும், "பொன்னிசூழரங்கத்துள் முகிலவன் - திருமாலிருஞ்சோலைநின்றான்" என்றும், "பயின்றதரங்கம் திருக்கோட்டி" "தேனார் திருவரங்கம் தென்கோட்டி" என்றும் சொல்லுகிறபடியே முன்பு அநுபவித்த திருமலை திருக்கோட்டியூரில் நிலைகளுக்கு வேர்ப்பற்றான இடமுமாய், "ஆராமஞ்சூழ்ந்த அரங்கம்" என்கிறபடியே உகந்தருளின நிலங்களெல்லாம் பணிருக்கை என்னும்படி ஆச்ரிதரக்ஷணத்துக்கு ஏகாந்தமானவிடமென்று நித்யவாஸம் பண்ணுகிற ஸ்தலமான * திருவரங்கந்திருப்பதியிலே; "வன்பெருவானகம்" இத்யாதிப்படியே ஸகல தேசத்திலுள்ளாரும் உஜ்ஜீவிக்கும்படியாகவும், "தென்னாடும் வடநாடும் தொழநின்ற" என்றும், "மன்னரும் வந்தடிவணங்க" என்றும் சொல்லுகிறபடியே ஸகல தேசத்திலும் குடிபிறந்தவர்களெல்லாரும் வந்து அநுபவிக்கும்படியாகவும் ஆச்ரயிக்கும்படியாகவும், "அன்பொடு தென்திசை நோக்கி" என்கிறபடியே * மன்னுடைய விபீடணற்காய் மதிளிலங்கைத் திசைநோக்கி மலர்க்கண் வைத்து, "திருவாளனினிதாகத் திருக்கண்கள் வளர்கின்ற" என்கிறபடியே ஸ்ரீயஃபதியானவனால் வந்த பெருமை தோற்றத் திருவுள்ளத்திலுகப்புடனே கண்வளர்ந்தருளுகிற பெரியபெருமாள்பக்கலிலே, விசேஷித்து க்ருஷ்ணாவதாரகுணசேஷ்டிதங்களும் ராமாவதார குணசேஷ்டிதங்களும் அவதாராந்தரகுணசேஷ்டிதங்களுமெல்லாம் ஒருமடைசெய்து ப்ரகாசிக்கிறபடிகளை * திருவரங்க மதிளாய்ச்சென்று அநுபவியாநின்றுகொண்டு, அவர் தம்மிலுங் காட்டில் அவர் விரும்பிக் கண்வளர்ந்தருளுகிற தேசமே பரமப்ராப்யமாகையாலே அத்தேசத்தினுடைய வைபவத்தையும் பஹுமுகமாகப்பேசி அநுபவித்து ப்ரீதரானார் - இத்திருமொழியில்.

* * * * * * *

விருந்தை யளித்திருப்பார். வரும்விருந்தினை ரக்ஷித்துக்கொண்டிருப்பார். அதாவது தந்தாம் திருமாளிகையிலே எழுந்தருளின ஸ்ரீவைஷ்ணவர்களை, ஸ்வரூபாநுரூபமாக ஆதரித்து அமுது செய்யப்பண்ணுகை. சிறப்புடைமறையவர்வாழ். இப்படி வைதிககர்மாநுஷ்டாநத்தையும் பகவத்பாகவதஸமாராதநத்தையும் அநந்யப்ரயோஜநமாகச் செய்கையாகிற நன்மையையுடையராய், இதுக்கு உடலாக வேதார்த்தபர்யந்தத்தை யறிந்திருக்குமவர்கள், பெருமாளையநுபவித்துக்கொண்டு வாழாநிற்கிற திருவரங்கமென்பதுவே. ... ... ... ௨.

௩. மூன்றாம்பாட்டு. கரிக்கட்டையைப் பிள்ளையாக்கியும், பாண்டவர்களுடைய தேஹம் பாரதயுத்தத்தில் அழியாதபடி ரக்ஷித்தும் செய்தவன்வர்த்திக்கிற தேசமிதுவென்கிறார்.

௩.—மருமகன்றன் சந்ததியை யுயிர்மீட்டு மைத்துனன்மார்
உருமகத்தேவீழாமே குருமுகமாய்க் காத்தானூர்
திருமுகமாய்ச் செங்கமலந் திருநிறமாய்க் கருங்குவளைப்
பொருமுகமாய்நின்றலரும் புனலரங்க மென்பதுவே. ௩.

பதவுரை.

செங்கமலம்- செந்தாமரை மலரானது
திருமுகம் ஆய்— பெரியபெருமாள் திருமுகத்துக்குப் போலியாய்
கரு- கறுத்த
குவளை- உத்பலமானது
திருநிறம் ஆய்— அவருடைய திருநிறத்துக்குப் போலியாய்
பொரு- ஒன்றையொன்று எதிர்பொருகிற
முகம் ஆய் நின்று— முகத்தையுடைத்தாய்க் கொண்டு
அலரும்— அலராநின்றுள்ள
புனல்- நீர்வளப்பத்தையுடைய
அரங்கம் என்பது—;
மருமகன் தன் - மருமகனான அபிமந்யுவினுடைய
சந்ததியை- புத்ரனாய், கரிக்கட்டையாய்க் கிடந்த பரீக்ஷித்தின் சரீரத்தை
(திருவடிகளாலே ஸ்பர்சித்து,)
உயிர் மீட்டு— உயிர்பெறும்படி பண்ணி
மைத்துனன்மார்— மைத்துனன்மாரான பாண்டவர்களுடைய
உரு— சரீரமானது
மகத்து- பாரதயுத்தமாகிற யாகத்திலே
வீழாமே— விழுந்து நசித்துப் போகாமல்
குரு முகம் ஆய்— குருமுகமாய் நின்று (ஹிதோபதேசங்களைப்பண்ணி)
காத்தான்— ரக்ஷித்தவன் வர்த்திக்கிற
ஊர்— தேசம்.

வ்யா. மருமகனித்யாதி. மருமகனான அபிமந்யுவினுடைய புத்ரனான பரீக்ஷித்தின் ப்ராணனை மீட்டு. அதாவது- கரிக்கட்டையாய்ப்போனவனை (க) "பதிதே [illegible] [illegible] ।  [illegible] " என்றருளிச்செய்து, (உ) ' [illegible] । [illegible] " என்றபடியே திருவடிகளாலே சரீரத்தை எங்குமொக்க ஸ்பர்சித்து, மீளவும் உயிர் பெறுத்துகை. மைத்துனன்மாருருமகத்தே வீழாமே.

(க) "பதிதே ப்ரஹ்மசர்யம் ஸ்பர்சமயிலேதப்யது [illegible] - [illegible] [illegible]" (உ) " [illegible] - [illegible] [illegible]."

மைத்துனன்மாரான பாண்டவர்களுடைய தேரும் பாரதயுத்தமாகிற சமுத்ரத்திலே விழுந்து ஒழிந்துபோகாமே. மகம்-மஞ்சும். குருமுகமாய்க்காத்தான். குருமுகமாய்நின்று தூதோபதேசாதிகளைப் பண்ணி ரக்ஷித்தவன். இத்தால்- "எல்லாச்சேனையு மிருநிலத்து அவித்த" என்றபடியே உபயஸேனையிலும் பூபாரமானவர்களை எல்லாம் ஒழிப்பிப்பதாக ப்ரவர்த்திக்கப்பட்டதாய், க்ஷமையின்பாரம் நீக்குதற்கே வடமதுரைப் பிறந்தவனுடைய திருவுள்ளத்துக்கு உகப்பாக இருக்குமதானபோலே- பாரதயுத்தத்தை சமுத்ரமாக அருளிச்செய்தது. இதில் இவர்கள் விழுந்து ஒழியாமலிருந்தது- அடிபெயிடித்து இவர்களை அபிமானித்துக்கொண்டு குருமுகமாய் நின்று, வஸ்த்ராஸனாதிகளைத்தொடு புஷ்பதான ஸலத்தொடு வாசியற ஒதுக்கதையே உபயோகித்துக்கொண்டு நியமங்களிலே போகாமல் விலக்கி நல்வழிகளிலே நடத்தி இப்படி அபிமானியாய் நின்று ரக்ஷித்துக்கொண்டு போருகையாலே என்று இவ்வர்த்தத்தை வெளியிட்டருளினாராய்த்து. ஊர். இப்படி குருமுகமாய் நின்று பாண்டவர்களை ரக்ஷித்தவன், தன்னபிமானத்திலே ஒதுங்கினவர்களெல்லாரையும் நியமழிபோய் ஒழியாமல் ரக்ஷிக்கைக்காக நித்யவாஸம் பண்ணுகிற தேசம்.

திருமுகமாய்ச் செங்கமலம். செங்கமலமானது, பெரிய பெருமாளுடைய திருமுகத்துக்குப் போலியாய். திருநிறமாய்க்கருங்குவளை. கருங்குவளையானது அவனுடைய திருநிறத்துக்குப் போலியாய். பொருமுகமாய் நின்றலரும் புனலரங்கமென்பதுவே. பரபாகத்தாலே ஒன்றுக்கொன்று எதிர்பொருகிற முகத்தையுடைத்தாய்க்கொண்டு விகஸிக்கும்படியான ஜலஸம்ருத்தியையுடைய அரங்கமென்பதுவே. ... ... ... ... ... ... ௮.

அ. ஒன்பதாம்பாட்டு. கைகேயிவசமடியாக நாட்டைவிட்டுக் காட்டிலேபோய் கண்டகரான ராக்ஷஸரை நிரஸித்தவன் வர்த்திக்கிற தேசமிதுவென்கிறார்.

மூ.—கன்றொழுத்தை செருவுரைப்பக் கொடியவள்வாய் கடியசொற்கேட்
டீன்றெடுத்த தாயரையு மிராச்சியமு மாங்கொழியக்
கான்றொடுத்த நெறிபோகிக் கண்டகரைக் களைந்தானூர்
தேன்றொடுத்த மலர்ச்சோலைத் திருவரங்கமென்பதுவே. ௯.

பதவுரை.

தேன் தொடுத்த— தேன்மாறாத
மலர்— மலர்களையுடைய
சோலை— சோலைகளாலே சூழப்பட்ட
திரு அரங்கம் என்பது—;
கன்— கடியதாகிற
தொழுத்தை— அடியாட்டியானவள்
செரு— திருவபிஷேக மஹோத்ஸவத்துக்கு அழிவான விரோதச்சொற்களை
உரைப்ப— சொல்ல
(அத்தையுட்கொண்டு பெருமாளைக் காட்டேற எழுந்தருளச்சொன்ன)
கொடியவள்— கொடியாளான கைகேயியின்
வாய்— வாயிலுண்டான
கடிய சொல் கேட்டு— வெட்டிய சொல்லைக் கேட்டு
ஈன்று எடுத்த தாயரையும்— பெற்றதாயான ஸ்ரீகௌஸல்யையையும்
இராச்சியமும்— ராஜ்யத்தையும்
ஆங்கு ஒழிய— அங்கேவிட்டு
கான் தொடுத்த— காடு அடர்ந்திருக்கிற
நெறி— வழியே
போகி— ஸ்ரீதண்டகாரண்யத்துக்கு எழுந்தருளி
கண்டகரை— கண்டகராய் துஷ்டராயிருக்கிற ராக்ஷஸரை
களைந்தான்— நிரஸித்தவன் வர்த்திக்கிற
ஊர்— தேசம்.

பகவத்ப்ரவணமான விஷயங்களினுடைய ரூபகுணங்களும் உத்தேச்யமென்று இருக்குமவ ராகையாலேயிறே இவற்றினுடைய சிறகை வர்ணித்துக்கொண்டருளிச்செய்கிறார். எம்பெரு மான் குணம்படி. ஸர்வஸ்வாமியான பெரியபெருமாளுடைய, கீழ்ச்சொன்ன ஆச்ரிதரக்ஷ ணங்களை துண்டான திவ்யகுணங்களை ப்ரீதிப்ரகர்ஷத்தாலே பாடி. மல்லிகை வெண்சங் கூதும். மல்லிகைப்பூவாகிற வெள்ளிய சங்கை வதாகிற்கும். அதாவது-ஸாயங்கால புஷ்ப மான மல்லிகையினுடைய பூவை அது இருந்து வதும்போது, அந்தப்பூவானது அலரு வதுக்கு முன்பு தலைகுனிந்து மேல்பருத்து காம்படிசேர்ந்து வெளுத்த நிறத்தையுடைத் தாய் சங்குபோலே. யிருக்கையாலே, வெள்ளிய சங்கை இருந்து வதுமாபோலே யிருக்கு மாய்த்து. அத்தைப்பற்ற இப்படி யருளிச்செய்கிறார். மதிளரங்க மென்பதுவே. இப்படி யிருந்துள்ள சோலைச் சிறப்பை யுடைத்தாய் அரணுடைப்போரும்படியான திருமதிளையுடைத் தாயிருக்கிற திருவரங்கமென்பதுவே. ... ... ... ... ... ... அ.

அ. ஒன்பதாம்பாட்டு, அநேக த்ருஷ்டாந்தமிட்டுச் சொல்லவேண்டும்படியான விக்ரஹ லாவண்யத்தை யுடையனும் ஆச்ரித வ்யாமுக்தனுமானவன் வர்த்திக்கிற தேச மிதுவென்கிறார்.

> மூ.—குன்றுடு கொழுமுகில்போற் குவளைகள்போற் குரைகடல்போல்
> நின்றாடு கணமயில்போல் நிறமுடைய நெடுமாலூர்
> குன்றாடு பொழில்நுழைந்து கொடியிடையார் முலையணவி
> மன்றூடு தென்றலுலா மதிளரங்க மென்பதுவே ௯.

பதவுரை.

தென்றல்— தென்றல் காற்றானது
குன்று— மலைபர்வதத்திலுள்ள
பொழிலூடு— பொழில்களினிடையிலே
நுழைந்து— நுழைந்து
கொடி— வஞ்சிக்கொடிபோன்ற
இடையார்— இடையையுடையாரான ஸ்த்ரீகளுடைய
முலை— கலவைச்சாந்தணிந்த முலைகளை
அணவி— ஸ்பர்சித்து
மன்றூடு— நாற்சந்திகளினூடே
உலா— உலாவா நின்றுள்ளதாய்
மதிள்— மதிள்களையுடையதுமான அரங்கம் என்பது—;
கொழு— கழுத்தே கட்டளையாக நீரைப் பருகின
குன்று ஆடு— மலையினுச்சியிலே சார்ந்த
முகில்போல்— மேகம்போன்ற குளிர்த்தியை யுடையனும்
குவளைகள் போல்— கருநெய்தல்போன்ற பரிமளப்பையுடையனும்
குரை— கோஷியா நின்றுள்ள
கடல்போல்— கடல்போன்ற காம்பீர்யத்தை யுடையனும்
நின்று ஆடு— களிப்பாலேநின்று ஆடா நின்றுள்ள
கணம் மயில் போல்— மயில்திரள்போன்ற புகரையுடையனும்
நிறம் உடைய— அழகையுடையனுமான
நெடுமால்— ஆச்ரிதவ்யாமுக்தனான எம்பெருமான் வர்த்திக்கிற
ஊர்— தேசமாம்.

வ்யா. குன்றுடு கொழுமுகில்போல். கழுத்தே கட்டளையாக நீரைமுகந்து; போகமா ட்டாதே மலையின் உச்சியிலேசார்ந்தமேகம்போலேயும். குவளைகள்போல், கண்ணுக்கெழுகை

துதுபரிக்கும் குவளைகள்போலேயும். திரைகடல்போல். அதுபரித்து முடிக்கவொண்ணு தமைக்கு சோபிக்கிற கடல்போலேயும். இன்றுகேணையிலேபோல். வைத்தகன் வாங்கவொண்ணுமைக்கு ஹர்ஷத்தாலே நின்று ஆடாநின்றுள்ள மயில்திரள்போலேயும். நிறமுடைய. வடிவழகையுடைய. நிறம்- அழகு. அன்றிக்கே, திருமேனிநிறந்தன்னையே சொல்லிற்றா போது, கண்டவர் மயிர்க்குச்செறிபடியான குளிர்த்திக்கு-நீர்கொண்டெழுந்த காளமேகத்தின் நிறத்தையும், செப்புக்கு-குவளைப்பூவின் நிறத்தையும், இருட்சிக்கு-கடலின் நிறத்தையும், புகர்ப்புக்கு - மயில் கழுத்தின் நிறத்தையும் த்ருஷ்டாந்தமாகச் சொல்லிற்றென்று நியமித்துக்கொள்ளவேணும். ஒன்றே உபமானமாகப் போருவதல்லாமையாலே அங்குமிங்கும் கதிர்பொறுக்கிச் சொல்லுகிறார். நேமோஹர். (அ) " ஸதூர நர்ப்பு " என்கிற படியே-இவ்வடிவழகை ஆச்ரிதர்க்கு முற்றூட்டாகக்கொடுக்கும் கிருஷிய வ்யாமோஹத்தையுடையவன் நித்யவாஸம்பண்ணுகிறதேசம்.

தென்றிப்பாறி. " தென்னன்பொதியில் செழும் சந்தின்தாதுனர்ந்து " என்கிறபடியே மலயபர்வதத்தில் சந்தன வ்ருக்ஷங்களையுடைய பொழில்களூடே நுழைந்து அங்குண்டான பூக்களின் தாதுகளை அளைந்து அபிமதமான பரிமளத்தைக் கொண்டுகொண்டு போந்து. கோடியிடைப்பார் முலையணவி. சேர்மைக்கும் நடக்கைக்கும் கொடிபோலேயிருக்கும் இடையையுடையரான ஸ்த்ரீகளுடைய சந்தன குங்குமாத்யலங்கார யுக்தமான முலைகளை ஸ்பர்சித்து அங்குண்டான பரிமளத்தையும் அளைந்துகொண்டுபோந்து. மன்றூடே தென்றலுலா. அது சைபுகுந்த கர்வத்தாலே வெளிநிலத்திலே புறப்பட்டு மன்றுகளினூடே தென்றலானது உலாவாநிற்கும். மதிளரங்கமென்பதுவே. இப்படி தென்றலுலாவுவதமாய் அரணுகப்போரும் மதிளையுடைத்தானதுமான அரங்கமென்பதுவே. ... ... ௯.

அ. நிகமத்தில், இத்திருமொழியைக்கொண்டு பெரியபெருமாளை யேத்துமவர்கள் விஷயத்தில் தமக்குண்டான சேஷத்வாபிபத்தியை யருளிச்செய்கிறார்.

மூ—பருவரங்க ளவைபற்றிப் படையாலித் தெழுந்தானைச்
செருவரங்கப் பொருதழித்த திருவாளன் திருப்பதிமேல்
திருவரங்கத் தமிழ்மாலை விட்டுசித்தன் விரித்தனகொண்டு
இருவரங்க மெரித்தானை யேத்தவல்லா ரடியாரே. ௰.

பதவுரை.

பரு— பெரிய
வரங்கள் அவை பற்றி-ப்ரஹ்மாதிகள் கொடுத்த வரங்களை பலமாகக்கொண்டு
படை ஆலித்து எழுந்தானை-யுத்தஸந்நத்தனாக கர்வித்துக் கிளர்ந்துவந்த ராவணனை
செரு— யுத்தத்திலே
அரங்க— அவனபிமானமெல்லாமழியும்படி
பொருது— போர்செய்து
அழித்த · அழித்துப்போகட்ட.
திரு ஆளன்—ஸ்ரீயபதியுடையவனுடைய
திரு பதி மேல்— திருப்பதிவிஷயமாக
விட்டுசித்தன்— பெரியாழ்வார் [யாய்
விரித்தன—விஸ்தரித்து அருளிச்செய்தன.
திரு அரங்கம்— பாட்டுதோறும் ' திருவரங்கம்' என்கிற திருநாமத்தையுடைத்தாய்

தத்விஷயத்திலும் ததீயவிஷயமே உத்தேச்யமென்னும் ப்ரதிபத்தியாலே அவர் விரும்பி வர்த்திக்கிற திவ்யதேசமான திருவரங்கம் திருப்பதியினுடைய வைபவத்தை பஹுமுகமாகப் பேசி யநுபவித்தார்; இப்படி யநுபவித்திருக்கச்செய்தேயும் இவ்வளவில் தமக்கு பர்யாப்தி பிறவாமையாலே மீளவும் ததநுபவிஷயாநுபவதத்பரராய், முன்பு அநுபவித்தப்ரகாரமன்றியே முகபேதேந பெரிய பெருமாளுடைய திவ்யசேஷ்டித விசேஷங்களை அநுபாதேந அநுபவித்து வித்தராக இன்றுமெல்லு தத்ஸம்பந்தியாய பரமப்ராப்யமான திருவரங்கம் திருப்பதியினுடைய வைபவ விசேஷங்களையும், முன்பு உக்தமான ப்ரகாரமன்றிக்கே ப்ரகாராந்தரேண பேசி யநுபவித்து ப்ரீதராய்ச் செல்லுகிறார்- இத்திருமொழியில். ... *

அ. முதற்பாட்டு. மீண்டு எழுந்தருளுமதற்கு விச்வாஸமாக ஸ்ரீபரதாழ்வானுக்குத் திருவடிநிலைகளைக் கொடுத்துப்போய், தேவர்களுக்கு விரோதியான ராவணாதிகளை நிரஸித்து மீண்டுவந்து லோகத்தையாண்டருளினவன் வர்த்திக்கிற தேசமிதுவென்கிறார்.

ம—ரவடியைத்தம்பிக்கு வான்பணயம் வைத்துப்போய் வானோர்வாழச்
செருவுடையதிசைக்கருமந் திருத்திவந்துலகாண்ட திருமால்கோயில்
திருவடிதன்றிருவுருவுந் திருமங்கைமலர்க்கண்ணுங் காட்டிநின்று
உருவுடையமலர்நீலங் காற்றாட்டவோசலிக்கு மொளியரங்கமே. க.

பதவுரை.

உரு உடைய— அழகையுடைய
நீலம் மலர்— கருநெய்தல் மலரானது
திரு அடிதன்— பெரிய பெருமாளுடைய
திரு— அழகிய
உருவும்— திருமேனி நிறத்தையும்
திருமங்கை— பெரிய பிராட்டியாருடைய
மலர்— விகஸிதமான
கண்ணும் — திருக்கண்களின் நிறத்தையும்
காட்டி நின்று—ப்ரகாசிப்பித்து நின்றதாய்
காற்று ஆட்ட— காற்று அசைக்க
ஓசலிக்கும்— அசையா நின்றுள்ள
ஒளி— ஒளியையுடைத்தான
அரங்கம்— திருவரங்கமானது;-
தம்பிக்கு — (சித்ரகூடத்தில் ப்ரபத்தி பண்ணின) தம்பியான ஸ்ரீபரதாழ்வானுக்கு
மரம் அடியை— திருவடி நிலைகளை
வான்பணயம் வைத்து — மீண்டெழுந்தருளுவர் என்று மிகவும் நம்புகைக்கு அடகாக வைத்து

வானோர்— ராவணனால் நலிவுபட்ட தேவர்கள்
வாழ— அலைச்சலற்று வாழும்படியாக
போய்— சித்ரகூடத்தினின்றும் அவ்வருகே போய்
செரு உடைய—யுத்தம்செய்கைக்கு இட்டுப் பிறந்த
திசை— தக்ஷிணதிக்கிலே சென்று
கருமம் திருத்தி— ராவணாதிகளை நிரஸித்து விபீஷணாழ்வானை ராஜ்யாபிஷேகம் பண்ணிவைத்து
வந்து— பிராட்டியோடேகூட திருவயோத்யைக்கு எழுந்தருளி
உலகு— லோகத்தை
ஆண்ட— ஆண்டருளின
திரு மால்— ஸ்ரீயபதியாகிற
கோ— எம்பெருமானுக்கு
இல்— வாஸஸ்தானமாம்.

கோபுரங்களையும் திருமாளிகைகளையும்,கண்ணாலே பருகுவாரைப்போலே பார்த்து வாழ்ந்து கொண்டு வருகிறபடியைக் கண்டு, 'அல்லாதார்க்கும் இவர்களுக்கும் செயல் ஒத்திருக்க இவர்களை வாசிதோற்ற விருந்தபடியென்! என்று இருந்தேன்காணும்' என்று நஞ்சீயர் நம்பிள்ளைக்கு அருளிச்செய்தார்" என்று ப்ரஸித்தமிறே. ப்ராப்யபூமியி துள்ளவை யெல்லாம் விசேஷஜ்ஞானவர்களுக்கு போக்யமாயிறே யிருப்பது. ... ... ௩.

அ. நான்காம்பாட்டு. ஸ்ரீமத்த்வாரகையிலே # பதினாறுமாயிரவர்தேவிமார் பணி செய்யவிருந்தவன் வர்த்திக்கிற தேசமிதுவென்கிறார்.

மூ—பதினாறுமாயிரவர் தேவிமார் பணிசெய்யத் துவரையென்னு
மதிளுநாயகராகி வீற்றிருந்த மணவாளர் மன்னுகோயில்
புதுநாண்மலர்க் கமல மெம்பெருமான் பொன்வயிற்றிற் பூவேபோல்வான்
பொதுநாயகம்பாவித் திறுமாந்து பொற்றாய்க்கும் புனலரங்கமே. ௪.

பதவுரை.

துவரை என்னும் அதில்— ஸ்ரீத்வாரகை யென்கிற திருப்படை வீட்டிலே
பதினாறு ஆம் ஆயிரவர் தேவிமார் — கோபகந்யகைகளான பதினாறாயிரம் தேவிமாரானவர்கள்
பணி செய்ய— நித்யகைங்கர்யம் பண்ண
நாயகர் ஆகி— அவர்களுக்கு நாயகராய்க் கொண்டு
வீறு— தன்பெருமை தோற்ற
இருந்த— எழுந்தருளியிருந்த
மணவாளர்— மணவாளரானவர்
(அழகியமணவாளப் பெருமாளாய்க் கொண்டு)
மன்னு— நித்யவாஸம் பண்ணுகிற
கோ இல்— கோயிலாவது;
நாள்— அப்போதலர்ந்த
புது— செவ்வி குன்றாத
கமலம் மலர்— தாமரைப் பூவானது
எம்பெருமான்— எம்பெருமானுடைய
பொன்— ஸ்ப்ருஹணீயமான
வயிற்றில்— திருநாபியிலுள்ள
பூவே— பூவையே
போல்வான்— போன்றிருக்கைக்காக
பொது நாயகம் பாவித்து — ஸர்வ நிர்வாஹகத்வத்தை உடைத்தானதாக நினைத்து
இறுமாந்து— (அத்தாலே) கர்வித்து
பொன்— மற்றுண்டான தாமரைகளின் அழகை
சாய்க்கும்— தன்னிலிட நின்றுவ்வ
புனல்— நீர்வளப்பத்தையுடைய
அரங்கமே— திருவரங்கமேயாம்.

வ்யா. பதினாறுமாயிரவர்தேவிமார் பணிசெய்ய. நரகாஸுரன் சிறையிட்டுவைத்த ராஜகந் நிகைகளாய், அவனை நிரஸித்தவனந்தாம் அங்கு நின்றும் கொண்டுவந்து திருமணம் புணர்ந்தருளின பதினாறாயிரம் தேவிமாரானவர்கள் தங்களுடைய ப்ரேமாநுகுணமாகவும் ப்ராப்யாநுகுணமாகவும் நித்யபரிசர்யை பண்ண. துவரையென்னுமதில். ஸ்ரீமதுரையிலே எழுந்தருளியிருக்கச்செய்தே இங்குள்ளாரெல்லாரையும் அங்கே கொடுபோய்வைக்கத் திருவுள்ளம் பற்றி, ஸங்கல்பத்தாலே உண்டாக்கினதாகையாலே அத்யந்தவிலக்ஷணமாய், ஸ்ரீமத் த்வாரகையென்று ப்ரஸித்தமாயிருந்துள்ள திருப்படைவீட்டிலே. நாயகராகிவீற்றிருந்தமணவாளர். அவர்களுக்குத்தனித்தனியே "என்னையொழியவழியார், என்னையொழியவழியார்" என்னும்படி நாயகராய்க்கொண்டு, தம்முடைய வ்யாவ்ருத்தி தோற்ற எழுந்தருளியிருந்தமண

இப்படி ஸ்ரீநாதபகவான் ஸேவிக்கும்படியாகவும், குளிபுடையரெல்லார்க்கும் கண்ணாலே கண்டு ஆச்ரயிக்கைக்கும் அநுபவிக்கைக்கு முடலாகவும், "இடந்தோர்இடக்கை" என்கி றபடியே இடையமுதால்வந்த மிறுக்கம் தோற்றும்படியாகக் கண்வளர்ந்தருளினவனுடைய தேசம்.

பூமருவிப்புள்ளினங்கள். "நீர்ப்பூ நிலப்பூ மரத்திலொண்பூ" என்கிற பூக்களின் குளிர்த்தியாலும் மார்த்தவத்தாலும் பரிமளத்தாலும் மதுவாலுமுண்டான போக்யதையாலே விடமாட்டாதே பொருந்தி,அன்னங்கள் வண்டேன் முதலான பக்ஷிஸமூஹங்களானவை தங்களுடைய ஜாதிக்கு ஈஜூவான பெரியதிருவடியுடைய புகழை, அநுஸந்தானமாகப் பேசா நிற்கும்படியாய், அவற்றுக்கு போக்யமான புஷ்பங்கள் மிகவுமுண்டாகைக்கடியான ஜலஸம்ருத்தியை யுடைத்தாயிருக்கிற திருவரங்கமே. மேற்சொன்னபடியே ஸ்ரீநாதபகவானுக் குத்தன்னுடைய ஸர்வாதிகத்வத்தை ப்ரகாசிப்பிக்கைக்காக, கர்மாதிகளான வ்யக்திகள்தோ றும் அவன்வந்து ஸ்துதித்திறைஞ்ச பரம்பரையாவந்து நாலுமானவனும், பின்பு அவனுக் கும் பலனாலும் வேண்டுமுப்கொண்டு கண்வளர்ந்தருளினவனுடைய கோயில்- திருவரங்கம் என்றவாறாம். ... ... ... ... ... ... ௫.

அ. ஆறும்பாட்டு. த்ரௌபதியைக் குழல்முடிப்பித்து, பாண்டவர்களையே ராஜாக் களாக்கி, உத்தராதநயனையும் உஜ்ஜீவிப்பித்தவன் நித்யவாஸம் பண்ணுகிற தேச மிதுவென் கிறார்.

மூ.—மைத்துனன்மார் காதலியை மயிர்முடிப்பித் தவர்களையே மன்னராக்கி
உத்தரைதன் சிறுவனையு முய்யக்கொண்டவுயிராள னுறையுங்கோயில்
பத்தர்களும் பகவர்களும் பழமொழிவாய் முனிவர்களும் பரந்தநாடும்
சித்தர்களும் தொழுதிறைஞ்சத் திசைவிளக்காய் நிற்கின்ற திருவரங்கமே. ௬.

பதவுரை.

மைத்துனன்மார் — மைத்துனன்மாரான பாண்டவர்களுக்கு
காதலியை — அபிமதையான த்ரௌபதியை
மயிர் முடிப்பித்து — குழல் முடிப்பித்து
அவர்களையே — அவர்களையே
மன்னர் ஆக்கி — அரசாளவைத்து
உத்தரைதன் — அபிமந்யுவின் மனைவியான உத்தரையென்பவளுடைய
சிறுவனை — பிள்ளையாய், கரிக்கட்டையாய்க் கிடந்த பரிக்ஷித்தை
உய்யக்கொண்ட — திருவடிகளாலே ஸ்பர்சித்து, உயிர்பெற்றெழுந்திருக்கும்படி பண்ணினவனும்
உயிர் ஆளன் — எல்லா வுயிர்களுக்கும் நாதனானவன்
உறையும் — நித்யவாஸம்பண்ணுகிற
கோயில் — ஸ்தானம்.
பத்தர்களும் — பக்தர்களும்
பகவர்களும் — ஸந்யாஸிகளும்
பழமொழி — பழமொழியாயிருக்கின்ற வேதத்தை
வாய் — வாக்கிலேயுடையரான
முனிவர்களும் — ரிஷிகளும்
பரந்த — விஸ்தீர்ணமான
நாடும் — நாட்டிலுள்ளாரும்
சித்தர்களும் — ஸித்தபுருஷர்களும்
தொழுது — அஞ்ஜலிபண்ணி
இறைஞ்ச — ஸாஷ்டாங்கப்ரணாமம்பண்ணும்படி
திசை — எல்லாதிக்குகளுக்கும்
விளக்கு ஆய் நிற்கின்ற — விளக்காய் நிற்கிற
திரு அரங்கம் — அரங்கமாகிறது;

ஞ்ச கண்திருக்கும் இத்தப்பிறே. கலகிருக்கைபாகக் கொடுத்தென்றபடி. உகந்து இவனுக்கு இவ்விருப்பைக்கொடுத்து, இந்த்ரனுக்கு அவனிழந்த ராஜ்யத்தைக்கொடுத்து, "சாஜுகந் ஞானவனிமுடிந்ரப்பெற்றேனும்" என்றப்பீதனுஜன். எம்மான்கோயில். என்னுடைய ஸ்வாமி யானவன் அகப்ப்ரியனான ஈனவர்களுக்குத் தன்னைக்கொடுக்கைக்காக நித்யவாஸம் பண்ணுகிறகோயில்.

எழிப்புடையமணிவரைமேல். அதிப்ரகாசமாயிருப்பதொரு நீலரத்ந பர்வதத்தின்மேல். இளையிறெழுந்தாற்போல். பாலாதித்யர்கள் உதித்தாற்போலே. அரவிணையின்வாய் சிறப்புடைய பணங்கள்மிசைச் செழுமணிகள் விட்டெறிக்கும். திருவனந்தாழ்வானிடத்தில் அழகிய பணங்களின்மேலுண்டான பெரிய ரத்னங்களானவை மிகவும் ப்ரகாசியாநிற்கும். இத்தால்-திருவரவையின்மேலே, * பச்சைமாமலைபோலே யிருக்கும் திருமேனியோடே பள்ளிகொண்டருளுகிற பெரியபெருமாளை யநுபவிப்பார்க்கு அத்திருவனந்தாழ்வானுடைய ஒளிதானே ப்ரகாசமாயிருக்கும்படி சொல்லுகிறது. திருவரங்கமே. கீழ்ச்சொன்ன விதுவேயாய்த்து இந்தேசத்துக்குச் சிறப்பு. ... ... ... ... ... ... ... ... ௭

அ. வட்டாம்பாட்டு. அதிக்ரூரனான ஹிரண்யனை யடர்த்துப் பிடித்து நிரஸித்தவன் வர்த்திக்கிறதேச மிதுவென்கிறார்.

மூ.—உரம்பற்றியிரணியனை யுகிர்நுதியா லொள்ளிய மார்புறைக்கவூன்றிச்
சிரம்பற்றி முடியிடியக் கண்பிதுங்க வாயலரத் தெழித்தான் கோயில்
உரம்பெற்ற மலர்க்கமல முலகளந்தசேவடிபோ லுயர்ந்துகாட்ட
வரம்புற்ற கதிர்ச்செந்நெல்தாள்சாய்த்துத் தலைவணக்குந் தண்ணரங்கமே. அ

பதவுரை.

உரம் பெற்ற— செழிப்பை யுடைத்தான
மலர் கமலம்— தாமரைப் பூவானது
உலகு அளந்த — திருவுலகளந்தருளின போது உயரவெடுத்த
சே அடிபோல்— திருவடிகளைப்போலே
உயர்ந்து காட்ட—மிக வளர்ந்துப்ரகாசிக்க
வரம்பு உற்ற— வரம்பு சேர்ந்து விளைந்து நிற்பதாய்
கதிர்— கதிரையுடைத்தான
செந்நெல்— செந்நெற்களானவை
தாள் சாய்த்து— தாள்களை நீட்டி
தலை வணக்கும் — தலைவணங்காநின்றுள்ள
தண்— குளிர்ந்த
அரங்கம்— திருவரங்கமானது;
உரம் பற்றி— தேவர்களால் பெற்ற வரபலத்தை யுடைய
இரணியனை— ஹிரண்யனை
உகிர் நுதியால்-திருவுகிர்களின் கூர்மையால்
ஒள்ளிய மார்பு — அவனுடைய அழகிய மார்பிலே
உறைக்க— மறுபாடுருவும் படியாக
ஊன்றி— ஊன்றி
முடி— கிரீடமானது
இடிய— பொடிபடும்படியாகவும்
கண்— கண்களானவை
பிதுங்க— பிதுங்கும்படியாகவும்
வாய் அலர— வாய் அலறும்படியாகவும்
சிரம் பற்றி— தலையைப்பிடித்து நெரித்து
தெழித்தான்— ஆரவாரம் செய்தவன் வர்த்திக்கிற
கோயில்— கோயில்.

வ்யா. உரம்பற்றி இரணியனை. தேவர்கள்கொடுத்த வரபலங்களையும் தன்னுடைய புஜபலத்தையும் நினைத்து, "ஒருவராலும் அழிவில்லை" என்று, வரங்கொடுத்த தேவர்களோடு அல்லாதாரோடு வாசியற எல்லாரையும் நெருக்கித்தன்னிலேயாக்கி, "தன்னுடைய நாமமேயொழிய பகவந்நாமம் அத்தேசத்தில் நடக்கவொண்ணாது" என்று ஆஜ்ஞாபித்து, திருநாமம் சொன்னதுவே ஹேதுவாக, * பள்ளியிலோதிவந்த தன்சிறுவனை ப்ரஹ்லாதனை வாசாமகோசரமான பீடைகளைப்பண்ணின ஹிரண்யன், "பிள்ளாய், நீசொல்லுகிறவன் எங்கேயுளன்?" என்று கேட்டபோது, "எங்குமுளன்" என்று ப்ரஹ்லாதன்சொல்ல, "இங்குமுளனோ" என்று * தானெனத்திட்டு தூணிலேயடிக்க, "ஆங்கேயவனைச்சீறிட்டு வாளுகிர்ச் சிங்கவுருவாய்" என்கிறபடியே - தேவர்கள் கொடுத்த வரத்தில் அகப்படாததொரு வடிவைக் கொண்டு, அத்தூணைப் பிளந்துகொண்டு புறப்பட்டு, "அடித்தகை பிடித்தபெருமான்" என்னும்படி அத்தூணில் அடித்தகை வாங்குவதற்கு முன்னே பலத்தாலேவந்து அமுக்கிப் பிடித்து. உகிர்நுதியால். "அந்த சஸ்த்ரங்கள் ஒன்றாலும் படக்கடவேனல்லேன்" என்று வரங்கொண்டவனாகையாலே, அவற்றால் நிரஸிக்கப்போகாமையால் திருவாழிதொடக்கமானவையும் அழகுக்குடலாயிருக்கவிட, திருவுகிரை ஆயுதமாகக்கொண்டு அதினுடைய கூர்மையாலே. ஒள்ளியமார்புறைக்கவூன்றி. ஆபரணத்தானைகளாலே அலங்கரித்து, அவன் பலகாலும்பார்த்து அநுபவித்துக் கொண்டிருந்த அழகியமார்விலே மறுபாடுருவும்படியாக ஊன்றி. சிரமித்யாதி. அபிஷேகமானது பொடிபடும்படியாகவும், கண்கள் பிதுங்கும்படியாகவும், வேதனைகள் பொறுமல் வாய் அலறும்படியாகவும், தலையைப்பிடித்து செரித்து, "ப்ரஹ்லாதனுடைய விரோதி போகப்பெற்றோம்" என்னும் ப்ரீதியாலே ‡ ஆர்ப்பரவம் செய்தவன் இங்ஙனொத்த விரோதிகளைப்போக்கி ஆச்ரிதரை ரக்ஷிக்கைக்காக நித்யவாஸம் பண்ணுகிற தேசம்.

உரம்பெற்றவித்யாதி. சேற்றுவளப்பத்தாலே உரம்பெற்றிருக்கிற தாமரைப்பூவானது திருவுலகளந்தருளினபோது மேலெடுத்த திருவடிகளைப்போலே ஓங்கிவளர்ந்து ப்ரகாசியா நிற்க. வரம்புற்றவித்யாதி. அப்போது, (க) "[illegible]" என்கிறபடியே தேவர்கள்முதலானவர்கள் இரண்டு கால்நீட்டித் தலைவணங்கித் தண்டனிட்டுக் கிடந்தாற்போலே, வரம்புசேர்ந்து விளைந்திருக்கிற செந்நெற்கதிர்களானவை தாள்களைநீட்டித் தலைவணங்கும் சிறப்பையும், எவர்க்கும் தாபஹாரமான குளிர்த்தியையு முடைத்தான திருவரங்கமே. ... ... ... ... ... ... ... ... ... அ

அ. ஒன்பதாம்பாட்டு. தசாவதாரமாய்க்கொண்டு ஏகாந்தஸேவை பண்ணுமவன் நித்யவாஸம்பண்ணுகிற தேசமிதுவென்கிறார்.

மூ.—தேவுடைய மீனமாய் ஆமையாய் ஏனமாய் அரியாய்க் குறளாய்
மூவுருவில் இராமனாய்க் கண்ணனாய்க் கற்கியாய் முடிப்பான் கோயில்
சேவலொடு பெடையன்னஞ் செங்கமலமலரேறி யூசலாடிப்
பூவணைமேல் துதைந்தெழு செம்பொடியாடி விளையாடும் புனலரங்கமே. ௯

‡ ஆர்ப்பரவம்- ஆரவாரம். (க) "[illegible]"

" தொழுங்காதல் களிறளிப்பான் - புழுங்காதலை நுதிய சக்கரநல் வலத்தையாய் - தோன்றி னேய " என்று அறிவுடையார் சுடுபிம்படியிறே அப்பேசத்துக்கு தோன்றினபடி. கரு துங்கோயில், பரமபதம் க்ஷீராப்தி தொடக்கமான ஸ்தலங்கள் எல்லாவற்றிலுங்காட்டில், ஆச்ரிதரை அநுபவிப்பிக்கைக்கும் ரக்ஷிக்கைக்குமுடலான ஸ்தலம் என்று விரும்பி வர்த்திக்கும் கோயில். தென்னும் வடநாடும் தொழநின்ற. த்ராவிடபாஷாப்ரதாநமான தென்னாடும், ஸம் ஸ்க்ருத பாஷாப்ரதாநமான வடநாடும், இருந்ததேகுடியாகத் தொழும்படிநின்ற. திருவரங் கத்திருப்பதியின்மேல். திருவரங்கமென்கிற திருநாமத்தையுடைத்தான திருப்பதிவிஷயமாக.

மெய்ந்நாவன். மெய்யேசொல்லும் நாவையுடையவன். அஸத்யமென்பது ஒன்றும்கலசாத நாவையுடையவனென்கை; " பொய்ம்மொழி யொன்றில்லாத மெய்ம்மையாளன் " என்னுமாபோலே. இத்தால்-பகவத்வைபவம் தேசவைபவம் இவற்றிலிச்செய்தவற்றில் ஒன்றிலும் ஒருபொய் யில்லாமை சொல்லுகிறது. மெய்யடியான். அநந்யப்ரயோஜநனான வடியான். " அடியான் " என்று பேரிட்டு ப்ரயோஜநத்துக்கு மடிபேற்குமவர்கள் போலன்றி; சேஷத்வம் ஸ்வரூபமானால் சேஷிக்கு அதிசயத்தை விளைக்குமதொழிய, ஸ்வார்த்தமாக்கக் கோராதிறே. அங்ஙனன்றிக்கே, சேஷிக்கு மங்களத்தை ஆசாஸித்துக்கொண்டு திரியும் ஸ்வபாவனாகையாலே, தம்மை " மெய்யடியான் " என்கிறார். இவைபிரண்டும் - தாமருளிச்செய்த வசனங்களை அப்யஸிப்பார்க்கு ஆப்திக்குடலாக வருளிச்செய்தாராய்த்து. விட்டுசித்தன். * அரவத்தமளியிடியே - ஸர்வேச்வரனைத் திருவுள்ளத்திலே வைத்துக்கொண்டிருக்கிறவர். விரித்த தமிழுரைக்கவல்லார். விஸ்தரமான ப்ரதிபாதித்த த்ராவிடரூபமான இத்திருமொழியைச் சொல்ல வல்லவர்கள். எஞ்ஞான்றுமெத்தாதி. எல்லாக்காலத்திலும், எனக்கு சேஷியான ஸ்ரீவைகுண்டநாதனுடைய, ஒன்றுக்கொன்றொப்பான திருவடிகளின், கீழே விச்லேஷமறதாய், * அடியார்கள் குழாங்களோடே தாங்களிருக்கப்பெறுவர். ௧௧.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.

---

அடிவாரு—மரவடி தன் கருள் பதினறு ஆமை யைத்துனைலி
குறளுநந் தேவுசேரு கைக்நாகத் துப்பு

———(o)———

ஆட திருமொழி-௩௬-க்கு, பாட்டு-௪௨௦.

---

நான்காம்பத்து- பத்தாந்திருமொழி-துப்புடையாரை, ப்ரவேசம்.

அ. இற் இரண்டு திருமொழியிலே - பெரியபெருமாளுடைய திவ்ய வைபவத்தையும், பெரியகோயிலான திருவரங்கத் திருப்பதியினுடைய வைபவத்தையும், பெரிய அபி நிவேசத்தோடே பேசி யநுபவித்து ப்ரீதரானார்; " தன்னடியார் ". இத்பாதியில் சொன்னபடியே - புருஷகாரபூதையான பிராட்டிதானே சிதருவைக்கிலும் அவளோடே மறுதலித்து ஆச்ரிதரக்ஷணம்பண்ணும் வாத்ஸல்யாதிசய யுக்தராய், " இருளகற்று மெறிகதிரோன் மண்டலத்தூடேற்றி " இத்பாதிப்படியே - அநந்யப்ரயோஜநராய், திருவடிகளை ஆச்ரயித்த

லர்களை அர்ச்சிராதிமார்க்கத்தாலே அப்ராக்ருதமான பரமபதத்திலேகொடுபோய் * அருள்கொடுத்திட்டு அடிமைகொள்ளும் ஸ்வபாவரான பெரியபெருமாளுடைய திவ்ய குணத்தை யநுஸந்தித்தவராகையாலே, அவர்க்கும் இருந்தின சேதநரை இங்குநின்றும் கொடுபோய் அடிமைகொள்ளுகை திருவுள்ளமாகையாலே, " எம்இனி அங்கேபோய் அடிமைசெய்யவேணும் " என்னும் அபேக்ஷைபிறந்து, அதுக்கு தேஹஸம்பந்தமற்றுப்போக வேண்டும்படியை அநுஸந்தித்து, இத்தப்ஸங்கத்திலே சரீர விச்லேஷஸமயத்தில் யம்கிங்கரர்களானவர்களுக்கெல்லாம் யமபடரால்வரும் நலிவையநித்து, " அது நமக்கு வாராதொழியும்போது ஸர்வேச்வரனானவனே போக்கித் தந்தருளவேணும் " என்று அத்யவஸித்து, " அழுதன்னை எற்கவே அவன் திருவடிகளிலே விழுந்து அர்த்தித்துச் செய்வித்துக்கொள்ளவோம் " என்று ஒருப்பட்டு, சரமதசையில் கர்மாநுகுணமாக யமபடர்வந்து என்னை நலியும்போது, அந்த க்லேசத்தாலே தேவரீருடைய திருவடிகளை ஒருபடியாலும் நினைக்கவும் ஒன்று சொல்லவும் க்ஷமனல்லேன் என்று அத்தைப்பற்ற அப்போதைக்கு இப்போதே சொல்லிவைத்தேன்; ஆனபின்பு, அக்காலத்தில் அவர்கள் என்னைநலியாதபடி தேவரீர் ரக்ஷித்தருளவேணும் என்று பெரியபெருமாள் திருவடிகளிலே சரணம்புக்கு விண்ணப்பம்செய்து செல்லுகிறார் - இத்திருமொழியில்.

இதுதானிருந்தபடியென்?;- (க) " தவைய மாமகம் பதிஷ்டம்மாநுஷீ " என்று சாஸ்த்ரம் சொல்லுகையாலும், "வேண்டாமையமன்றும் செல்லாமை விலைப்பெறுவார்கள்" என்கிற பகவதுக்தியாலும், " உன்றமர்க்கென்றும் நமன்றமர் கள்ளர்போல் " என்று அபியுக்தர் சொல்லுகையாலும், (உ) " பரிஹரமதுஸூதந ப்ரபந்நாந் " என்று யமன்றனே சொல்லுகையாலும், பாகவதரானவர்களுக்கு யமவச்யதைவரக்கூடாதென்னுமிடம் ப்ரஸித்தமாயிருக்க, " சரமதசையிலே யமபடர்வந்து நலிவர்கள் " என்று பயப்பட்டுத் திருவடிகளிலே சரணம்புகுந்து, " அத்தசையிலே என்னைரக்ஷித்தருளவேணும் " என்று இவர் அர்த்திக்கிறவிது, மேற்சொன்ன வசநங்களோடு விருத்தமன்றோ வென்னில்; ஆழ்வார்கள் தாங்கள், * மயர்வறமதிநலமருளப்பெற்று அவனை உள்ளபடியறிந்து அநுபவிக்கச்செய்தே ஓரோ தசைகளிலே வந்தவாறே, அநாதிகாலம் ஸம்ஸாரியாய்க்கொண்டு போந்த கர்மபலத்தையும், அந்த கர்மாநுகுணமாகவே நிர்வஹித்துக்கொண்டு போந்தவனுடைய பந்தமோக்ஷப்ரத நிர்வாஹகனுமிருக்கிற ஸர்வேச்வரனுடைய ஸ்வாதந்த்ர்ய பலத்தையு மநுஸந்தித்து, " நிரங்குச ஸ்வதந்த்ரனானவன் இன்னம் நம்மை ஸம்ஸரிப்பிக்கில் செய்வதென் " என்று, " மக்கள்தோற்றக்குழி தோற்றுவிப்பாய் கொல் " என்றும், " இன்னம் ஆற்றங்கரை வாழ்மரம்போல் அஞ்சுகின்றேன் " என்றும், " வைத்த சிந்தை வாங்குவித்து நீங்குவிக்க நீயினம் மெய்த்தன்வல்லை உய்த்துநின்மயக்கினில் மயக்கலென்னைமாயனே " என்றும் அவனைக்குறித்து விண்ணப்பம் செய்யும் ப்ரகாரத்திலே; இவரும், ஸர்வேச்வரஸ்வாதந்த்ர்யத்தையும், அநாதிகாலம் அவன் திருவடிகளைக் கிட்டாதபடி அகலவடித்த கர்மபலத்தையும் அநுஸந்தித்து, " ஸ்வதந்த்ரனானவன் நம்முடைய கர்மாநுகுணமாக விட்டு உபேக்ஷித்திருக்குமாகில், முன்புபோலே யமபடரால்வரும் நலிவு நமக்குவரில் செய்வதென் " என்று அஞ்சி, அவன் திருவடிகளிலே சரணம் புகுந்து; அத்தசையில் என்

(க) " நகலுபாகவதாயமவிஷயம்கச்சந்தி " (உ) " பரிஹரமதுஸூதநப்ரபந்நாந் "

பதவுரை.

| | |
|---|---|
| குன்று— கோவர்த்தநபர்வதத்தை | அம்— விலக்ஷணமான |
| எடுத்து— குடையாக எடுத்து | சோதி— தேஜஸ்ஸையுடைய திவ்யமங்க ளவிக்ரஹத்தை |
| ஆநிரை— பசுக்களின் திரளை | மறந்தறியேன்— ஒருகாலும்மறந்ததில்லை; |
| காத்த— ரக்ஷித்தருளின் | நன்றும் கொடிய — மிகவும்கொடியரான |
| ஆயா— ஆயனும் | நமன் தமர்கள்— யமபடரானவர்கள் |
| கோ நிரை— பசுநிரையை | என்னை— என்னை |
| மேய்த்தவனே— மேய்த்தவனும் | நலிந்து— நிம்நித்து |
| எம்மானே— எனக்குஸ்வாமியானவனும் ஆனந்தாவஸ்னைப்பள்ளியானே!-; | வலிந்து— பலாத்கரித்து |
| அன்று முதல்— உனக்குப்பல்லாண்டுபாடு மவனுக்கிக்கொண்டான்தொடங்கி | பற்றும்போது— பிடிக்கும்காலமான |
| இன்று அறுதியா— இன்றளவாக | அன்று— அப்போது |
| ஆதி—ஸர்வகாரணபூதனான உன்னுடைய | அங்கு— அத்தசையிலே நீ என்னைக்காக்கவேண்டும். |

வயா. ஒன்பதாம்பாட்டு. குன்றித்யாதி. இந்த்ரன் பசிக்கோபத்தாலே கல்வர்ஷத்தை வர்ஷித்தபோது, கின்றதொருமலையைக் குடையாகவெடுத்து, அந்த வர்ஷாபத்தில் நோவுபடாதபடி பசுநிரையை ரக்ஷித்த ஆயனானவனே. இதுதான், கோபகோபீஜநங்களை ரக்ஷித்ததற்கு முபலக்ஷணம். ஆனால் அவர்கள்தன்னைச் சொல்லாதே, "ஆநிரைகாத்த ஆயா" என்று இத்தைச்சொல்லுவானென்னென்னில்; எல்லாவற்றிலும் ப்ரதாந ரக்ஷ்யவர்க்கம் இவையேயாகத் திருவுள்ளம்பற்றியிருக்கையாலே. ஆயா: *ஆயனாயன்றுகுன்ற மொன்றெடுத்தான் அரங்கமாநகரமர்ந்தானிறே. கோநிரைமேய்த்தவனே. ஆபத்தசையில் ரக்ஷித்தவளவன்றிக்கே, அவதாரத்தின் மெய்ப்பாட்டுக்கீடாக அல்லாத இடையரோபாதி கையிலே கோலெடுத்துப் பசுநிரைமேய்த்தவனே. "இலத்திலும் பசுநிரைமேய்ப்புவத்தி" என்று பரமபதத்திலிருப்பிலுங்காட்டில் பசுநிரைமேய்க்க உகந்திறேயவதரித்தது. எம்மானே. இந்த குணசேஷ்டிதங்களாலே என்னை எழுதிக்கொண்டவனே. "அம்மானே" என்று பாடமாகில், ஸர்வஸ்வாமியானவனே என்று பொருளாகக்கடவது. அப்போது, கீழ்ச்சொன்ன ரக்ஷணத்துக்கடியான ப்ராப்தியைச் சொல்லுகிறது. அன்றுமுதல். *குலங்கத்தன் கிடந்தவன்றுமுதலென்னுதல்; திருப்பல்லாண்டுபாட ஸ்வீகரித்த வன்றுமுதலென்னுதல். இன்றறுதியா. இன்றளவாக. ஆதியஞ்சோதி மறந்தறியேன். ஸர்வகாரணமாய் விலக்ஷணதேஜோரூபமான உன்னுடைய விக்ரஹத்தை மறந்தறியேனென்னுதல்; ஸ்வகாரணபூதனான உன்னுடைய, விலக்ஷணமான தேஜஸ்ஸையுடைய விக்ரஹத்தை மறந்தறியேனென்னுதல். நன்றுங்கொடியநமன்றமர்கள். மிகவும் கொடிய யமபடரானவர்கள். "நன்றும்" என்றது- மிகவும் என்றபடி. நலிந்துவலிந்தென்னைப் பற்றும்போது. நலிந்துகொண்டு பலாத்கரித்து என்னைப் பிடிக்கும்போது. அன்றங்குநீ என்னைக் காக்கவேண்டும். அவர்கள் ஈஸியுங்காலத்திலே, அவ்

பழிப்பற்ற நீலமணிபோலேயிருக்கிற வடிவழகை யுடையவனுக்கு, "மணிவண்ணா வுன் சேவடி செவ்வி திருக்காப்பு" என்று எல்லாரும் மங்களாசாஸநம் பண்ணுமவர்கள் தாங்களாவார். இவ்விருந்த நாளும் பெரியபெருமாள் திருவடிகளிலே மங்களாசாஸநம் பண்ணிக் கொண்டிருந்து, சரீராவஸாநத்தில் பரமபதத்திலேபோய் நித்யஸூரிகள் திரளிலேபுகுந்து "சூழ்ந்திருந்தேத்துவர் பல்லாண்டே" என்கிறபடியே அங்கே பொருந்தருளியிருக்கிற விருப்பை ப்ரதிபாதித்து, காலத்ரய மூன்றிலும் மங்களாசாஸநம் பண்ணிக்கொண்டிருக்கப் பெறுவரென்கை. ... ... ... ... ... ... ௰,

பெரியஜீயர் திருவடிகளே சரணம்.

அடிவரவு.— துப்புச் சாயிடம் எல்லை ஒற்றைப் பையர தன்னனை
செஞ்சொல் கனோது குன்று மாய வாக்கு.

ஆக திருமொழி-௪௰-க்கு, பாட்டு-௪௱௰.

# ஐந்தாம்பத்து.

(௦)

கீழில் திருமொழியிலே— "சொல்லலாம்போதே யுன்நாமமெல்லாம் சொல்லினேன்" என்று திருநாமத்தின் போக்யதையை ப்ரதிபாதித்து, "இத்தை அநாதிகாலம் இழக்கைக்கு அடியென்" என்று நிரூபித்தவாறே, அதுக்கு ஹேது, "இதரவிஷயங்களிலே 'ஆவியே அமுதே' என்று நினைகையாலே பிறந்தது" என்று வெறுத்து, இப்போது "ஆவியையாக்கை மாலை" என்றும், "ஆவியேயமுதே யென்றனுருகினேய வென்றாய்" என்றும், தப்பைப் பொறுத்தருளவேணும் என்று, பெரியபெருமாள் போக்யதையிலே தம்முடைய ஸாத்ரஸ்யமும் மேல்விழும்படியைச் சொல்லுகிறது. ... ... ... ... ௧

மூ.— வாக்குத்தூய்மை யிலாமையினாலே மாதவாவுன்னை வாய்க்கொள்ளமாட்டேன்
நாக்குநின்னையல்லா லறியாது நானதஞ்சுவ னென்வசமன்று
மூர்க்குப்பேசுகின்றானிவனென்று முனிவாயேலுமென் னாவினுக்காற்றேன்
காக்கைவாயிலுங் கட்டுரைகொள்வர் காரணா கருளக்கொடியானே. ௧.

பதவுரை.

மாதவா— ஸ்ரீய:பதியானவனே!
உன்னை— உன்னை
தூய்மை—ஸ்ரீதாத்ம்யமுண்டாக்கபரிசுத்தி
வாக்கு— என் வாக்குக்கு
இலாமையினாலே— இல்லாமையாலே
வாய்க்கொள்ளமாட்டேன் — உன்னைஸ்தோத்ரம் பண்ண சக்தியற்றவனாயிராநின்றேன்;
நாக்கு— என்னுடைய நாக்கானது
நின்னை அல்லால்—உன்னை அல்லது
அறியாது — வாய்க்கொள்ளவறியாது;

னேற்றம். அவர்களுக்கும் இவரையே பெறும்படியிறே இவர் இருந்தபடி. ஆக, "'எம்மனே, என்குலதெய்வமே, என்னுடைய நாயகனே' என்கிற இம்மூன்றாலும் - ஜ்ஞாநவிரோதியும், ஆச்ரயணவிரோதியும், போகவிரோதியும் போனபடி." என்று ஆளவந்தார். "தேஹாத்மாபிமாநமும், அந்யசேஷத்வமும், ஸ்வஸ்வாதந்த்ர்யமும் கழிந்தபடி" என்று உடையவர். உபேயமும், உபாயமும், பரதேவதையும் என்னுமாம். நின்னுளேனாய் - உன் னபிமாநத்திலே அந்தர்ப்பூதனாய். பெற்றனமை - பெற்ற ப்ரயோஜநம். இவ்வுலகினில் - இவ்வைச்வர்யத்தில். ஆர்பெறுவார் - நித்யர்க்கும் கிடைக்குமோவிது. ["விண்ணுளார் பெருமான்" இத்யாதி.] அவன்றனக்கும் கிடைக்குமோ!.

நம்பன்போல வீழ்த்தமுக்கும் நட்டோடவேலாம். இவனுக்குத் தோற்றுதபடி வந்து, இவனைப் போகவும் திரியவும் வொட்டாதபடி அமுக்கும் பூதப்ரேத பிசாசங்கள் போலேயாய்த்து கர்மங்கள் இவனை அபிபவிப்பது. * இன்னமுதெனத்தோன்றி முடிக்கும் விஷயங்கள், இவை சில பாபவிசேஷங்கள், தோன்றாமல் வந்து விழவிட்டுப் பாரமேற்றினாற்போலே அமுக்குமாய்த்து. நட்டோடைமேலும் - லோகத்திலுள்ள பாபங்களெல்லாம். சாஸ்த்ரங்களில் சொல்லுகிற பாபங்களெல்லாம். (க) "[illegible]" இத்யாதி. நம்மேலுறே - மூச்சவிடாதே, போகத்தொடர்ந்திற்று. "வஞ்சித்துத் தமோற்றுத." கைவிட்டே. கிறைவெட்டிவிட்ட தேன்பாலைப்போலே. ஓடி. "கைக்கொண்டு நிற்கின்ற நோய்காள் - உப்பப்போமின்" என்னவும் வேண்டிற்றில்லை; யுத்தத்திலே கெட்டவன் கொலைக்கஞ்சி ஓடினாப்போலே. ஞாறுகள்பாய்ந்தனவே. "காடேற வொளுக்கித்தும் கண்டிலமால்." "'ஞாறு' என்கிறது - அம்பரிகளை" என்று திருக்கோட்டியூர் நம்பி அருளிச்செய்வர். * பரிசேர்பற்றையிறே. ஞாறென்பது - செடியாய், வைஸாத்யத்தைச் சொல்லுகிறது. "முற்றவிம்மூவுலகும் பெருந்தூறாய்" என்னக்கடவதிறே. "கொடுவினைத்தூறு." க.

அ. என்காம்பாட்டு. கடல். "இறவுசெய்யும் பாவக்காடு தீக்கொளீஇ வேகின்றதால்" என்று - தம்முடைய பாபம்போனபடி சொன்னார்; "நாட்டின பாவமெலாம்" என்று - தாமிருந்த தேசத்திலுள்ளார் பாபங்களும் போனபடி சொன்னார். தமக்கு யம வச்யதையும் போனபடி சொன்னார். இதில் - தம்முடைய ஆஜ்ஞைக்கு இடமெல்லாம் யமவச்யதை புகுரப்பெறுதென்கிறார்.

மூ.—கடல்கடைந்தமுதங்கொண்டு கலசத்தைநிறைத்தாற்போல்
உடலுருகிவாய்திறந்து மடுத்துன்னை நிறைத்துக்கொண்டேன்
கொடுமைசெய்யுங் கூற்றமுமென் கோலாடிகுறுகப்பெறா
தடவரைத்தோட் சக்கரபாணீ சார்ங்கவிற்சேவகனே. ௯.

பதவுரை.

| | |
|---|---|
| தடவரை— பெரியமலைபோன்ற | வில்— வில்லையுடையனுன |
| தோள்— திருத்தோள்களையுடையனும் | சேவகனே— சேவகனே! |
| சக்கரபாணீ— திருவாழியாழ்வானைத் திருக் கையிலே யுடையனும் | கடல்— திருப்பாற்கடலை |
| | கடைந்து—(மந்தரபர்வதத்தாலே) கடைந்து |
| சார்ங்கம்— ஸ்ரீசார்ங்கமென்கிற | அமுதம் கொண்டு— அம்ருதத்தை வாங்கி |

(க) "[illegible]"

கோலெமைசெய்யுங் கூற்றமும். உக்ரதண்டத்தை மாறுமே புதிப்பிக்கும் யமனும். அக்னி ருத்ரன் யமன் என்னும் மூவரிறே ஸம்ஹாரகர்த்தாக்கள். (க)"ருத்ரோ வா ஏஷ யதக்நி:" என்னக்கடவதிறே. யமனையொழிந்த மற்றை இருவர்க்கும் காதாசித்கமிறே ஹிம்ஸை; யமனுக்கு நித்யம். (உ) "பாதிக்கைக்கு சக்தனிவன்" என்றிறே இவனையிட்டது. ஈவையத்தையும், மனிசரையும் பொய்யென்றிறே காலையுமுடனே படைத்தது. வையமும் மனிசரும் பொய்யாகில் இவனே மெய்யனாயிருக்கிறான் என்னில்; [உடனே படைத்தாய்] இவற்றுடனே அவனையும் நசிப்பிக்குமென்று தோற்றுகிறது. அவனைப்பொய்யனும்படி பண்ணிற்று இவன் பாபமிறே. சிறைக்கூடத்திலே பிறந்து சரமாசைப்போலே, ஸ்ருஷ்டி தொடங்கி ஸம்ஹாரமளவாக ஈசாதுபவமிறே பண்ணுவது. என்கொலாடி குறுகப்பெறு. என்னுடைய ஆஜ்ஞை நடக்குமிடமெல்லாம் புகுரப்பெறுது. குறுகப்பெறு. புகுந்து போனையன்றிக்கே, அருகும் வரப்பெறுது.

காதாசித்கமாகப் புகுந்தாகில் செய்வதென்னென்ன; அது எண்ணவே கேட்டது உன்னையிலே ஆயுதமிருக்கச் சடவரைபித்யாதி. தாசர்தாலை வெட்டம்பாலே புகுட்டும்; இட்ட தின்றவர்களைக் கையில் திருவாழியாலே கொல்லும். ஆழ்வாரையேவியும், அம்பையேவியுமிறே முடிப்பது. தடவரைத்தோள். பெரிய மலைபோலேயுள்ள தோள். மலைபோலே பெரியதோளென்னவுமாம். தடம்- பெருமை. தடம்போலேயும், வரைபோலேயு மென்னவுமாம். தடம்- வைமுத்ரம். ... ... ... ... ௭.

அ. இக்தாம்பாட்டு. போன். இதே- அம்ருத த்ருஷ்டாந்தமிட்டார்; இதிலே பொன்னை த்ருஷ்டாந்தமாக இடுகிறார். ஈழிப்பாட்டிலே போக்யதை சொன்னார்; இதிலே பாவநத்வஞ் சொல்லுகிறார். "மடுத்துண்ண நிறைத்துக்கொண்டேன்" என்று அதினுடைய ஸாக்ஷ்யதையைச் சொல்லுகிறார். ஈஅதிகநாப்பரும்பர், அகாதமானகடலில் அம்ருதத்ருஷ்டாந்தமிட்டார். ஈவாக்குத்தம்மையிப்படியே அபோக்யதானுக்கானம்பண்ணி இவ்வாகப்புக; "ஸமிருவரும் ஏகதத்வம் என்னும்படி கலந்தபின்பு அதுவென்?" என்று ஈச்வரன் ஸமாதானம் பண்ண; ஸமாதிதராய், செய்த உபகாரத்துக்குத் தோற்று ஸ்தோத்ரரூபத்தாலே ஆத்மஸமர்ப்பணம் பண்ணுகிறார்.

மூ.—பொன்னைக்கொண்டுரைகல்மீதே நிறமெழுவுரைத்தாற்போல்
உன்னைக்கொண்டென் னாவகம்பால் மாற்றின்றியுரைத்துக்கொண்டேன்
உன்னைக்கொண்டென்னுள்வைத்தே னென்னையு முன்னிலிட்டேன்
என்னப்பா வென்னிருடீகேசா வென்னுயிர் காவலனே. ௬.

பதவுரை.

| | |
|---|---|
| என் அப்பா—எனக்குத் தந்தையானவனும் | காவலனே— அப்ரார்த்திதமாகரக்ஷிக்கும் [மவனே! |
| என் இருடீகேசா—என் இந்த்ரியங்களை நியமிக்குமவனும் | பொன்னை— ஸுவர்ணத்தை [கொண்டு |
| என் உயிர்— என்னுடைய ஆத்மாவை | நிறம் எழ— நிறம் பார்க்க |
| | உரைகல் மீது கொண்டு— உரைகல்லிலே |

(க) "ருத்ரோ வா ஏஷ யதக்நி:" (உ) ஸாபிக்கைக்கு.

